

துருவாச மகாரிஷிக்கு பஞ்சபாண்டவர் போஜன மளித்தல்.

ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ண சகாயம்

# பஞ்சபாண்டவர் வனவாசம்

விநாயகர் தோத்திரம்

ஐந்துகரத்தோனே அரனூர் திருமகனே
அறுமுகற்குமூத்தவரே ஆனைமுகப்பிள்ளையாரே
தொந்திவிநாயகரே தொப்பைக்கணபதியே
பானைவயிற்றோனே பழமேந்துங்கையோனே
மூலமுதலேநீர் முன்னடக்கவேண்டுமையா

சரஸ்வதி தோத்திரம்

நாவிற்சரஸ்வதியே நான்முகனார்தேவியரே
சதுர்முகனார்தேவியரே தாயேசரஸ்வதியே
வாக்குவரமருள்வாய் மறையவனார்தேவியரே
இந்தகதைசொல்வதற்கு என்கருத்தில்வாருமம்மா
தப்புகளில்லாமல் தாயேநீவாக்கருள்வாய்
பஞ்சவர்கள்தன்கதைக்கு பார்வதியேமுன்னடவாய்
குற்றமதுவாருமல் கொண்டணைத்துக்காருமம்மா

கதையின் வரலாறு

## முதலாவது, சூரியவனம்

காரானைக்கண்ணே கணபதியேமுன்னடவாய்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போனபின்பு
தேசத்தழகுமன்னன் துரியோதிரப்பெருமான்
வனவாசம்போனபின்பு மகாராஜனென்னசெய்தான்
அம்மான்சகுனியை அருகாகதானழைத்து
மாமன்சகுனியின் மதிமுகத்தைதான்பார்த்து
மாநாகங்கொண்டதொரு மகாராஜனேதுசொல்வான்

சபைகள் நிறைந்திருக்க சர்ப்பக்கொடியோனுரைப்பான்
ஐவர்வனவாசம்போய் ஐந்தாறுமாதமுண்டு
செத்தாரோபிழைத்தாரோ சேதிதெரியவில்லை
வனம்போனபஞ்சவர்கள் மாண்டாரெனவறியேன்
அம்மான்சகுனியை அழைத்தவன்கேட்கையிலே
மாமன்சகுனியுந்தான் மருமகனுக்கேதுசொல்வான்
தூதரைபோகவிட்டு தொலைதூரமேதேடில்
வனமாய்வனங்களிலே வனவாசம்செய்கிறதும்
செத்ததும்பிழைத்ததும் சேதிதெரியுமென்றார்
என்றதுகேட்டவுடன் எழுந்தான்துரியோதனனும்
அங்கிருக்குந்தூதர்களை அரசுமன்னன்தானழைத்து
ஐவர்வனவாசம்போய் அநேகநாளாச்சுதே
எந்தவனத்தி லிருக்கிறாரென்றறிந்து
ஐவர்கண்காணாதே அதிசீக்கிரம்வாரும்
காற்றாய்பறந்து கடிகியேவாருமென்றான்
தாம்பூலம்வாங்கித் தானடந்தார்தூதுவர்கள்
கோட்டைகடந்தார்கள் கொத்தளமுந்தான்கடந்தார்
பட்டணமுந்தான்கடந்து பாரவனம்போகலுற்றார்
செந்நாய்புலிகரடி சீறும்வனங்கடந்தார்
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
பாதிரிமுல்லை பருத்தவனங்கடந்து
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பில்தானிருக்கும்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனங்கடந்து
சூரியன்வனந்தனிலே போய்ச்சேர்ந்தார்தூதுவர்கள்
இருக்குமிடமறிந்து ஏகிநடந்தார்கள்
வனமாய்வனங்கடந்து வாரார்களம்பலத்தே
துரியோதிரனிருக்குஞ் சிங்காதனத்தின்முன்பாய்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்தூதுவர்கள்
மகாராஜர்மெச்சுகின்ற மன்னவரே நீர்கேளும்
சூரியவனத்திலைவர் சுகமாயிருக்கிறார்கள்

பர்னசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டோமென்றான்
அவ்வார்த்தைகேட்டு அரசுமன்னனேதுசொல்வான்
மாமாசகுனி மன்னவரே நீர்கேளும்
எந்தவிதம்பண்ணாலும் இறவாமல்பஞ்சவர்கள்
தப்பிப்பிழைத்து இருக்கிறார் தாரணியில்
வனவாசம்தீர்ந்து வந்தார்களாமானால்
பங்குள்ளபிரகாரம் பாதிராச்சியங்கேட்பாரே
வாராமல்பஞ்சவர்கள் வனத்திலேகொல்லுகைக்கு
ஆலோசனைசொல்லுமையா அம்மானெனவுரைத்தான்
மாமன்சகுனி மருமகனுக்கேதுரைப்பான்
செல்வமருமகனே திரியோதனா அஞ்சாதே
ஐவரைக்கொல்லவென்று லாலோசனைசொல்லுகிறேன்
தேவலோகத்திருக்குஞ் சினமுற்றதுருவாசர்
அவரை-வருந்தித்தபசுபண்ணால் வந்திடுவாரிப்போதே
வந்தபொழுதில் வருந்திச்சரணம்பண்ணி
அடிசல்சமைத்து அமுதுபடைத்தீரானால்
போஜனமிட்டு புகழ்வேந்தர்பொற்பதத்தில்
சரணமடைந்தால் சந்தோஷப்பட்டிடுவார்
துருவாசர்தன்மகிமை சொல்லிமுடியாது
ஆராலுமாகாது அந்தரிஷியைஜெயிக்க
தேவராலாகாது ஜெயிக்கமுடியாது
அப்படிக்கொத்தவரை அழைத்துநீரன்னமிட்டால்
சந்தோஷப்பட்டிடுவார் தபசில்பெரியவரும்
ஐவரைக்கொல்லுதற்கு அவரைமனுகேட்டால்
நல்லதென்றுசொன்னால் இராச்சியமுன்னுதடா
யாராலேயாகும் ஐவரைக்கொல்லவென்றால்
என்றுசொல்லக்கேட்டு இராஜன்திரியோதிரன்
உள்ளங்குளிர்ந்து உடனேதானெழுந்தார்
அங்கொருவர்தானறியா தரவக்கொடியோனடந்தார்
முத்துமிதியடியை தொட்டுமிகநடந்தார்
பூங்காவனம்புகுந்து புதுகங்கைநீராடி

ஸ்நானங்கள்செய்து செபதபமும்தான்முடித்து
நினைத்துசிவனை நெற்றியில்வெண்ணீறணிந்து
அரகராவென்று அள்ளியிட்டான்வெண்ணீறு
ஜலங்களைக்கொண்டு நிலங்களைச்சுத்தம்பண்ணி
தற்பாசனம்போட்டு திரியோதிராஜன்
துருவாசமகாரிஷியை அருகேவரத்தானினைந்து
கண்ணிரண்டுமூடிக் கருத்தில்நினைத்தானே
அருந்தபசுபண்ணுனே அரவக்கொடியோனும்
அப்போது அந்தரிஷி யறிந்துஞானதிருஷ்டியினுல்
சர்ப்பக்கொடியோன் தபசுநிலையறிந்து
சந்தோஷமாகி தான்வருவாரந்தரிஷி
ஜடையும்ஜடைமுடியுந் தம்பிரானைப்போல
கையில்கமண்டலமும் காசாம்பரமணிந்து
தெண்டுகமண்டலமுந் திருநீற்றுக்கோபியுடன்
வருகிருரந்தரிஷி வானுலகந்தான்கடந்து
வனமாய்வனம்கடந்து வாழ்மலையுந்தான்கடந்து
திரியோதிரன்தபசு நிலைசேரவந்தரிஷி
கண்டவுடன்மன்னன் கடுகியேதானெழுந்து
மூக்காலுமன்னன் முடிவணங்கிதெண்டனிட்டு
ஆண்டவரேஐயாவே அடியேன்சரணமென்றுன்
சிறந்ததுருவாசரிஷி சித்தமகிழ்ந்தேகுளிர்ந்து
என்னையழைத்ததுதானே துகருமமென்ருர்
மனதில்நினைத்ததெல்லாம் நன்ருயுரையுமென்ருர்
அஞ்சிப்பயந்தவனும் அரசுமன்னன்யேதுசொல்வான்
அமுதுபடைக்கவென்று அநேகநாளென்மனதில்
எண்ணியிருந்தேன்காண் இதுவேகருமமல்லால்
வாருமகாரிஷியே வருவீரமுதுசெய்வீர்
வருந்தியழைத்துவந்தான் மாளிகைவாசலிலே
வட்டமணைபோட்டு வந்திருமென்றுசொல்லி
கைக்குச்சலங்கொடுத்தான் கட்டழகன்கோமானும்
தலைவாழையிலைபோட்டுத் தண்ணீருந்தான்தெளித்தான்

முக்கனியுஞ்சர்க்கரையும்முன்படைத்தான்திரியோதிரன்
கட்டுவர்க்கமுடனே காவலனுந்தான்படைத்தான்
உண்ணுமுண்ணுமென்று வுபசரணை பண்ணலுற்றான்
அத்தனைபோசனமும் அருந்தினாந்தரிஷி
உண்டுபொசித்தாராம் உள்ளங்குளிர்ந்தாராம்
கையலம்பிக்கொண்டுமவர் கனிவாயுஞ்சுத்தம்பண்ணி
சிங்காதனத்திலே சேர்ந்தாரேயந்தரிஷி
தென்னமுடிவேந்தன் திரியோதிரராஜன்
பொற்றும்பாளந்தனிலே புட்பமுஞ்சந்தனமும்
தங்கத்தாம்பாளத்தில் தாம்பூலந்தான்கொடுத்தான்
மெத்தமகிழ்ந்தாரே மேன்மைதுருவாசரிஷி
சர்ப்பக்கொடிபடைத்த சதிமன்னனைப்பார்த்து
உனக்கென்னமனதில் இஷ்டமெல்லாங்கேட்டுவிடும்
மனதில்நினைத்தொரு வரங்கேளுந்தாரேனென்றார்
என்றுமவருரைக்க யேதுரைப்பான்திரியோதிரன்
ஏதுவரந்தருவீ ரென்றுரைத்தான்திரியோதிரன்
அப்போதுமாமுனியும் அவ்வார்த்தைக்கேதுசொல்வார்
-கோரும்வரங்களெல்லாம் கொடுப்பெனவேதாரேனென்
அப்போதிரியோதிரன் ஆணழகனேதுசொல்வான் [றார்
பங்காளிப்பிள்ளைகள் பஞ்சவர்களைவெருண்டு
ஐவர்வனவாசம் ஆரணியம்போனார்கள்
சூரியன்வனத்திலேதான் இருக்கிறார்பஞ்சவர்கள்
ஐவரைக்கொல்லவென்று அனேகமனதாகி
உம்மைவருந்தினேன் உண்மையுள்ளமாமுனியே
பஞ்சவரைக்கொல்லவென்றுபரவசமாய்ச்சொல்லுமென்
எந்தவகையாலும் இறக்கவகைபண்ணுமென்றார் [றார்
பாதம்பணிந்தானே பாம்புக்கொடியோனும்
துருவாசமகாரிஷியுஞ் சொல்லுகின்றார்வாய்திறந்து
ஏதுதானும்மைசெய்தா ரிராஜாக்கள்பஞ்சவர்கள்
எப்படிக்கொல்வேனு னிராஜாக்கள்பஞ்சவரை
திரியனதுகேட்டு செப்புவான்வாய்திறந்து

ஆரணியந்தன்னிலே ஐவருகிற்சென்று
போஜனங்கேட்டாலே புகழ்வேந்தர்பஞ்சவரை
ஐவருக்குபோஜனங்க ளங்கேகிடையாது
வெந்தசோறுண்டு விதமறியார்பஞ்சவர்கள்
போஜனமில்லையென்றால் பொட்டெனவேசாபமிட்டு
கல்லாகமண்ணுகக் காவலரைச்செய்துவிட்டு
கடுகிவந்துசொல்லும் கனத்தரிஷியாரே
போய்வாருமென்று பொருந்தவேதெண்டனிட்டான்
துருவாசமகாரிஷியுஞ் சுருக்காகவேயெழுந்து
தெண்டுகமண்டலமுஞ் செம்புலித்தோலாசனமும்
கடுகிநடந்தாரே காடுஞ்செடிநோக்கி
அஸ்திஞபுரந்தாண்டி ஆறுஞ்சுனைதாண்டி
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
சில்லென்றுபூத்த செடிகள்வனந்திரமும்
கடுகிவருகிறர் கனத்தரிஷியாரும்
ஏழுலகையாண்ட எம்பெருமாளிதையறிந்தார்
அடியளந்தமாயவனுர் ஆதிமூலமேதுசெய்தார்
நம்பினவரைக்காக்கும் நாரணரப்போது
காவலர்கள்பஞ்சவர்க்கு கனமோசம்வந்ததென்று
ஐவர்பஞ்சபாண்டவர்க்கு அனர்த்தம்வருகுதென்று
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதென்று
தோளில்செபமாலை சோரவிடநாளாச்சே
பாவிகெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
என்றும்பகையாளி ஏற்பட்டான்பஞ்சவர்க்கு
இங்கேயிருந்தோமென்றால் இறந்திடுவார்பஞ்சவர்கள்
நம்பினேமென்றவரை நாமல்லோகாக்கவேணும்
என்றுயெழுந்தாரே எம்பெருமாள்மாயவனும்
துவாரகாபுரிதாண்டி துழாய்மௌலிதான்வாரார்
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
சிறந்ததுருவாசருடன் சேர்ந்தாரேயெம்பெருமாள்
ஆலிங்கனம்பண்ணினுர் ஆயர்பெருமாளும்

இந்தவனத்துக்கு ஏதுவகையாய்ப்போறீர் .
எங்கேநீர்போறீர்காண் என்றார்பெருமாளும்
மகாரிஷிதுருவாசர் வாய்திறந்தேதுசொல்வார்
மாயன்பெருமாளே வந்ததென்னயிவ்வனத்தே
பார்வேட்டையாகவே பாரவனங்கள்வந்தேன்
வனசாரியாகவே வந்தேன்காணிவ்வனத்தே
அவ்வார்த்தைதான்கேட்டு அந்தரிஷியேதுசொல்வார்
பஞ்சவர்கள்தானிருக்கும் பாரவனங்களிலே
ஐவரிருக்குமந்த அடவியிலேபோய்ச்சேர்ந்து
புண்ணியவானைவரையும் போஜனங்கேட்கவந்தேன்
என்றுசொல்லக்கேட்டு எம்பெருமாளானவரும்
நாமும்வருகிறோம் ராஜாக்களைப்பார்க்க
கூடநடந்தாரே கோபாலசுவாமியவர்
இருவருமாகவே இருண்டவனந்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
செந்நாய்புலிகரடி சீறும்வனந்தாண்டி
பாதிரிமுல்லை பருத்தவனந்தாண்டி
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பிலேயிருக்கும்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனந்தாண்டி
கடுகிவருகையிலே கரியமாலென்னசெய்தார்
பலாமரத்தைக்கண்டதும் பாரளந்தாரேதுசொல்வார்
மெத்தப்பெரியவரே வேணதவஞ்செய்தவரே
இந்தப்பலாயிலைதான் ஏதுக்குதவுமென்றார்
அவ்வார்த்தைகேட்டுமல்லோ அரியரிஷியேதுசொல்வார்
இந்தப்பலாயிலையி லினியபோசனங்களுண்டால்
பலாயிலையிற்போசனங்கள் பண்ணவர்க்குயிட்டாலே
அமரருக்குஅற்புதங்காண் ஆர்க்குங்கிடையாது
எல்லோர்க்குங்கிட்டாது ஸ்ரீராமாவென்றுசொன்னார்
உச்சிதங்கள்தான்கேட்டு உவந்துநடக்கையிலே
அந்தவனங்கடந்து அடுத்தவனம்போகையிலே
காமதேனுப்பாலே கருங்கல்லுப்பாறையிலே

கரந்துயிருக்கிறதைத கண்டார்பெருமாளும்
மாயன்பெருமாளும் வார்த்தையவர்க்கேதுரைப்பார்
மெத்தப்பெரியவரே வேணதவஞ்செய்தவரே
தாயவனத்திற்சிறந்த துருவாசமாமுனியே
காமதேனுவின்பாலுங் காரியத்துக்காகுமோதான்
இதுஎதுக்குதவுங்கா ணென்றார்பெருமாளும்
அவ்வார்த்தைதான்கேட்டு அந்தமுனிஏதுசொல்வார்
தேவலோகந்தனிலே தேவருக்குக்கிட்டாது
ஆர்க்குங்கிடையாது அமரருக்குங்கிட்டாது
இது-எடுத்துப்பொசித்தாலே ஈஸ்பரருக்கற்புதங்காண்
என்றுசொன்னவார்த்தைதனை எம்பெருமாள்தான்கேட்டு
சந்தோஷப்பட்டுமவர் சாமிநடந்தாரே
அடுத்தவனந்தனிலே அவரிருவர்போகையிலே
தாமரைத்தடாகத்தை சாமிகண்டேதுசொல்வார்
ஐயாபெரியவரே அமரர்க்கரிதானவரே
இந்தஜலந்தானும் எதுக்குஆகுமென்றார்
துருவாசமகாரிஷியுஞ் சொல்லுகிறார்பொட்டெனவே
தாமரைப்பொய்கையிலே ஸ்நானங்கள்செய்தாலும்
தபங்கள்செபங்கள்பண்ணி தாகத்துக்குண்டாலும்
சிவனேயவனாகும் செப்பமுடியாது
என்றுசொன்னவார்த்தை எம்பெருமாள்தான்கேட்டு
சந்தோஷப்பட்டுமப்போ சாமிநடந்தாராம்
இருவருமாகவே ஏகிவழிநடந்தார்
சூரியன்வனந்தனிலே சேர்ந்தாரிருவருமாய்
பர்னசாலேமேலிருந்து பஞ்சவர்கள்கண்டுவிட்டார்
மாயன்பெருமாளும் மாமுனியானவரும்
வருகிறாரென்றுமந்த மகாராஜர்தானெழுந்து
திடுக்கிட்டுதான்பதைத்து சீக்கிரமாய்த்தானெழுந்து
எதிர்கொண்டுஓடிவந்து இரங்கியேதெண்டனிட்டார்
சாஷ்டாங்கமாகவே சரணமென்றுதெண்டனிட்டார்
கடுகிமுடுகியே காட்டுத்தழையொடித்து

ஐந்தடுக்குமெத்தையாய் ஆசனம்போட்டார்கள்
இட்டசிங்காதனத்தில் ஏறியிருவருமாய்
பச்சிலைமெத்தையிலே பதியக்கொலுவிருந்தார்
தக்கப்புகழுடைய தருமரவர்கூறுவார்
திரியோதிரன்செய்த சேதிதனைக்கேட்டீரோ
நாடோடிருந்தவென்னை ராஜமன்னன்தானழைத்து
விருந்தருந்தவாருமென்று விருந்தோலைதானனுப்பி
விருந்திலெனையழைத்து வஞ்சனைகள்பண்ணினானே
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
வாரவழிதனிலே வசிகளைத்தான்புதைத்தான்
அதுக்கும்பிழைத்தோமே ஆயருடபுண்ணியத்தால்
வசநாபிதண்ணீர்ப்பந்தல் வழியில்வைத்தான்மாபாவி
அதுக்கும்பிழைத்தோமே ஆண்டவனேவுன்னருளால்
பொற்குழிவெட்டியே பொற்சிங்காதனங்களிட்டு
கொல்லநினைத்தானே குடிகேடன்மாபாவி
அதுக்கும்பிழைத்தோமே ஆயருடபுண்ணியத்தால்
எண்ணெயிட்டுக்கொள்ளுமென்று எங்களையுந்தானழைத்[து]
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
அதுக்கும்பிழைத்தோமே ஆயருடபுண்ணியத்தால்
நீரிற்கழுநாட்டி நீராடிவாருமென்றான்
குளத்தில்வசிநாட்டிக் கொப்பெனவேபோங்களென்றான்
அதுக்கும்பிழைத்தோமே அரிராமர்புண்ணியத்தால்
உண்ணுகிறசாதத்திலே ஒருக்காலேநஞ்சையிட்டான்
குடிக்கிறதண்ணீரில் கொலைகாரன்நஞ்சையிட்டான்
கொல்லநினைத்தானே குடிகேடன்சத்ராதி
அதுக்கும்பிழைத்தோமே ஆண்டவனேயுன்னருளால்
அரசர்சபைநடுவே அம்பலத்தார்தங்கள்முன்னே
சொக்கட்டான்போட்டான்காண் சோழிவிளையாடி
பகடசாலைபோட்டு பந்தயங்கள்பேசினான்
நாடுகளும்சீமைகளும் ராச்சியமும்தான்பறித்தான்
தூயசீமையேழுந் துரைத்தனமுந்தான்பறித்தான்

பெருத்தவிலங்குமிட்டு பெருங்கிடங்கிலேயடைத்தான்
காற்றுநுழையாத கல்லறைக்கிடங்கிலிட்டான்
தள்ளியிழுத்துவந்து தாள்விலங்குபோட்டுவிட்டான்
அரசர்சபைநடுவே அம்பலத்தார்தங்கள்முன்னே
அறையிலிருந்தபெண்ணை அம்பலத்திற்கொண்டுவந்து
பாஞ்சாலன்பெற்றபெண்ணை பாவையழகியரை
அரசர்சபைநடுவே அம்பலமேற்றிவைத்தான்
சொல்லாதுஞ்சொல்லியல்லோ துகிலுரிந்தான்மாபாவி
வாய்வரிசையில்லாமல் வம்பாகப்பேசினனே
பாரவனவாசம் பன்னிரண்டுவருடம்வரை
ஆரணியம்போயிருந்து அப்பாலொருவருடம்
அக்கியாதவாசம் யாருக்குந்தெரியாமல்
ஊரில்வுருமாறி யொளித்திருந்துவந்தாக்கால்
காடுதிரிந்துவந்தால் காசிநகர்தாரேனென்ருன்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுதாரேனென்ருன்
பாரவனவாசம் பரதேசம்வந்துவிட்டோம்
எங்கள்-பொழுதுதொலையுமோ பூமியரசாளுவமோ
என்றுதெளியுமோ எக்காலம்சென்றிடுமோ
நாங்கள்சுகமாக ராச்சியத்தையாளுவமோ
உம்முடையதிருவுள்ளம் எப்படியோநாமறியோம்
பாதஞ்சரணமென்று பணிந்தாரேதருமராசர்
மாயன்பெருமாளும் வார்த்தைபவரேதுசொல்வார்
தலையிலெழுதினதை தள்ளிவைப்பாரொருவருண்டோ
வரும்வினைவந்தாக்கால் மடியேந்தவேண்டாமோ
ஈசனெழுதியதில் எவ்வளவுங்குறையாது
என்று-பிரியவசனத்தை பெருமாளுரைத்தாரே
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
இந்தரிஷியாரும் யேதுவகையாகவந்தார்
என்றுமவர்கேட்க யேதுசொல்வார்மாயவரும்
வந்தவருத்தத்தை மாயவரும்கேளுமென்ருர்
என்றுசொல்லக்கேட்டு இயலான தருமலிங்கம்

துருவாசமாமுனிக்குத் தெண்டஞ்சமர்ப்பிவித்து
சொல்லுவார்வாய்திறந்து சொற்பெரியதருமலிங்கம்
அடியேனைத்தேடியே ஆண்டவரேவந்ததென்ன
கமலபாதம்நொந்திடவே கால்நடையாய்வந்தீரோ
செந்தாமரைப்பாதம் செம்புண்ணாய்சிவந்ததுவே
தேடிவந்தகாரியத்தைச் செப்புமென்றார்மாமுனியை
துருவாசமாமுனியும் சொல்லுகின்றார்வாய்திறந்து
குருகுலவங்கிஷத்தில் குந்தியார்புத்திரரே
போஜனங்கேழ்க்கவந்தேன் புகழ்பெரியதர்மரே நான்
தேவர்க்குமற்புதமாய் சிவனார்க்கும்பிரீதியாக
இப்போதுபோஜனங்க ளிட்டாலேயல்லாது
கல்லாய்ச்சபிப்பேனென்றார் கணத்தரிஷியவரும்
மெத்தப்பயந்தாரே வில்வேந்தர்தருமராஜர்
ஆயரைப்பார்த்துமல்லோ அனேகவிசாரமிட்டார்
மடிந்துவிடுங்காலம் வந்ததுயென்னசெய்வோம்
என்றுபுலம்புகையில் எம்பெருமாளேதுசொல்வார்
வீமாமதகரியே வேல்வேந்தர்வாருமென்றார்
பருத்தவனங்களிலே பலாயிலைநீபறித்து
கருங்கல்லுமேலாகக் காமதேனின்பாலிருக்கும்
காராம்பசுப்பாலை கடுகியேபேர்த்தெடுத்து
தாமரைப்பொய்கையிலே ஜலங்கொண்டுவாருமென்றார்
என்றுசொல்லமாயன் எழுந்துநடந்தான்வீமன்
கடுகிமுடுகியே காற்றாய்பறந்துவந்து
காமதேனின்பாலையவன் கடுகியேபேர்த்தெடுத்து
பருத்தவனங்களிலே பலாயிலைதான்பறித்து
தாமரைப்பொய்கையிலே ஜலங்கொண்டோடிவந்தான்
துருவாசமாமுனியே சுவாமியெழுந்திரென்றார்
கைக்குஜலங்கொடுத்து கடுகவேதருமராஜர்
வட்டமணைபோட்டு வந்திருஞ்சுவாமியென்று
பலாயிலைபோஜனங்கள் பாங்காகபடைத்தார்கள்
உபசரணைபண்ணியே உண்ணுமையாசுவாமியென்றார்

போஜனத்தைமாமுனியும் பொசித்தபிரகாரம்
ஆயாசந்தீர்ந்தாரே அந்தரிஷியாரும்
கையலம்பிக்கொண்டாரும் கடிகிமகிழ்ந்தாரும்
தாம்பூலம்வாங்கிச் சந்தனமுந்தானணிந்து
ஐவரைக்கொல்லவந்த அந்ததுருவாசரிஷி
தேவர்களருந்துகிற திவ்வியமானபோஜனங்கள்
போதப்படைத்தார்கள் புகழ்வேந்தர்பஞ்சவர்கள்
இப்படிக்கொத்தவரை எப்படிக்கொன்றிடலாம்
என்றுமனமகிழ்ந்து இராஜாக்களைவாழ்த்தி
ஐவர்பஞ்சபாண்டவரை அந்தரிஷிவாழ்த்தினர்
ஐவரையும்வாழ்த்தி ஆயரைதெண்டனிட்டு
இருங்களிருங்களென்று எழுந்துநடந்தாரே
கடுகிமுடிகியே கரியமலைதான்தாண்டி
சூரியன்வனந்தாண்டி சுருக்காகவருகிறராம்
காடுகள்தாண்டியே கரியமலைதான்தாண்டி
அஸ்தினபுரத்தை அடுத்தாராமந்தரிஷி
திரியோதிரனிருக்குந் திருச்சபைதன்னில்வந்தார்
திரியோதிராஜன் தெண்டனிட்டான்மாமுனியை
அடிபணிந்துதெண்டனிட்டு ஐயாசரணமென்றன்
சிங்காதனம்போட்டு சீராகவீற்றிருந்தான்
ஆசனத்தின்மேலாக அந்தமுனிவீற்றிருந்தார்
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்கேட்பான்
ஐவரையுங்கொன்று அதம்பண்ணிப்போட்டீரோ
கல்லாசபித்தீரோ கடுகியேவந்தீரோ
என்றுசொல்லக்கேட்டானே இயலானராஜதுரை
துருவாசமாமுனிக்குத் தோஷிமொழிகொள்ளாமல்
கோபமிகக்கொண்டு கொப்பெனவேயதுசொல்வார்
ஐவரையுங்கொல்லவென்று அனுப்பினய்பாதகனே
அவர்போலுபசரணை ஆரொருவர்செய்ததில்லை
தேவர்கள்தானருந்துந் திவ்யமானபோஜனங்கள்
போதப்படைத்தார்கள் பொன்னடியைத்தான்வணங்கி

சரணமடைந்தார்கள் சந்தோஷமாகிவந்தேன்
ஐவரையுங்கொல்லவென்று அனுப்பினாய்பாதகனே
உன்னுடையவங்கிஷத்தில் ஒன்றும்விளங்காது
ஐவருடகையாலே அனர்த்தமாய்போகவென்று
சாபங்கொடுத்தாரே சமர்த்துள்ளமாமுனியும்
செப்பிநடந்தாரே தெய்வலோகந்தனிலே
துருவாசமாமுனியும் தெய்வலோகம்போனபின்பு
அப்போதிரியோதிரன் அங்கேகவிசனமதாய்
எண்ணாதயெண்ணமெண்ணி இருந்தான்திரியோதிரன்
ஐவருக்காகவே ஆயரிருக்கும்போது
மாயன்பெருமாளும் வார்த்தைகளே திசொல்வார்
தென்னமுடிவேந்தன் திரியோதிரப்பெருமான்
தூயதேவுலகிலிருக்குந் துருவாசமாமுனியை
அரவக்கொடியோனும் அனுப்பினானும்மைக்கொல்ல
திரியோதிரன்சொற்படிக்கு சீறுந்துருவாசமுனி
உம்மை-கொல்லமனதாகி கோபித்துவந்தாரே
அதுவறிந்துங்களை நான் ஆதரிக்கயிங்குவந்தேன்
அல்லாதேயாமாகுல் அநீதமாய்மாண்டிடுவீர்
எனவுரைக்கமாயவரும் எடுத்துரைப்பார்தருமருக்கு
உம்மைநம்பியல்லோ உயிர்கொண்டுலாவுகிறோம்
நீரேதுணையல்லாமல் வேறேதுணையுமுண்டோ
நம்பினபேர்களையே ரட்சிக்குந்தேவனல்லோ
அடியாரைக்கார்க்கின்ற ஆதிபரம்பொருளே
ஏழைகளைக்சார்க்கின்ற எம்பெருமாளாண்டவரே
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரியுமட்டும்
ஏதுவினை வருமோ எம்பெருமாளாண்டவரே
இன்னமென்ன வஞ்சனையோ எம்பெருமாள்தானறியேன்
வரும்வினையாவுக்கும் மாயவரே துணைவாரும்
அரக்குமாமாளிகையில் ஐவரைக்காத்தீரே
அபயமென்றதுரோபதைக்கு அட்சயத்துகில்கொடுத்தீர்
உன்மகிமையாரறிவார் உலகளந்தமாயவரே

2

சரணஞ்சரணமென்று தாள்பணிந்தார்பஞ்சவர்கள்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்பஞ்சவர்கள்
மாயன்பெருமாளும் மனதுமிகக்குளிர்ந்து
ஐவர்மேல்பட்சம் அதிகப்பிரியமுமாய்
சந்தோஷப்பட்டுசுவாமி தன்னிடம்மனங்குளிர்ந்தார்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
இந்தவனந்தாண்டி இனியவனம்போங்களென்றார்
மற்றொருவனத்திலேதான் மன்னவரேபோங்களென்றார்
அடுத்தவனந்தாண்டி அப்பாலேபோங்களென்றார்
தெற்குமேற்குகிழக்கு சேனதூரஞ்சென்றாலும்
வடக்குதிசையிலேதான் மன்னவரேபோகவேண்டாம்
ஏதுவினைவந்தாலும் என்னை நினைத்திடுங்கள்
என்றுமவர்சொல்லி எம்பெருமாள்தானெழுந்தார்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போய்நடந்தார்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
அழகானதுவாரகைக்கு ஆண்டவரும்போய்நடந்தார்
முதலாவது சூரியவனம் முற்றிற்று.

---

## இரண்டாவது, இராமரிஷிவனம்

இரண்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
அந்தவனந்தாண்டி அப்பாலேபோகலுற்றார்
ராமரிஷிவனத்தில் நடந்தார்கள்பஞ்சவர்கள்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
முன்னை முசுட்டையும் முகிழ்விரித்ததூதுவளை
பண்ணக்கலவையும் புரட்டைபுளிக்கறணை
தின்றுதிரிகிறார்கள் தேசாந்திரிபோல
ராமரிஷிவனத்தில் நடந்தார்கள்பஞ்சவர்கள்
ஐந்தடுக்குபர்னசாலை அவ்வனத்திலுண்டுபண்ணார்
எழடுக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்



பாம்பாக சபிக்கப்பட்டிருந்த ராமரிஷி பாண்டவர்களை எடுத்து விழுங்க
கிருஷ்ண பகவான் எலியாக நுழைந்து விடுதலை செய்தல்.

பர்ணசாலைமேலாகப் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்தவனந்தனிலேஐவர் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்தவனத்திலேதான் அழகானராமரிஷி
தபசிற்பெரியவரும் தம்பிரானனவரும்
சரணங்கள்பண்ணினாலே சாதங்கறியிடுவான்
போஜனங்களிட்டுமல்லோபுஷ்பங்கள்தான்கொடுப்பான்
காவிகாசாம்பரமும் கைமணியுந்தான்கொடுப்பான்
புலித்தோலுமாசனமும் பொருந்தவேதான்கொடுப்பார்
சரணமடைந்துமே சாமிபோய்வாருமென்பார்
தாதார்பெரியவர்கள் தப்பெடுத்துவந்தாலும்
அரிராமாவென்றுசொல்லி அனந்தம்பேர்வந்தாலும்
ராமாராமாவென்றசத்தம் ராமரிஷிகேட்டாலும்
அரிகரியென்றசத்தம் அந்தரிஷிகேட்டாலும்
கோவிந்தாவென்றசத்தம் குருமுனிதான்கேட்டாலும்
கோபித்துக்கண்சிவந்து கொப்பெனவேதானெழுந்து
சீறிவரும்புலிபோல் சிவ்வெனவேதானெழுந்து
கையிற்றடியெடுத்து கடுகியடிப்பானே
வாரியெடுத்துமவர் வல்லுயிரைக்கொள்ளைகொள்வான்
அப்படியாகவே அநேகநாளிருக்கும்போது
மாயன்பெருமாளும் வார்த்தையதுவறிந்து
தள்ளாடுங்கிழவனைப்போல் தானேவடிவெடுத்தார்
பரந்தமுகம்நிறைந்த பழுத்தமரம்போல
தாதவடிவாக சாமிவருவாராம்
ராமரிஷிதானிருக்கும் நல்லவனந்தனிலே
அந்தரிஷியிருக்கும் ஆச்சிரமமுட்புகுந்து
ஹரிஓம்ஹரிஓமென்று அடிக்காராம்தப்பதனை
சாரங்கபாணியென்று சங்குதனைத்தானூதினார்
அந்தசத்தந்தான்கேட்டு அரிமரிஷிதானெழுந்து
கோபித்துக்கண்சிவந்து கொப்பெனவேதடியெடுத்து
ஆனையின்மேலேதான் ஆண்சிங்கம்புகுந்தாப்போல்
தாதனொருவனையும் தடியாலடிக்கலுற்றார்

மாறியடித்தானே மதம்பெரியராமரிஷி
அந்தஅடிபட்டுக்கொண்டு அரிகரிராமாவென்றார்
மறுகாலொருதரமும் மாறினன்ராமரிஷி
அவ்வடியும்பட்டுக்கொண்டு அரிகரிராமாவென்றார்
அவன்-மாறியடித்தானே மாயனென்றறியாமல்
சுழட்டியடித்தானே சுவாமியென்றறியாமல்
அவ்வடியும்பட்டவுடன் அரிராமர்கோபமாகி
கண்கள்சிவந்துமல்லோ காந்தாளமுமெழும்பி
ஆகாயமாகவேதான் வளர்ந்தாரே ஆயரங்கே
விஸ்வரூபமாகவே மேகவண்ணர்தான்வளர்ந்தார்
கண்டானேராமரிஷி கால்கைதடுமாறி
அடிதொடையுங்காலும் அதிரவிடவிடென்ன
மெத்தப்பயந்து விழுந்தானடிபணிந்தான்
சுவாமிசரணமென்று தாள்பணிந்தான்ராமரிஷி
மூக்காலுந்தெண்டனிட்டு முடிவணங்கிபோற்றிசெய்தார்
அப்போதுமாயவரும் அருளாளரேதுசொல்வார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
போஜனங்கள்போடுறதும் போதப்பணிகிறதும்
மயேஸ்வரரடியார்க்கும் வணங்குவதேயல்லாது
எந்தஅடியாரை இகழ்ச்சியாய்ப்பேசுறதும்
மாறியடித்துமே வாயாத்தம்பண்ணுறதும்
அகந்தைகள்பண்ணுறதும் ஆகுமோராமரிஷி
ஆகாதகாரியங்கள் அனர்த்தங்கள்தேடிக்கொண்டீர்
இவ்வார்த்தைகேட்டுமே இயலானராமரிஷி
மெத்தபயமாகி விஷ்ணுவைத்தான்பணிந்தான்
கைகட்டிவாய்புதைத்து கடுகியேயேதுசொல்வாள்
ஆதிசிவன்பாதம் அடியேனறிந்திருப்பேன்
உன்னுடையபாதம் ஒருக்காலும்நானறியேன்
தேடியுங்காணுமல் தேவரீருன்பாதம்
ஆண்டவரேயுமைக்காண அநேகநாள்தவமிருந்தேன்
கோடித்தவமிருந்துங் கோவிந்தனைக்கண்டதில்லை

ஆகையினலேதான் ஆயர்வுமைக்காண
உம்முவடியாரை உதாசினம்பண்ணுறது
இந்தவிதமாக இருந்தேன்நெடுநாளாய்
என்-வினையகன்றதின்று எம்பெருமானும்மாலே
உன்-பாதமதைக்கண்டபோதே பாவங்கள்போக்கிவிட்
அஞ்சிப்பயந்தவனும் ஆசாரம்பண்ணினன் [டேன்
காயாம்புவண்ணருமே கரியமாலேதுசொல்வார்
அகந்தைகள்செய்ததில்லை அநேகபாவமுந்தனுக்கு
சாபம்பிடியுமென்றார் சௌரிபெருமானும்
ஆயிரம்வருஷமட்டும் அரவமாய்ப்போகவென்றார்
தாராமுக்கன்மலைப்பாம்பாய் சாபமிட்டாரெம்பெருமாள்
அப்போதுராமரிஷி ஆயரையேதுகேட்டார்
எம்பெருமாளிச்சாப மெப்போதுதீருமென்றார்
அப்போதுமாயவரும் அருளாளரேதுசொல்வார்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போரூர்கள்
வனவாசம்போரூர்கள் மன்னர்பஞ்சபாண்டவர்கள்
தருமர்தம்பிநால்வர்களைத் தானெடுத்துவிழுங்கிடுவீர்
வெற்றிமதயானை வீமனருச்சுனரை
நகுலர்சகாதேவர் ராஜாக்கள்நால்வரையும்
எடுத்துவிழுங்கியே இருக்கின்றவேளையிலே
அருச்சுனன்வில்லாலுன் அங்கம்பிளந்துவிடும்
அந்தச்சமயத்தில் அங்கேநான்வந்திருப்பேன்
நான்வந்திருந்து நற்காட்சிதாரேனென்றார்
அப்போதுராமரிஷி ஆயரிட்டசாபமதால்
அரிராமர்சாபத்தால் அப்பாம்புமுண்டாச்சு
அநேகநாளாய்ப்பாம்பு அவ்வனத்திலேயிருக்கும்
அதுவறியார்பஞ்சவர்கள் அவ்வனத்திலேயிருந்து
இராமரிஷிவனத்தில் இராஜாக்கள்தானிருந்தார்
பர்னசாலையுண்டுபண்ணி பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
காயும்பழமும் கந்தமூலங்களுண்டு
ஐவருமங்கேதான் ஆலித்திருக்கும்போது

தெற்குமேற்குகிழக்கு தேடிகனிபறிப்பார்
வடக்குதிசைநோக்கி மன்னர்கள்போகிறதில்லை
அவ்வனத்திலேயொருநாள் அடங்காதவீமனவன்
மெத்தவகங்காரமுடன் வீமனுமங்கேநினைவாய்
கடுகியெழுந்தானே கனிகள்பறிக்கவென்று
வடக்குதிசைதனிலே மாயன்போகாதேயென்றார்
காயுங்கனியுமங்கே கடுகியேகிட்டாதோ
வேண்டியராட்சதர்கள் வேதமுனிகளுண்டோ
அவ்விடத்திலதிசயங்க ளெல்லாமறிவோமென்று
கடிகியெழுந்தான் கட்டழகன்வீமனவன்
சல்லடங்கள்போட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
கையில்கெதையெடுத்து கடுகியேதான்நடந்தான்
வடக்குதிசைநோக்கி வாரான்மதகரியான்
காயுங்கனியுமங்கே கடுகப்பழுத்திருக்கும்
அவ்விடத்திலேகனியும் அனேகம்பழுத்திருக்கும்
அருநெல்லிசிறுநெல்லி அழகானதமர்த்தைகளும்
கொச்சித்தமர்த்தையுடன் குடகுபலாப்பழமும்
மாங்கனியும்தேங்கனியும் வண்ணபலாப்பழமும்
மட்டில்லாபழங்களெல்லாம் வனத்திலேசொரிந்திருக்கும்
அளவில்லாக்கனிகளெல்லாம் அவ்வனத்தில்தானிருக்கும்
கண்டானேவீமனவன் கண்கள்மிகக்குளிர்ந்தான்
பார்த்தானேவீமனவன்பார்வைரெண்டுந்தான்குளிர்ந்தா
அங்கேகனிகள் அனேகம்பழுத்திருக்க [ன்
மெத்தகனிகளங்கே வேணதெல்லாந்தான்குளிர்ந்தான்
உண்டுபிழைப்பார்க ளென்றல்லோஉலகளந்தார்
தின்றுபிழைப்பார்க ளென்றுதிருமாலும்
வடக்குதிசைபோகாதே யென்றூரேமாயவரும்
சாமிபெருமாளிவர் சதிநினைவைக்கண்டோமே
என்றுமனதிலெண்ணி ஏங்கிநடந்தானே
எண்ணுதுமெண்ணினன் இயலானவீமனவன்

அந்தவனந்தனி லவனாகவுள் நுழைந்து
மரத்தின்மேலேறினான் மதவீமராஜனவன்
உச்சியிற்கனிபறித்து உண்டுபொசித்தான்காண்
காயுங்கனிபறித்து கடுகவேதான்பொசித்தான்
வாயாரத்தின்றுமே வயிறாரத்தான்பொசித்தான்
அண்ணருக்குந்தம்பியற்கும் அனேகங்கனிபறிக்க
அருநெல்லிசிறுநெல்லி அழகானதமர்த்தையுடன்
சோலைப்பலாக்கனியும் துய்யவிளாங்கனியும்
கிளையைவளைப்பானுங் கிள்ளியொருபழம்பறிப்பான்
செடியைவளைப்பானும் சிவந்தபழம்பறிப்பான்
அங்கேகனிக ளனேகம்பறிக்கையிலே
அடுத்தபுதரிலேதா னரவமெழுந்திருந்து
சரிந்தவனத்திலேதான் சர்ப்பமெழுந்திருந்து
மதவீமராஜாவை மலைப்பாம்புகண்டதுகாண்
தாராமூக்கன்மலைப்பாம்பு சந்தோஷமாகவே
மனதுமிகக்குளிர்ந்து மதகரியானருகில்வந்து
வாயைத்திறந்துமங்கே மதவீமனையெடுத்து
எடுத்துவிழுங்கிற்று இயலானவீமனைத்தான்
பாம்பென்றுபார்த்ததில்லை பாரமதவீமன்
சர்ப்பமென்றுபார்த்ததில்லை சமர்த்துள்ளவீமனவன்
கால்கொண்டதூரமட்டுங் கடுகெனவேதானடந்தான்
விசைகொண்டதூரமட்டும் வீசிநடந்தானே
வழியுந்தெரியாமல் வந்தவிடங்காணாமல்
பாதைதெரியாமல் பாம்பென்றறியாமல் [ண்
பெருங்குடலில்சார்ந்துகொண்டான் பெருமாள்நிகர்வீம
அடிக்குடல்மேல்சார்ந்துகொண்டான் அந்தமதவீமன்
பாம்பென்றறிந்தானே பாரமதவீமன்
சர்ப்பமென்றறிந்தானே சமர்த்துள்ளவீமனவன்
எண்ணாதுமெண்ணி இருந்துவிசாரமிட்டான்
அண்ணரைத்தம்பியரை அல்லவரைநான்பிரிந்தேன்
கூடப்பிறந்தவரை கொற்றவரைநான்பிரிந்து

ஒக்கப்பிறந்தவரை உடற்பிறப்பை நான்பிரிந்து
மாளும்விதியன்றோ வந்தேனறியாமல்
ஆகையினாலேதான் ஆயர்போகாதேயென்றார்
அறியாமல்வந்ததினா லகப்பட்டேனென்செய்வேன்
மாயன்சொற்கேளாமல் வந்துவிட்டேனிவ்வனத்தில்
அண்ணர்தருமராயர் அழுதுபுலம்புவாரே
தம்பிமாரைத்தேடியவர் தானேபுலம்புவாரே
அறியாமல்வந்தே னாண்டவரேயென்னசெய்வேன்
ஆயரேகோவிந்தா ஆதிமூலம்வந்தருளும்
மாயவரேகோவிந்தா மகாதேவர்காத்தருளும்
என்றுபுலம்பி யிருந்தானேவீமனவன்
தக்கபுகழுடைய தருமரவரென்னசெய்வார்
அருச்சுனன்கனிபறித்து அண்ணரண்டை வந்தபின்பு
வாய்திறந்துதருமராயர் மதிகலங்கியேதுசொல்வார்
வெற்றிமதயானை வீமன்கனிபறிக்க
மதவீமன்போயுமல்லோ மன்னுநெடும்போதாச்சு
போனவிடத்திலே புதுமையொன்றும் நானறியேன்
மதவீமன்போனசெய்தி வார்த்தையொன்று நானறியேன்
அண்ணனைத்தேடியே அழைத்தோடிவாராயோ
ஓடியழைத்துமே ஒருநொடியில் வாராயோ
கண்டுஅழைத்துமே கடுகெனவேவாராயோ
அப்போதுஅருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
அப்படியேபோய்வாரேன் அடியேன்சரணமென்று
சரணஞ்சரணமென்று சாய்த்தான் திருமுடியை
மூக்கால்வலம்வந்து மூவொருக்கால்தெண்டனிட்டான்
போகவிடைதாருமென போர்விஜயன்தெண்டனிட்டான்
போய்வாருமென்றுசொல்லி போகவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தார் விஜயபெருமாளும்
ஜல்லடங்கள்தான்போட்டு தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
பில்லைசமுதாடு பிருவெடுத்தஒட்டியாணம்

பட்டுதட்டி கட்டியல்லோ பாலாவுந்தான்சொருகி
அம்புவில்லுந்தானெடுத்து அர்ச்சுனன்வாருனே
காடுசெடி தாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனை தாண்டி யதிகவனந்தாண்டி
சில்லென்றகாடும் செடியுமலைதான்தாண்டி
காலடியைத்தேடியல்லோ கடுகியேதான்வருவான்
பாரவனங்களிலே பார்த்தீபனும்வாரானே
அவ்வனத்திலேகனிகள் அனேகம்பழுத்திருக்கும்
கண்டானே அருச்சுனனும் காவலனுமேதுசொல்வான்
காலடியைக்கண்டோமே காவலனைக்காணேமே
எங்கிலும்காணேமே இயலானவீமனைத்தான்
கூவியழைப்போமே மென்றல்லோகொற்றவனும்
அண்ணரேவீமாவென்று அழைத்தானேவாள்விஜயன்
கூவியழைக்கலுமே குரல்கேட்டுவீமனுக்கு
அருச்சுனன்தேடி யழைக்கிறனென்றுசொல்லி
மாலைமுடியான் மதவீமனேதுசொல்வான்
காளையருச்சுனரே கடுங்காளை தூரநில்லும்
அருகேநீவாராதே அருச்சுனரே தூரநில்லும்
கிட்டநீவாராதே எட்டநில்லும்அருச்சுனரே
இங்கேநீவாராதே இறந்திடுவாய்தம்பியரே
தூரநில்லும்அருச்சுனரே சேரவந்தால்மோசமடா
ஏதோபெரும்பாம்பு என்னைவிழுங்கிறதுகாண்
அரவத்தின்வாயிலேதா னகப்பட்டுக்கொண்டேனப்பா
இனிபிழைப்பேனென்றுநீ எண்ணாதேதம்பியரே
தப்பிபிழைப்பேனென்று எண்ணாதேதம்பியரே
மற்றும்பிழைப்பேனென்று மன்னவரேயெண்ணாதே
ஆயாசமாகாதே அண்ணருடன்சொல்லுமப்பா
கனவருத்தங்கொள்ளாதே மன்னருக்குச்சொல்லுமப்பா
தக்கபுகழுடைய தருமர்நமதண்ணரவர்
கவடுதெரியாதார் கள்ளமொன்றுந்தானறியார்
வெளுத்ததைப்பாலென்பார் வெள்ளமதைநீரென்பார்

பொய்சொல்லான்புண்ணியவான் புகழ்வேந்தர ந்தணர்க்
சிந்தைகலங்காமல் தேறுதலைசொல்லுமப்பா [கு
மன துகலங்காதே வார்த்தைகள்சொல்லுமப்பா
வனவாசந்தீர்ந்தல்லவோ வையகத்தேபோனபின்பு
சேனைபரிவாரம் திரியோதிரன்பாளையத்தை
செண்டாட்டமாட்டிவைத்து சேனைகளைக்கொன்றழித்து
கர்னன்சகுனியையுங் கண்ட துண்டமாகவெட்டி
திரியோதிரன்முதலாய்ச் சேர்ந்ததம்பிநூற்றுவரை
மற்றும்படைகளெல்லாம் மண்ணோடேசாய்த்துவிட்டு
அண்ணருக்குப்பட்டங்கட்டி அரசாண்டிருங்களப்பா
தருமருக்குப்பட்டங்கட்டி தாரணியையாண்டிடுங்கள்
எப்போதும்போலே இராச்சியத்தையாண்டிடுங்கள்
பெற்றாள்வயிறதனில் இட்டேன்பெருநெருப்பை
குந்தியம்மாள்தன்வயிற்றில் கொடியதணல்வைத்தேனே
எழுத்துப்படியல்லால் எவரால்விலக்கவசம்
தலையிலெழுத்துத்தான் தவறாதுதம்பியரே
அன்றெழுதுங்கர்த்தனவன் அழித்தெழுதப்போறதில்லை
விதிவசத்தையாராலும் வெல்லவேகூடாது
இனிபிழைப்பேனென்று நீ எண்ணாதேதம்பியரே
கிட்ட நீவாராதே எட்டநில்லுந்தம்பியரே
போய்வாருமென்றானே போர்க்கடங்காவீமனவன்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனன் துயரமுற்று
கண்ணீரைசோரவிட்டுக் காளையருச்சுனனார்
மெத்தச்சலித்துமே விசாரம்பெரிதாகி
அண்ணாவேயென்வீமா அடியேனொருவார்த்தை
பாம்பின்வயிற்றிலேநீர் பார்வேந்தர்மாண்டதுவும்
அரவத்தின்வயிற்றிலேநீர் ஆணழகாமாண்டதுவும்
அண்ணன் தருமருடன் அடியேனொருவார்த்தை
உரைத்தேனேயானுக்கால் உள்ளமிகப்பதறி
துள்ளிப்பதைத்துயிரை துடிதுடித்துவிட்டிடுவார்
எப்படிக்குநானுரைப்பேன் என்னுடையஅண்ணாவே

போகமனம்வருமோ போர்வேந்தே அண்ணுவே
உன்னைவிட்டுத்தான்பிரிந்து உயிருந்தரிப்பேனே
இப்பெரியபாம்புதன்னை இட்சணத்திற்கொன்றிடுவேன்
வயிற்றைக்கிழித்திடுவேன் வந்திடுமண்ணுவே
என்றுமெழுந்தானே எழில்சேரருச்சுனனும்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொளித்து
அம்புறாத்தூணியிலே அஸ்திரம்எடுக்கையில்
பாரமலைப்பாம்பு பார்த்துஅருச்சுனரை
கானமலைப்பாம்பு கண்டது அருச்சுனரை
அப்போமலைப்பாம்பு ஆவலுடன்ஓடிவந்து
அருச்சுனனைத்தான்பார்த்து அருகில்வந்துவாய்திறந்து
வாள்விஜயனைப்பார்த்து வாயைத்திறந்தது
எடுத்துவிழுங்கிற்று இயலானவருச்சுனரை
பார்த்தனென்னுமருச்சுனரை பாம்புவிழுங்கியது
எடுத்துவிழுங்கியது ஏப்பம்விட்டுத்தானிருக்கும்
அப்போதுவில்வளைத்த வருச்சுனனுமேதுசெய்தான்
அரவத்தின்வயிற்றி லருச்சுனனும்விழுந்தான்
அண்ணுவேயண்ணுவே அடியேனும்வந்துவிட்டேன்
உந்தனுடனுக வந்துவிட்டேனண்ணுவே
நானுமிங்கேவந்துவிட்டேன் நலம்பெரியஅண்ணுவே
அண்ணர்தர்மராயருக்கு ஆர்போயுரைப்பார்கள்
எழுத்துப்படியல்லோ இருவருக்குமொன்ருச்சு
என்செய்வேனென்செய்வே னென்றுபுலம்புகையில்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
வில்விஜயர்வேந்தன் விதித்தவிதிப்படியே
என்று இருவருமா யிருந்துபுலம்புகிருர்
அநேகநெடும்பொழுது ஆனபிறகாக
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
தம்பிநகுலா நீ தாமமுடியானே
வெற்றிமதயானை வீமனைத்தான்தேடி
போனதோரருச்சுனரை பின்னேவரக்காணுமே

இன்னம்வரக்காணேன் ஏதொன்றும் நானறியேன்
ஆரோடேசண்டைகள் அமராடுசெய்கிறாரோ
இக்காட்டில்ராட்சதர்கள் எத்தனையோகோடியுண்டு
எவரோடே சண்டை யிடுகிறாரென்றறியேன்
காணவும்போறேனே கட்டழகர் தம்பியரை
பார்க்கவும்போறேனே பார்மன்னரிருவர்களை
தேடியழைத்து சீர் நகுலா வருவீரோ
பார்த்து அழைத்து பார் நகுலா வருவீரோ
என்றேஉரைத்துமவர் எண்ணமிட்டுக்கொண்டிருந்தார்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தான் நகுலனுமே
பட்டிதட்டி ஒட்டியாணம் பசும்பொன்னாற்சமுதாடு
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்கும்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்கள்போட்டல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
தன்னாயுதங்கடனைத் தானெடுத்துசீர் நகுலன்
காடுசெடி தாண்டி கரியமலை தான் தாண்டி
செந்நாயும்புலிகரடி சேரும்வனந்தாண்டி
காலடியைப்பார்த்துமல்லோ கடிகியேதேடிவாரான்
அக்கானகந்தனிலே ஆராய்ந்துதேடினபின்
அண்ணாவேயென்வீமா அர்ச்சுனாவென்றழைத்தான்
கூவியழைத்தானே கோடை நகுலனுமே
அழைத்தகுரல்கேட்டது அர்ச்சுனற்கும்வீமனுக்கும்
வெற்றிமதயானை வீமனுமேதுசொல்வான்
ஆணழகுமன்னன் அர்ச்சுனனுமேதுசொல்வான்
தம்பிநகுலா நீ தாமமுடியானே
அண்ணனையும்என்னையும் அரவம்விழுங்கினது
மலைப்பாம்புக்கிரையானோம் மன்னவனே தம்பியரே
கிட்ட நீவாராதே எட்டிநில்லுமென்பிறப்பே
சேர நீவாராதே தூரநில்லுமென்பிறப்பே

அண்ணருக்குச்சொல்லும் அரவம்விழுங்கினதாய்
அஸ்தினாபுரத்துக்கு அண்ணாவைக்கூட்டிப்போய்
திரியோதிரனுடனே சேதிகள்சொன்னாலே
அருச்சுனரைவீமரை அரவம்விழுங்கிற்றென்றால்
மெத்தமகிழ்ந்திடுவான் விஷநாகங்கொண்டவனும்
தருமாபுரமுள்ளதெல்லாம் தருமரையாளுமென்பான்
எப்போதும்போலநீங்க ளிராச்சியத்தையாண்டிடுங்கள்
நாங்கள்-இனிபிழைப்போமென்று எண்ணாதேதம்பியரே
போங்காணு நகுலா நீ புத்தியுள்ள கண்மணியே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏது சொல்வான் நகுலனுமே
அண்ணரே நீர்கேளும் அரவத்தைக்கொல்லுகிறேன்
வெட்டியெரிகிறேன் வெளிப்படுங்களண்ணர்களே
உங்களைவிட்டெனக்குப் போகமனம்வருமோ
விட்டுப்பிரியவே வேறுமனம்வருமோ
அண்ணருடவயற்றில் அனலைச்சொரிவேனோ
சிறுவன்போய்ச்சொன்னாலே சீவனைவிட்டிடுவார்
மாளநினைப்பாரே மதிகேடுவந்துவிடும்
போகமனம்வருமோ புண்ணியரேஎந்தனுக்கு
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனேது சொல்வான்
நீர்-தலையிலெழுதினதை தள்ளிவைக்கப்போறீரோ
நீர்-எட்டிலெழுதினதை யெடுத்தறியப்போறீரோ
வரும்வினைகள்வந்தாலே மடியேந்தவேண்டாமோ
ஆயனெழுத்தவ்வளவு ஆகையால்மாண்டுவிட்டோம்
இனிநாம்பிழைப்போமென்று யெண்ணாதேதம்பியரே
மற்றுபிழைப்போமென்று மன்னவனேயெண்ணாதே
போடாநகுலாவென்று புகன்றானருச்சுனனும்
செப்பமொழிகேட்டு சீறிய நகுலனுமே
இப்பாம்பைவெட்டி யெரிகிறேனிப்போது
பாம்புகளைக்கொல்வேனென்று பட்டாவுருவிநின்றான்
பார்த்தது அப்பாம்பு பாரமுடிமன்னவனை
கண்திறந்துபார்த்தது கடிகமலைப்பாம்பு

வாயைத்திறந்தவனே வாரிவிழுங்கினது
பாம்பின்வயிற்றிலேதான் பரிநகுலன்போய்விழுந்தான்
அண்ணுவேயென்னையும் அரவம்விழுங்கிற்றென்றான்
என்னையுங்கூட எடுத்துவிழுங்கிற்றென்றான்
உங்களுடனாக ஒருவனுஞ்சேர்ந்தேனென்றான்
மூவருக்கும்ஓரெழுத்தாய் முடிந்ததேஎன்னசெய்வோம்
அண்ணரைத்தம்பியரை ஆரணங்கைகைவிட்டோம்
என்றுபுலம்பியே யிருக்கின்றவேளையிலே
வில்லாளிபார்த்தனுமே வீமனங்கேது சொல்வான்
அப்போதேசொன்னேனே தப்புவருமென்றுசொல்லி
என்வார்த்தைகேளாமல் இங்கேவந்தீர் தம்பியரே
வந்தயிடந்தனிலே வல்வினையைக்கண்டீரோ
என்றுமவர்கள்சொல்லி இருந்துவிசாரமிட்டார்
இப்படிக்காகவேதா னிருக்கின்றவேளையிலே
அநேகநாழிகைசென்றபின்பு அழகானதர்மலிங்கம்
மெத்தவிசாரப்பட்டு வெகுவாய்மனங்கலங்கி
சகாதேவனைப்பார்த்து தருமருரைக்கலுற்றார்
வீமன்கனிபறிக்கப்போய் வெகுநேரமாச்சுதப்பா [டேன்
அழைத்தோடிவாருமென்று அருச்சுனரைப்போகவிட்
அருச்சுனன்தேடிப்போய் அனேகநெடும்போதாச்சு
போனதோரருச்சுனனும் பின்புவரக்காணேனே
நகுலன்தனைபோகவிட்டு ராஜாக்களைப்பாருமென்றேன்
காளைநகுலனுமே கடுகவரக்காணேனே
செத்தார்பிழைத்தாரோ செய்திதெரியவில்லை
மாண்டாரோயானறியேன் மன்னவரேயென்செய்வேன்
ஆரோடேசண்டை அமராதுசெய்கிறாரோ
எவரோடேசண்டை ஏடாகூடங்களோண்டோ
அவர்களைப்பார்த்துநீ யழைத்தோடிவாராயோ
ஓடியழைத்துநீ ஒருநொடியில்வாராயோ
கண்டுஅழைத்துநீ கடுகெனவேவாராயோ
அண்ணருரைகேட்டு அழைத்துமேவாராயோ

அப்போதுசகாதேவன் ஆணழகன்தானெழுந்து
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூசுங்குவிட்டு
கச்சைவரிந்துகட்டி கருங்கச்சைதொங்கவிட்டு
ஆயுதந்தானெடுத்து அடைவாய்நடக்கலுற்றான்
காலடியைத்தேடியேதான் கடுகிநடக்கலுற்றான்
காடுஞ்செடியுங் கனத்தமலைதான்தாண்டி
ஆறுசுனையு மதிகவனந்தாண்டி
சில்லென்றகாடுஞ் செடியும்வனந்தாண்டி
தேடியேவாரானே திசைதோறுங்கானகத்தில்
எங்கெங்குந்தேடினானே இனியவிடமாராய்ந்தான்
கண்ணாலேகண்டதில்லை காளைகளானவரை
பாராவிடங்களில்லை பாரமுடிராஜர்களை
தேடியேவந்துமவன் திகைத்தாப்போல்நின்றுவிட்டான்
அடியளந்தமாயவரே ஆதிமூலம்வந்தருளும்
அண்ணாமதவீமா அருச்சுனரேசீர்நகுலா
என்று-கூவியழைத்தானே கொற்றமன்னர்வீரியனும்
கூவியழைத்தகுரல் கேட்டதுமூவருக்கும்
என்காணும்சகாதேவா எங்குவந்தீர்தம்பியரே
அரவம்விழுங்கினது ஆணழகர்மூவரையும்
தூரநில்லுந்தம்பியரே சேரநீவாராதே
எட்டநில்லுந்தம்பியரே கிட்டநீவாராதே
அரவம்விழுங்கினதாய் அண்ணருக்குச்செய்திசொல்லும்
நீ-அழுதுபுலம்பாதே அண்ணரைக்கூட்டிப்போய்
அஸ்தினாபுரிக்கு அடவுடனேபோய்ச்சேரும்
வீமாருச்சுனரை மிக்கநகுலரையும்
அண்ணமார்மூவரையும் அரவம்விழுங்கினதாய்
திரியோதிரனுடனே செய்திநீசொன்னாலே
சந்தோஷமாவானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்திடுவான் விஷநாகங்கொண்டவனும் [ன்
தருமாபுரத்தையல்லோ சர்ப்பக்கொடியோன்கொடுப்பா

சீமைதருவானே சிறந்ததுரைத்தனமும்
பூமிதருவானே பொல்லாச்சுயோதனனும்
அண்ணரும்நீருமே அவ்வரசையாண்டிருங்கள்
போங்காணுந்தம்பியரே புகழ்பெரியராஜாவே
என்றுமவருரைத்து இருக்கின்றவேளையிலே
இவ்வார்த்தைதான்கேட்டு இளையசகாதேவன்
அண்ணருரைகேட்டு ஆணழகனேது சொல்வான்
மன்னருரைகேட்டு மறுவார்த்தையேது சொல்வான்
போயுரையுமென்றுசொல்லி புண்ணியரே சொன்னீர்கள்
புகழ்வேந்தரண்ணருக்குப் போய்நானுரைத்தாக்கால்
சொன்னேனேயாமாகிற் சொர்க்கபதிசேர்ந்திடுவார்
இவ்வார்த்தைதான்கேட்டு இன்னமிருப்பாரோ
மூவரைப்பறிகொடுத்து முடிசூட்டியாளுவரோ
அவர்-செத்துமடிந்திடுவார் சிவலோகஞ்சேர்ந்திடுவார்
மாண்டுமடிந்திடுவார் வைகுந்தஞ்சேர்ந்திடுவார்
யென்றுயான்சொன்னாலே சீவன்விடுவாரே
துடித்தபுழுப்போலே துள்ளிவிழுவாரே
அடித்தமயில்போலே அலறிவிழுவாரே
சாகத்துணிவாரே தர்மலிங்க அண்ணரும்
போகத்துணிவாரே பொறுமையுள்ள தர்மலிங்கம்
எப்படிக்குப்போயுரைப்பேன் என்னுடைய அண்ணர்களே
என்றுசகாதேவன் ஏங்கிப்புலம்பலுற்றான்
அடியற்றமரம்போலே அலறிப்புரண்டழுவான்
மலையேபருவதமே மாண்டுமடிந்தீரோ
செம்மலையேபருவதமே செத்துமடிந்தீரோ
உங்களைப்பறிகொடுத்து ஒருத்தனாய்ப்போவேனோ
அண்ணர்களேயென்றுசொல்லி அலறிப்புலம்பினான்
அழுதகுரல்கேட்டு அம்மூவரேது சொல்வார்
தலையிலெழுதினதை தள்ளிவைக்கப்போறீரோ
வட்டிலெழுதினதை எடுத்தெறியப்போறீரோ
ஈசனெழுதியதில் எள்ளளவுங்குறையாது

சொல்லாதேதம்பிநீ சுருக்காயெழுந்திரென்றார்
பேசாதேதம்பிநீ போய்பிழையும்வையகத்தில்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான்சகாதேவன்
உங்களைப்-பார்த்துநடக்கவேதான் பாவிமனம்வருமோ
கண்டுநடக்கவேதான் காளைமனம்வருமோ
பொறுத்துநடக்கவேதான் போகமனம்வருமோ
இப்பாம்பைக்கொன்றிடுவேன் இயலானராஜர்களே
பாம்புதனைக்கொல்லுகிறேன் பாருமென்றுவாளெடுத்தா
என்றுவுருவினான் இளையசகாதேவன் [ன்
கத்திவுருவையிலே கண்டது அப்பாம்பு
கண்டதுமலைப்பாம்பு கணிதநூற்கோமானை
வாயைத்திறந்து வாரிவிழுங்கினது
எடுத்துவிழுங்கினது இளையசகாதேவனையும்
அப்போதுசகாதேவன் ஆணழகுமன்னன்
என்னையும்விழுங்கினது என்னுடைய அண்ணாவே
உங்களுடனாக ஒருவனும்வந்துவிட்டேன்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆணழகரேதுசொல்வார்
என்வார்த்தைதள்ளி யிருந்தீரேதம்பியரே
நால்வருக்கும்ஒரொழுத்து நான்முகனெழுதிவைந்தான்
அண்ணர்தர்மராஜாவை அல்லவருங்கைவிட்டோம்
ஆச்சிதுரோபதையை அரிவையரைக்கைவிட்டோம்
என்றுபுலம்பியேதா னிருந்தார்கள்நால்வருமே
அநேகநெடுநேர மானபிறகாக
தக்கபுகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
அன்னமேசொர்னமே அமிர்தபசுங்கிளியே
தேனேமடமயிலே தித்திக்குந்தெள்ளமுதே
கன்னல்மொழியாளே கற்கண்டேசர்க்கரையே
சாந்துகழுத்தியரே சந்தனப்பூமேனியரே
கோவைக்கழுத்தியரே குங்குமப்பூமேனியரே
குங்குமமொத்ததொரு கொம்பேரிடையாளே
நெருப்பில்பிறந்தபெண்ணே நீலவண்ணன்தங்கையரே

கைமோசம்வந்ததுவே கண்மணிகளைக்காணேன்
போகவழியறியேன் புதுமைகளொன்றறியேன்
செத்தார்பிழைத்தாரோ சேதியொன்றும்நானறியேன்
மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தைநானறியேன்
கடுகியெழுந்திருங்காண் கானகத்தில்தேடிடுவோம்
என்றுபுலம்பி எழுந்தாரிருவருமாய்
காலடியைப்பார்த்துமே கடுகியேவாரார்கள்
தேடியேவாருர்கள் சீரானகானகத்தில்
அப்பாமதவீமா அழகானஅருச்சுனரே
நாமமுடி நகுலா தம்பிசகாதேவனெனக்
கூவிப்புலம்புகையில் குரல்கேட்டுதம்பியற்கு
அண்ணன்குரல்கேட்டு அருச்சுனனேதுசொல்வான்
என்காணும்அண்ணுவே இடையநில்லுமென்பிறப்பே
சேரநீவாருதே தூரநில்லுமென்பிறப்பே
அருகேநீவாருதே அண்ணுவேதூரநில்லும்
பாம்புவிழுங்கினது பாரவனந்தனிலே
இங்கேமலைப்பாம்பு எடுத்துவிழுங்கினது
நால்வருக்குமோரெழுத்து நான்முகனெழுதிவைத்தான்
உன்-அங்கஞ்சலியாதீர் அழுதுபுலம்பாதீர்
இனிபிழைக்கப்போரோமென் றெண்ணுதேஅண்ணுவே
இவ்வார்த்தைதான்கேட்டு இயலானதர்மலிங்கம்
துள்ளிப்புலம்புகிருர் சொரணைதெரியாமல்
வெற்றிமதயானை வீமாமதகரியே
எழுபிராயத்தில் இடும்பனைக்கொன்றுயே
பத்துபிராயத்தில் பகாசூரனைக்கொன்றுயே
அரக்குமாளிகையி லைவரையும்நீயெடுத்தாய்
ஐவரையும்நீயெடுத்தாய் அந்தபலனடங்கி
பாம்புக்கிரையாக இருந்தீரோபார்வேந்தா
எழுபதுலட்சம்யானை இழுக்கவொண்ணுக்கதையெடுத்து
அமரதுசெய்கின்ற ஆண்மையுள்ளவீமா
மலைப்பாம்பைக்கொல்லுதற்கு மறந்தாயோவீமா நீ

சந்தனமிருபுயத்தை சாய்த்தாயோபூமியிலே
குங்குமமிருபுயத்தை கொள்ளையென்றுசாய்த்தாயோ
கல்லான தூணை கரையான்எரிக்குமோதான்
இரும்பான தூணும் இத்துவிழுமோதான்
நீமடியுங்காரியத்தை நிண்ணயத்தையானறியேன்
ஆச்சாபருவதமே அழிவில்லையென்றிருந்தேன்
ஆச்சாபருவதமும் அழியும்நாளாச்சுதோ
கற்பகத்தூணுக்குக் கலக்கமில்லையென்றிருந்தேன்
கற்பகத்தூணுங் கரையுநாளாச்சுதோ
என்னையலையவிட்டு இப்பாம்புக்கிறையானாய்
நூலார்கடுந்திரளார் நூறுபேர்மன்னர்களை
கொல்லுவேனென்றுசொன்ன கொடியசபதமெல்லாம்
மறந்தாயோதம்பிநீ மலைப்பாம்புக்கிறையாக
என்னைமறந்துநீ யிறந்துவிடஞாயமுண்டோ
என்றுபுலம்புகிறார் இயலானதருமருமே
மாரடித்துதோளடித்து மண்மேல்விழுந்தலறி
களைத்துவிழுந்தாரே கட்டழகர்மூர்ச்சையானார்
அப்போதுதுரோபதையும் ஆரணங்குயேதுசெய்தாள்
பச்சைத்தழையொடித்து பைங்கிளியாள்துரோபதையும்
காட்டுத்தழையொடித்து கடுகெனவேவீசலுற்றாள்
வீசினாள்தருமருக்கு விடாய்கள்மிகத்தெளிய
வீசக்களைதெளிந்து வேந்தர்புலம்புகிறார்
அப்பாடாஅப்பாடா ஆணழகாதம்பியரே
காளைஅருச்சுனா கடுங்காளைசேவகனே
எடுக்காதவில்வளைத்து இளங்கொடியைமாலையிட்டாய்
நீபார்த்துமீனெய்தாய் நிற்றிலங்குபூமுடியாய்
அழகில்மிகுந்தவரே அர்ச்சுனாதம்பியரே
நீமடியுங்காரியமும் நிண்ணயமும்நானறியேன்
இடதுபுயமான இயலானஅருச்சுனரே
என்னைமறந்தீரோ இப்பாம்புக்கிரையாக
உங்களைமடியவிட்டு ஒருநாழிதங்குவேனோ

கூடமடிந்திடுவேன் கொற்றவரேவுங்களுடன்
நானும்மடிந்திடுவேன் ராஜர்களேவுங்களுடன்
அங்கமுறுகுதையோ ஆவிதணலாகுதையோ
நெஞ்சுதனிலேயே நெருப்பாயெரியுதிப்போ
ஈரலுக்குள்ளே இருந்துதணல்பத்துதடா
கும்பியினுள்ளேயல்லோ குடவிளக்காயெரியுதடா
மனதுதரிக்கவில்லை வயிறெரிச்சல்தீரவில்லை
உங்களைப்பரிகொடுத்து உலகத்திலிருப்பேனோ
நானுமடிந்திடுவேன் ராஜர்களேவுங்களுடன்
உங்களைப்பொசித்தபாம்பு எங்களைப்பொசியாதோ
உன்னைப்பொசித்தபாம்பு என்னைப்பொசியாதோ
என்றுமனந்தளர்ந்து எழுந்தாரேதருமலிங்கம்
மலைப்பாம்புதன்னருகே வந்துதலைகொடுத்தார்
இரங்கினார்தருமலிங்கம் என்னையும்விழுங்குமென்றார்
தாராமுகன்மலைப்பாம்பு தள்ளிவிடுகுது
எதிரிலேவந்தாலும் இடைந்துவிடுகுது
பக்கத்தில்வந்தாலும் பார்த்துமேயோய்விடுது
தக்கப்புகழுடைய தருமராவருரைப்பார்
சமர்த்துள்ளமலைப்பாம்பே தம்பியரைவிழுங்கிவிட்டாய்
என்னைவிழுங்குமென்று எதிரேநான்வந்தாலும்
என்னபாவஞ்செய்தேனோ என்னைவிலக்கிவிட்டாய்
ஏதாகிலும்பாவிநான் இருந்தாலுமாகாது
ஐயோவெனத்தருமர் அழுதுபுலம்புகிறார்
குய்யோமுறையோவென்று கூவிப்புலம்புகிறார்
தோராவடிவழகி துரோபதையுங்கூறுவாள்
ஆண்டவரேஐயாவே அழகுள்ளதருமரேநீர்
மாயவரைநீருமிப்போ மனதில்நினையுமென்றாள்
எம்பெருமாள்வந்தாலே எல்லாந்தெரியுமென்றாள்
அப்போதருமருக்கு அந்தநினைவுவந்து
அவ்வார்த்தைதான்கேட்டு அழகானதருமலிங்கம்
மாயனைத்தானினைந்து வருந்திப்புலம்புகிறார்

மாயன்பெருமாளே வந்தருளவேண்டுமையா
ஆலிலைமேற்பள்ளிகொண்ட ஆதிமூலம்வாருமையா
பாற்கடலில்பள்ளிகொண்ட பாரளந்தாரெம்பெருமாள்
மச்சவடிவுகொண்ட மாயவரே நின்சரணம்
கூர்மவடிவுகொண்ட கோபாலா நின்சரணம்
கல்லான அகலிகையை நல்லபெண்ணாக்கிவைத்தீர்
எல்லையளந்தீரே எதிரில்லையென்றீரே
மூலமென்றகுஞ்சரத்தை முகில்வண்ணாகாத்தீரே
இராமராய்நீபிறந்து இராவணனைசங்கரித்தீர்
இலங்கையழித்தீரே இராட்சதரைவென்றீரே
அரக்குமாமாளிகையில் ஐவரையுங்காத்தீரே
அம்பலவாசலிலே ஐவரையுங்காத்தீரே
அபயமென்றதுரோபதைக்கு அட்சயத்துகில்கொடுத்தீர்
உன்மகிமையாரறிவார் உம்பர்பிரான்தானறிவார்
தஞ்சமென்றபஞ்சவரைத் தற்காக்கதெய்வமல்லோ
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோனதேயையா
கையில்செபமாலை கணங்குலைந்துபோனதேயையா
உள்ளங்கைநெல்லிப்பழம் உருகுலைந்துபோனதேயையா
இத்தனை நாள்காத்தீரே இன்றல்லோமாண்டுவிட்டோம்
ஏழையழுதகண்ணீர் கூரியவாள்தப்பாது
நானழுதகண்ணீரும் ரம்பங்கொண்டறுக்காதா
வாரீரோகிருஷ்ணாவென் மனத்துயரந்தீராயோ
என்று-அபயமபயமென்று அழுதுபுலம்புகிறார்
தோராவடிவழகி திரௌபதியாளேதுசொல்வாள்
அண்ணாமணிவண்ணா அடியேனுக்குதவிசெய்வாய்
மஞ்சளிழந்தேன் மணமிழந்தேன்பூவிழந்தேன்
தாலிச்சரடிழந்தேன் தலைவிரிக்கநாளாச்சே
ஐவரிட்டமங்கிலியம் அழிவில்லையென்றிருந்தேன்
மங்கிலியந்தானிருந்து மண்ணில்விழநாளாச்சே
ஆரைக்கழுத்தி அரைக்கழுத்தியானேனே
கோரைக்கழுத்தி குறைக்கழுத்தியானேனே

செல்வங்குலைந்துநான் சீருமழிந்தேனே
ஐவருங்கைவிட்டாரே அலைந்துவிட நாளாச்சே
மங்கிலியபிச்சைநீ தாராயோமன்னவரே
என்குறையைத்தீராயோ இங்குநீவாராயோ
அபயக்குரலிட்டுமங்கே அழுதாள்துரோபதையும்
மார்கொண்டகண்ணீரை வழித்தெறிந்தாள்மண்மேலே
அப்போதுமாயவரும் ஆதிமூலந்தானறிந்தார்
அழுதகுரல்கேட்டு அயன்பெருமாளும்
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
பெட்டியிலேபூஷணம் பெருமைகுலையுதே
தோளிற்செபமாலை தோடவிழ்ந்துபோகுதே
கையிற்செபமாலை கனங்குலைந்துபோகுதே
வருந்திப்புலம்புகிற மனத்துயரந்தீர்க்கவென்று
அழுதுபுலம்புகிற அத்துயரந்தீர்க்கவென்று
ஏழைகள்தன் துயரம் தீர்க்கவென்றுஎம்பெருமாள்
வாரூர்பெருமாளும் வட்டமாங்கருடனேறி
துவாரகாபுரியைவிட்டுச் சுவாமியவர்வாருரே
காடுஞ்செடியுங் கரியமலைதான்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
பாதிரிமுல்லை பருத்தவனந்தாண்டி
சில்லென்றகாடுஞ் செடியும்வனந்தாண்டி
மூங்கிலடர்ந்திருக்கும் முல்லைவனந்தாண்டி
சூரியன்தன்வனத்தைச் சுருக்காகத்தான்தாண்டி
இராமரிஷிவனத்தில் இராமரும்வந்துவிட்டார்
மாயன்வருகிறதை வழியிலேதான்பார்த்து
தருமருந்துரோபதையுஞ் சரணமிட்டார்மாயவரை
தருமருந்துரோபதையும் தாமெதிரேஓடிவந்தார்
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டார்
அறுகால்வலம்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டார்

சிங்காதனம்போட்டார் ஸ்ரீராமர்தானிருக்க
ஆசனம்போட்டார்கள் அரிராமர்தானிருக்க
இட்டசிங்காதனத்தில் எம்பெருமாள்வீற்றிருந்தார்
மாயன்பெருமாளும் வாய்திறந்தேதுசொல்வார்
அடியளந்தமாயவரும் ஆதிமூலமேதுசொல்வார்
அழுதகுரலேது அழைக்கவந்தகாரணமேன்
வேண்டியழைத்த விபரமென்னசொல்லுமென்றார்
வருந்தியெனையழைத்த வகையதனைச்சொல்லுமென்றார்
வீமருச்சுனர்கள் வேந்தரெங்கேயென்றார்
தம்பிமார்நால்வர்களுந் தார்வேந்தரெங்கேயென்றார்
அழுதுபுலம்புவதேன் ஆரணங்குதுரோபதையும்
ஏதுக்கழுதீர்க ளெனக்கறியச்சொல்லுமென்றார்
என்னையழைத்தவகை யெனக்கறியக்கூறுமென்றார்
தக்கப்புகழுடைய தருமரவரேதுசொல்வார்
தம்பிமார்நால்வரையும் சர்ப்பம்விழுங்கிற்றென்றார்
தாராமுகன்மலைப்பாம்பு தானும்விழுங்கிற்றென்றார்
தம்பியரைப்பறிகொடுத்து தரிப்பேனோபூமியிலே
மலையைப்பறிகொடுத்து மண்மேலிருப்பேனோ
அங்கம்பொறுக்குமோ அரிராமாயென்னசெய்வேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
ஆகையினாலேதான் ஆண்டவரேயுமையழைத்தேன்
என்றுரைக்கதான்கேட்டு எம்பெருமாளேதுசொல்வார்
எழுத்துவிதிதன்னை எவரால்விலக்கவசம்
தலையிலெழுதினதை தள்ளிவைக்கப்போறோமோ
எட்டிலெழுதினதை எடுத்தெறியப்போறோமோ
அன்றெழுதுங்கர்த்தரல்லோ அழித்தெழுதப்போறாரோ
இட்டபடியொழிய எவ்வளவுங்குறையாது
வரும்வினைவந்தாலே மடியேந்தவேண்டாமோ
ஆராலேயாகுமிது ஆயுசுக்குக்கர்த்தருண்டோ
எவராலேயாகுமிது இவர்களைத்தானெழுப்ப

என்னாலேயேதாகும் இயலானதர்மலிங்கம்
இவ்வார்த்தைதான்கேட்டு எதுசொல்வார்தர்மலிங்கம்
என்னாலேயாகாதென் றேனேகழித்துவிட்டீர்
உம்மாலேயாகாத தொன்றுண்டோவையகத்தில்
எல்லாமுமதுசெயல் என்றிருந்தேன்மாயவரே
தம்பிமார்தான்பிழைக்க சாமிநீகண்பாரும்
உடற்பிறப்புத்தான்பிழைக்க உத்தமரேகண்பாரும்
என்பிறப்புதான்பிழைக்க எம்பெருமாள்காத்தருளும்
கண்பாரிவ்வேளையென கண்ணனையுந்தெண்டனிட்டார்
புண்ணியமாய்போகுதென பெருமாளைதெண்டனிட்டார்
அப்போதுதுரோபதையா ளாரணங்குவதுசெய்தாள்
முந்தாணியேந்திநின்றாள் முருகுழலாள்துரோபதையும்
மங்கிலியப்பிச்சையல்லோ மாயாவெனக்கருளும்
வாடாதமங்கிலியம் வல்லவாவெனக்கருளும்
என்றுமவள்சொல்லி இளங்கொடியாள்துரோபதையும்
மாயனுடபாதத்தை வணங்கித்தொழுதுநின்றாள்
இவ்வார்த்தைதான்கேட்டு எம்பெருமாள்மனமிறங்கி
அங்குமொருகிருஷ்ணன் ஆயரிருக்கையிலே
சின்னஎலிபோல சுவாமிவடிவுகொண்டார்
மலைப்பாம்புதன்செவியில் மாயவரும்போய்புகுந்தார்
அர்ச்சுனன்வில்நாணிதனை அறுத்தாரேமாயவரும்
வில்நாணிதானறவே வில்நிமிர்ந்துவாய்கிழிந்து
நகுலன்சகாதேவன் நல்விஜயன்வீமனுமே
ராமரிஷியுடனே நன்றாய்வெளிப்பட்டார்கள்
ஐவருமாகவேதா னப்பாம்பில்வெளியானார்
மாயன்பெருமாளை வந்துநமஸ்கரித்தார்
தக்கப்புகழுடைய தருமருக்குத்தெண்டனிட்டார்
தக்கப்புகழுடைய தருமரவர்பார்த்து
வாழ்த்திமனமகிழ்ந்து மன்னன்தர்மராயருமே
மனதுகுளிர்ந்தாரே மகாராஜர்தர்மலிங்கம்
துரோபதைநாயகியுஞ் சிந்தைமிகக்குளிர்ந்தாள்

மலர்ந்தசெந்தாமரைப்போல் மனதுமிகக்குளிர்ந்தார்
அலர்ந்தசெந்தாமரைப்போல் அங்கமிகக்குளிர்ந்தார்
ராமரிஷியாருக்கு நற்காட்சிதந்தாராம்
மாயன்பெருமாளும் வார்த்தைகளைதுசொல்வார்
இந்தவனந்தாண்டி இனியவனம்போங்களென்றூர்
அப்போதுதர்மலிங்கம் ஆயரைப்பபார்த்துரைப்பார்
இந்தரிஷியாரு மிங்குவந்தகன்மமென்ன
வந்தகன்மமத்தனையும் வாய்திறந்துசொல்லுமென்றூர்
அப்போதுமாயவரும் அருளாளரேதுசொல்வார்
இந்தரிஷிகாரியத்தை இயம்புவேன்நீர்கேளும்
மாயாண்டிகன்னடியார் வந்தால்வணங்குவான்காண்
எந்தனடியார்கள்வந்தால் இகழ்ச்சிகள்பண்ணுறது
ஏடாகூடங்கள்பண்ணி எட்டியடிக்கிறதும்
இப்படியாகவே இருந்தார்வெகுகாலம்
அப்போதுநானொருநா ளங்கேவடிவெடுத்தேன்
தாதவடிவெடுத்து தப்புகொட்டிபிச்சையென்றேன்
அரிகரிராமாவென்று ஐயாவேபிச்சையென்றேன்
அப்போஅராமரிஷி அவசரமாயோடிவந்து
என்னையடித்தாரே இயலானராமரிஷி
அடிபட்டுகொண்டதொரு ஆக்ருஷமானதினல்
நான்-பட்டஅடியாலே இட்டேன்பெருஞ்சாபம்
அப்போதுராமரிஷி ஆயரேயென்றழுது
வல்லாளன்ராமரிஷி வாய்திறந்துயேதுசொல்வான்
என்சாபமெப்போது தொலையுமைபாசுவாமியென்றூன்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்வந்தாக்கால்
நாலுபேரையெடுத்து நன்றாய்விழுங்கிடுவாய்
அப்போதுவுன்சாபம் அடைவுடனேதீர்த்திடுவேன்
என்றுமவர்க்குரைத்து என்பதிக்குப்போய்நடந்தேன்
அப்போஇட்டசாபமது இப்போதொலைந்ததுகாண்
நீங்க-ளிவ்வனத்தைவிட்டு இனியவனம்போங்களென்று
அப்போதுஎம்பெருமாள் அரிராமர்தானெழுந்தார்

ராமரிஷிஜவர்களும் தங்கைதுரோபதையும்
எம்பெருமாள்மாயவற்கு எல்லோரும்தெண்டனிட்டார்
பஞ்சவர்களைவருக்கும் பாஞ்சாலிதுரோபதைக்கும்
மாயன்பெருமாளும் மனங்குளிரவாழ்த்தியபின்
எந்தவனங்களிலே இடரதுவந்தாலும்
இடரதுவந்தாலே என்னை நினையுங்கள்
என்றுமவருரைத்து எம்பெருமாள்போகலுற்றார்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்றார்
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையு மதிகவனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
வனமாய்வனந்தாண்டி வந்துவிட்டார்மாயவரும்
துளபமணியார்பன் துவாரகைபோய்சேர்ந்தார்
சிங்காதனத்தின்மேல் ஸ்ரீகிருஷ்ணன்தானிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
மாயவனூர்போனபின்பு மகாராஜர்பஞ்சவர்கள்
ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்குதுரோபதையும்
மன்னர்பஞ்சபாண்டவரும் மயிலனையாள் துரோபதையு[ம்
அந்தவனத்தி லனேகநாள் சென்றபின்பு
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
மூன்றும்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு

இரண்டாவது, இராமரிஷிவனம் முற்றிற்று.

---

## மூன்றாவது, முருக்கமகாரிஷிவனம்

அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோகலுற்றார்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மண்ணிவைத்தசீமாடு வனமேகுடித்தனமாய்
முருக்கமகாரிஷிவனத்தில் மூடிவந்தார்பஞ்சவர்கள்

அந்தவனத்திலேதான் எல்லோரும்வந்தார்கள்
ஓரடுக்குபர்ணசாலை உண்டுபண்ணார்பஞ்சவர்கள்
மூன்றடுக்குபர்ணசாலை முடிமன்னருண்டுபண்ணார்
ஆறடுக்குபர்ணசாலை ஆணழகருண்டுபண்ணார்
ஏழடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
பர்ணசாலைமேலேயல்லோ பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
தென்னமுடிவேந்தன் திரியோதனனேதுசொல்வான்
சபைகள்நிறைந்திருக்குஞ் சர்ப்பக்கொடியோனும்
ஆர்காணும்ராஜர்களே அழகானமன்னர்களே
முத்துக்கிரீடம் முடிசூடுமன்னர்களே
வச்சிரக்கிரீடந் தரித்ததொருமந்திரிகளே
மாணிக்கக்கிரீடந் தரித்ததொருமந்திரிகளே
அத்தண்டபேரையுமே அனைவரையுந்தான்பார்த்து
மாநாகங்கொண்டதொரு மகாராஜனேதுரைப்பான்
ஐவர்வனம்போய் அநேகநெடுநாளாச்சே
மூன்றும்வருஷமது மொழியலாம்பஞ்சவர்க்கு
அவர்கள்-எந்தவனத்திலே இருக்கிறாரென்றறியேன்
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தைதெரியவில்லை
ஆரடாதூதுவரே அங்கிருக்குமல்லர்களே
பாரப்புலிபோலே பஞ்சவர்களைவருமே
வீரப்புலிபோலே வேந்தர்களைவருமே
எந்தவனத்திலிருக்கிறாரென்றறிந்து
ஐவரும்மைப்பாராதே அறிந்தோடிவாருமென்றான்
காவலர்களும்மையவர் காணாதேவாருமென்றான்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்திருந்தார்தூதுவர்கள்
ஒற்றொருவனவனோடினான்கானகத்தே
காடுஞ்செடியுங் கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையுமல்லோ அதிகவனந்தாண்டி
வேங்கையடர்த்தவனம் வெண்களாப்பூத்தவனம்

கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
வனமாய்வனந்தாண்டி வாரார்கள் தூதுவர்கள்
சூரியன்வனத்தே சுருக்காய்நடந்துவாரார்
ராமரிஷிவனத்தே நடந்தார் நலமாக
முருக்கமகாரிஷிவனத்தே முடிமன்னர்போய்நுழைந்தார்
அந்தவனத்திலே ஐவரையுங்கண்டார்கள்
பர்ணசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டார்கள்
அவருமறியாமல் ஆணழகர் திரும்பிவந்தார்
காடுஞ்செடியுங் கரியமலைதாண்டிவந்தார்
அஸ்திநபுரம்நாடி ஆணழகர்திரும்பிவந்தார்
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்முன்னேவந்தார்
ஆண்டவரேஐயாவே அடியேன்சரணமென்றார்
தென்னமுடிவேந்தன் திரியோதிரனேதுசொல்வான்
போனீரேதூதுவரே புதுமையென்னசொல்லுமென்றார்
காளிபெரண்டனவன் கடிகியேயேதுசொல்வான்
முருக்கமகாரிஷிவனத்தே முடிமன்னரைகண்டுவந்தோம்
பர்ணசாலைமேலேயல்லோ பஞ்சவரைக்கண்டோமையா
அவ்வார்த்தைகேட்டானே அரவக்கொடியோனும்
சிந்தைகலங்கியே திடுக்கிட்டுமெய்மறந்து
மனமுந்திடுக்கிட்டு வாய்திறந்தேதுசொல்வான்
இப்பெரியசபைதனிலே யிருக்கின்றராஜர்களே
அம்பலத்தில்கொலுவிருக்கும் அரசர்முடிமன்னர்களே
இத்தண்டராஜர்களே இயலானமந்திரிகளே
கத்திகட்டுந்துரைகளே கனத்தமுடிமன்னர்களே
ஆண்மையுள்ளதுரைகளே அல்லவருங்கேட்டிருங்கள்
என்வார்த்தைதள்ளாமல் ராஜர்களேகேட்டிருங்கள்
பாஞ்சாலன்பெற்றெடுத்த பைங்கிளிதுரோபதைமேல்
தோருவடிவழகி துரோபதைமேலெந்தனுக்கு
ஆசையலையுதுகாண் ஆரணங்குதுரோபதைமேல்
நினைக்கநினைக்கவேதான் நெஞ்சமுருகிறது
ஆசையவள்மேலே ஆதரவுபாய்மேலே

சிந்தையவள்மேலே சீவன்பதைக்குதுகாண்
கன்னியர்மேலாசையல்லோகாமவிடாய்கொள்ளுதுகாண்
மயிலணைமேலாசையல்லோ மறக்கவில்லையெந்தனுக்கு
அவளாசையினாலே யவளைவரவழைத்தேன்
வணங்குவாளென்று சொல்லி வார்த்தைபலபேசினேனே
இணங்குவாளென்று எத்தனையோசொன்னேன்காண்
வணங்காமற்போனாளே மாதுகருங்குழலாள்
இணங்காமற்போனாளே ஏலப்பசுங்கிளியாள்
வந்திருந்து அம்பலத்தில் வார்த்தைகள்பேசினேன்காண்
வாருமிருமென்றேன் மடிமேலேயேறுமென்றேன்
மார்போடேமார்பணைந்து மருவிமுத்தந்தாருமென்றேன்
தோளோடேதோளணைந்து சுகமுந்தாருமென்றேன்
வாரும்நீதுரோபதையே வலதுதுடையேரென்றேன்
அவள்மெத்தபேச்சுகளு மகந்தைகளும்பண்ணினாளே
அகந்தைகள்பண்ணுகிறாள் ஆகடியஞ்சொல்லுகிறாள்
ஆகையால்துரோபதையை அடித்துதுரத்திவிட்டேன்
ஆரணங்கைக்கூடுகைக்கு ஆசைமெத்தத்தோணுது
மயிலணையைகூடுகைக்கு மனதுமெத்தத்தோணுது
அவள்மீதிலாசைகொண் டல்லவர்க்குச்சொல்லுகிறேன்
அவளையுங்கொண்டுவர அரசருண்டோசொல்லென்றான்
பாஞ்சாலன்பெண்ணை பாவைதுரோபதையை
சிறைபிடித்துவர துரைகளுண்டோசொல்லும்
கொண்டுவருவோர்க்கு கோடிதனந்தருவேன்
அழைத்துவருவோர்க்கு ஆனைசேனை நான்தருவேன்
சீமையும்பூமியும் துரைத்தனங்கள் நான்கொடுப்பேன்
ஐவரறியாமல் ஆரணங்கைக்கொண்டுவந்தால் [தால்
துரோபதையைகொண்டுவந்துபடுக்கமஞ்சமேத்திவைத்
பாவையரைக்கொண்டுவந்து படுக்கைமஞ்சமேத்திவைத்
என்னுடையநாடுகளும் எழில்கருணன் ஆதீனம் [தால்
சீமைகளும்பூமிகளும் செல்வமும்நான்தருவேன்
வல்லாண்மைக்காரருண்டோ மந்திரியெழுந்திருங்கள்

போறதுரைகளுண்டோ புண்ணியசேனைகளே
பிடியுங்கள்தாம்பூலம் பேர்பெரியராஜர்களே
என்றுசொல்லத்தான்கேட்டு இயலானராஜாக்கள்
அனைவரும்பேசாமல் அஞ்சிபயந்திருந்தார்
சிந்துதேசாதிபதி தீரன்மகன்சயிந்தவனும்
சொல்லுவான்வாய்திறந்து துரைகளறிந்திருக்க
மைத்துனரே நீர்கேளும் மகாராஜபூபதியே
தோராவடிவழகி துரோபதைநாயகியை
பத்துநாட்குள்ளாகப் பைங்கிளியைக்கொண்டுவாரேன்
எட்டுநாட்குள்ளாக இளங்கொடியைக்கொண்டுவாரேன்
ஐவரறியாமல் ஆரணங்கைக்கொண்டுவாரேன்
மன்னரறியாமல் மயிலனையைக்கொண்டுவாரேன்
தாம்பூலந்தான்பிடித்தான் தாமமுடியானும்
அந்தமொழிதான்கேட்டு அரவக்கொடியோனும்
சந்தோஷப்பட்டானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்தானே வேந்தன்திரியோதிரனும்
உள்ளங்குளிர்ந்துசிலித் துடம்பெங்கும்பூரித்து
அள்ளியேதாம்பூலம் ஆணழகர்கைகொடுத்தார் [ன்
போட்டிருந்தஆபரணம்பொட்டெனவேதான்கொடுத்தா
இட்டிருந்தபூஷணங்கள் இஷ்டமுடன்தான்கொடுத்தான்
பொன்னிழைத்தபட்டாடை போர்த்தானேமேலாக
போய்வாருமென்றுசொல்லி புகழ்வேந்தனுரைத்தான்
வெகுமானம்பெற்றுமல்லோ விடைபெற்றுமன்னவனும்
பயணம்பயணமெனப் பயணபேரியடியுமென்றான்
ஆனைசேனைபரிவாரம் அடங்கலும்பயணமென்றான்
ஆனையின்மேல்சண்டாவும் அழகுநிசான்பிடியுமென்றான்
ஆனையின்மேல்பேரிகையை அடியுமென்றோசையுடன்
குதிரையின்மேல்டங்காவும் கொடிமுரசுசீலைகளும்
பாஞ்சசன்யம்தேவதத்தம் பலவாத்தியமுழங்க
கச்சரிகைவீரரணம் தாக்கிமுரசறைய
அக்ரோணிசேனை அடங்கலும்பயணமென்றான்

அமராதரும்சமராதரும் அர்த்தரதத்தானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் காஸ்மீரக்கன்னடரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
சட்டைகழட்டாத சகலவரானவரும்
போட்டசட்டைவாங்காத பொந்திலியரானவரும்
இட்டசட்டைவாங்காத எழிலானமன்னவரும்
குப்பாசம்வாங்காத குச்சிலியர்மன்னவரும்
ஆனையரசுரிமை அளவற்றவன்னியரும்
வெள்ளித்தடிக்காரர் வேணலட்சங்கோடியுண்டு
மகுடமுடிதரித்த மன்னவர்களானவரும்
பட்டணத்துராஜர்களும் பார்மகுடவர்த்தனரும்
அத்தனைபெயருடனே ஆணழகன்பயணமானான்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
சல்லடங்கள்தான்போட்டு தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
பட்டுதட்டிகட்டியல்லோ பாங்கெடுத்துதான்சொருகி
முத்தினுருமாலே முகத்தழகாய்கட்டினானே
இட்டான்திருநாமம் எரிகின்றசூரியன்போல்
பொன்னிழைத்தபட்டாடை போர்த்தானேமேலாக
அம்புவில்லுங்கைபிடித்து ஆணழகன்வெளியானான்
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்கொண்டுவந்தான்
தேரைசுற்றிதெண்டனிட்டு சிவ்வென்றுயேறினான்
ஏறினபோதே எடுத்தார்நெடுங்குடையை
பக்கத்தில்வெண்சாமரம் பட்டுக்குடைகவிய
இருபக்கம்வெண்சாமரை ரத்தனக்குடைகவிய
முத்துக்குடைகவிய முடிமன்னர்தான்சூழ
மேளதாளமுழங்க வேந்தர்களும்பயணமிட்டார்
வாரான்சயிந்தவனும் மச்சுரதம்குலுங்க

தெற்குத்தெருதாண்டி திருவீதிதான்தாண்டி
ஆயிரந்தெருத்தாண்டி அங்காடிதான்தாண்டி
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
பட்டணத்தெருதாண்டி பார்மன்னன்வாரானே
செந்தூளெழும்புகுது தெருவெல்லாங்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
வாரான்சயிந்தவனும் மச்சுரதங்குலங்க
அப்போதுசயிந்தவனும் ஆலோசனைகள்பண்ணி
துரோபதையைக்கொண்டுவர துரிதமுடன்போரோமே
போரவிடந்தனிலே புதுமைகள்நாமறியோம்
வழியிற்சகுனங்கள் மனதில்குறிப்போமென்று
தருமதேவதையேநீ சாட்சிசொல்லவேணுமென்றார்
அப்போசகுனங்கள் ஆகுதுமன்னனுக்கு
பொல்லாச்சகுனங்கள் பொருந்துதுமன்னனுக்கு
வாயசமிடமாச்சு வலியனும்வலமாச்சு
காடைவலமாச்சு கள்ளரெதிர்பட்டார்கள்
சாரைகுறுக்காச்சு சயிந்தவன்மேற்பல்லிசொல்லும்
குத்திப்பிடியுமென்று கோட்டானும்ஓலமிடும்
வெட்டுவெட்டென்றுசொல்லி வேடரெதிரானார்கள்
ஓரியலரிடவே ஓர்பார்ப்பாரெதிரானன்
பச்சைமரத்திலே பதுங்கியிருந்தபல்லியது
பட்டமர்மேறி பலபலவென்றுசொல்லிடுமாம்
எட்டுசொல்லாந்தையது திட்டெனவேமரணமென்று
நெருப்பெடுத்தோர்கிழவி நின்றிழவுதான்கொடுத்தாள்
இந்தச்சகுனமெல்லாம் இராஜனும்கண்டானே
நினையாத்துயரமெல்லாம் நினைத்துமனமுருகி
எண்ணுமெண்ணி இருந்துவிசாரமிட்டான்
இச்சகுனந்தன்னாலே இறந்துவிடப்போறோமோ
வந்தபயணமினி வழிதிரும்பப்போறோமே
திரும்பிஞானமானகில் சிரிப்பார்கள்ராஜாக்கள்
என்னைமதியார்கள் எளிதஞ்செய்வார்கள்

வந்துதிரும்பாவிட்டால் மதியான்திரியோதிரனும்
அன்றெழுதுங்கர்த்தன் அழித்தெழுதப்போறதில்லை
எமனெழுத்தல்லோ எள்ளளவுங்குறையாது
வரும்வினைகள்வந்தாலே மடியேந்தவேண்டாமோ
உள்ளபடிக்கு ஒருநாளுங்குறையாது
என்றுமனதிலெண்ணி இராஜனும்போய்நடந்தான்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆழஞ்சுனைதாண்டி அதிகவனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெங்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
புலிகள்கரடிகளும் பெருத்தவனந்தாண்டி
சூரியன்வனந்தனிலே சேர்ந்தானேசயிந்தவனும்
அன்றுமுகாமங்கிருந்து அடுத்தொருமற்றுநாள்
காலையில்பயணமாகி கடுகவழிநடந்தான்
ராமரிஷிவனத்தில் நடந்தார்கள்சேனையெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அடுத்தொருமற்றுநாள்
அந்தவனந்தனிலே அத்தண்டஜனம்நிறுத்தி
உத்தண்டமன்னவனும் ஒருத்தனும்தேரேறி
முருக்கமகாரிஷிவனத்தில் மூடிநடந்தானே
சயிந்தவனும்பர்னக சாலைதேடிவாரானே
தூரரதம்நிறுத்தி துரோபதையாள்முன்னேவந்தான்
பர்னசாலையிலே பத்தினியாள்வீற்றிருந்தாள்
ஒருத்தியுமாகவேதா னுத்தமியாள்வீற்றிருந்தாள்
பாவிசயிந்தவனும் பர்னசாலைமுன்னேவந்தான்
அப்போதுபாஞ்சாலி ஆரணங்குதுரோபதையும்
கண்டாள்சயிந்தவனைக் கட்டழகிதுரோபதையும்
அண்ணனைக்கண்டு அலறியேஓடிவந்தாள்
தமயனைக்கண்டாளே தானெழுந்துசரணமிட்டாள்
வட்டமணைபோட்டு மணித்தடுக்குத்தான்போட்டாள்
இருமிருமென்றுசொல்லி யிளங்கொடியாள்வந்திடவே
அப்போதுசயிந்தவனும் ஆணழகன்தானெழுந்து

வட்டமணைமேலே வந்திருந்தான்சயிந்தவனும்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
இந்தவனந்தனிலே ஏதுக்காய்வந்தீரோ
வனசாரிவந்தீரோ மகாதவமாய்வந்தீரோ
அண்ணாவேநீர்வந்த அதிசயத்தைச்சொல்லுமென்றாள்
மாலைமுடியானும் வாய்திறந்தேதுசொல்வான்
ஐவரும்நீருமாக ஆரணியம்வந்தீர்கள்
வனவாசம்வந்தீரென மண்டலத்தில்பேராச்சு
பார்க்கும்படியாக பைங்கிளியேவந்தேனே
உங்களிடசீமையையும் உலகத்தைவிட்டுவிட்டு
வனவாசம்வந்ததொரு வகையென்ன தங்கையரே
இங்கேபரதேசம் ஏன்வந்தீர்தங்கையரே
ஒன்றுமொளியாமல் உரையுங்காண் தங்கையரே
அப்போதுதுரோபதையா ளாரணங்குதான்கேட்டு
தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
அண்ணாவேநாங்கள்வந்த அதிசயத்தைநீர்கேளும்
பரதேசம்வந்தோமெங்கள் பரிதாபங்கேளுமென்றாள்
தருமாபுரத்தையல்லோ தாரணியையாண்டிருந்தோம்
ஐவரையுங்கொல்லவென்று அரசன்துரியோதிரனும்
பஞ்சவரைக்கொல்லவென்று பாவிதுரியோதிரனும்
விருந்தருந்துமென்றுசொல்லிவேந்தரைக்கொல்லவென் [று
பேரன்குமாரனுக்கு பூணூற்கலியாணமென்று
பூணூற்கலியாணம் பொருத்தந்தப்பிப்போகுதென்று
உடனேவரத்தருமருக்கு ஓலையெழுதிவிட்டான்
மெய்யாலும்ஓலையென்று வேந்தர்மனதிலெண்ணி
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அஸ்திணபுரம்நாடி
வாரவழிதனிலே மன்னரைக்கொல்லவென்று
வசநாபிதண்ணீர்பந்தல் மன்னவர்க்குப்போடுமென்றான்
தப்பிப்பிழைத்தார்கள் சுவாமியுடபுண்ணியத்தால்
நடக்கும்வழிதனிலே நச்சுமுள்ளை நாட்டினான்
ஊசிஎழுகூசி ஒருகோடிநாட்டினான்

கூரம்புகத்திகளும் குறுக்காகபுதைத்துவைத்தான்
கொடிமுள்ளுகத்திகளுங் குறுக்கேபுதைத்துவைத்தான்
தண்ணீர்குடிக்குமே சாவார்களென்றுசொல்லி
பாரவசிகளியே பருவதம்போல்நாட்டிவைத்தான்
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
அதற்கும்பிழைத்தார்கள் ஐவர்பஞ்சபாண்டவர்கள்
தப்பிப்பிழைத்தார்கள் சுவாமியுடபுண்ணியத்தால்
மாளிகைவாசலிலே வந்தபிறகாக
பொய்குழியைவெட்டிவல்லோ போதமலிதர்வைத்தார்
பொய்சிங்காதனங்களிட்டுப் புகழ்வேந்தர்பஞ்சவரை
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
அங்கும்பிழைத்தார்கள் ஐவர்பஞ்சபாண்டவர்கள்
எண்ணையிட்டுகொள்ளுமென வன்னையிட்டழைத்தானே
மல்லர்களைவிட்டு வதைத்தெரிந்துபோடுமென்றான்
அதற்கும்பிழைத்தார்கள் ஐவர்பஞ்சபாண்டவர்கள்
தப்பிப்பிழைத்தார்கள் சாமியுடபுண்ணியத்தால்
பவளத்திருக்குளத்தில் பாரவசிநாட்டினானே
நீரிற்கழுமாட்டி நீர்மூடன்குளியுமென்றான்
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
தப்பிப்பிழைத்தார்கள் சாமியுடபுண்ணியத்தால்
உண்கிறசோற்றிலேதான் ஒருக்காலேநஞ்சைவிட்டான்
குடிக்கிறதண்ணீரில் கொலைக்காரன்நஞ்சைவிட்டான்
சோழிவிளையாடி சொக்கட்டான்சூதாடி
ஆடாதசூதாடி அரவக்கொடிவேந்தன்
சீமைதுரைத்தனங்கள் தேசமுழுதம்படைத்தான்
நாடுபறித்தான் நகரெல்லாந்தான்பறித்தான்
ஆணிப்பொன்தேரும் அணிமணிசிங்காதனமும்
அந்தமுதலாடுமாடும் அடங்கலுந்தான்கெலித்தான்
ஐவரையுந்தான்கெலித்தான் ஆஸ்தானமுங்கெலித்தான்
ஐவரையுங்காவலாக அரையிலடைத்துவைத்தான்
பாரவிலங்குகொண்டு பருவிலங்குபூட்டினானே

எழுலட்சம்பெருவிலங்கு எடுத்துவைத்துபூட்டினான்
காற்று நுழையாத கல்லறைத்தன்கிடங்கில்
தள்ளியேகொண்டுவைத்து நடிவீரர்காவல்வைத்தான்
சுத்திதவரங்கம் நாலுவரைகாவல்வைத்தான்
அறையிலிருந்தவன்னை அம்பலத்திற்றள்ளிவைத்தான்
மூலையிலிருந்தவன்னை முற்றத்திற்றள்ளிவைத்தான்
ஒருவர்மயிர்பிடிக்க ஒன்பதுபேர் துகிலுரிய
இருவர்மயிர்பிடிக்க இருபதுபேர்பின்னிழுக்க
பாவிமயிர்பிடிக்கப் பத்துபேர்துகிலுரிய
ஆடம்பலத்தே அவையார்சபைநடுவே
பேரம்பலத்தே பெரியோர்சபைநடுவே
அரசர்சபைதனிலே அலையத்துகிலுரிந்தான்
வாய்வரிசையில்லாமல் வம்பாட்டம்பண்ணினானே
வாடிபோடியென்றேசி வலதுதுடையேறுமென்றான்
துஷ்டத்தனங்கள்பண்ணும் திரியோதிரன்பாவி
ஆகடியம்பேசினானே அம்பலவர்தன்சபையில்
பாரவனவாசம் பரதேசம்ஓட்டிவிட்டான்
பன்னிரண்டுதன்வருஷம் பாரவனந்திரியுமென்றான்
மறைவாயொருவருஷம வந்திருமென்றுசொன்னான்
பதின்மூன்றும்சென்றபின்பு பட்டணத்தேவந்தாக்கால்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுதாரேனென்றான்
வந்துவிட்டோமண்ணாவே வனமேகுடித்தனமாய்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
மண்ணிவைத்தசீமாடு வனமேகுடித்தனமாய்
வேடரைப்போலவேதான் வில்லியரைப்போலாக
கள்ளக்குறவரைப்போல் காட்டிலிருக்கின்றோம
எங்கள்குறைதீர எக்காலஞ்சென்றிடுமோ
நாங்கள்சுகமாக ராஜ்ஜியத்தையாள்வோமோ
பஞ்சவர்கள்சுகமாகப் பாருலகம்ஆள்வாரோ
நீர்-அறியாதுபோலாக அண்ணாவேகேட்கவந்தீர்
தெரியாதுபோலாக கேட்கவந்தீரண்ணாவே

ஒன்றுமறியீரோ உத்தமரே அண்ணுவே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான்மன்னவனும்
பகுதிப்பணம்வாங்கப் போயிருந்தேன்பைங்கிளியே
சேனைத்திரளுடனே சென்றிருந்தேன்வெகுதூரம்
போனபிறகாக புதுமைபிறந்ததுகாண்
காற்றுவிசேஷமாகக் கேட்டுவந்தேன்தங்கையரே
நான்-அறிந்தேனேயாமாகில் அவகேடுவாராது
அன்றிருந்தேனுனலே அம்பலமுமேற்றுவரோ
துகிலுரியப்பார்ப்பேனே துரோபதைநாயகியே
எந்தன்மனம்பொறுத்து இருப்பேனே தங்கையரே
நான்-வந்தபிறகிந்த வயணமறிந்தேன்காண்
மனதுதரியாமல் வந்தேனுனைக்காணச்
சிந்தைமனங்கலங்கித் தேடிவந்தேன்தங்கையரே
உன்வார்த்தைகேட்டபின்பு உள்ளமுருகுதம்மா
நீ-சொன்னபடியாலே யென்சிந்தைகலங்குதம்மா
நீ-பத்தினியாளென்றுசொல்லி சற்றுமறிவானே
உத்தமியாளென்றுசொல்லி ஊதாரியறிவானே
காமாட்சியென்கிறதை கழுசிறையணறிவானே
ஏதுமறியாமல் இகட்சிகள்பண்ணிவிட்டான்
ஒன்றுமறியாமல் உதாசினங்கள்பண்ணினனே
அவன்-வாழ்வுங்குலைந்துவிடும் மகிழ்ச்சியடங்கிவிடும்
செல்வமடங்கிவிடும் செருக்குங்குலைந்துவிடும்
பொறுத்தினலேயம்மா பொல்லாங்குவாரதில்லை
அவனுக்கேநாசகாலம் ஆகுதுபொறுத்திரம்மா
அஞ்சாதேதங்கையரே ஆயாசங்கொள்ளாதே
நீ-ஆயாசப்படுவதெல்லா மவனுக்கேகேடுவரும்
பொறுத்தவர்பூமியாள்வார் பொங்கினவர்காடாள்வார்
ஏதுக்குமஞ்சாதே என்பிறப்பேதங்கையரே
பாரப்புலிபோலே பஞ்சவர்களெங்கேயம்மா
வீரப்புலியதுபோல் வீரர்களெங்கேயம்மா
மைத்துனன்மாரைவர்களும் மகாராஜரெங்கேயம்மா

ஐவரைக்காணவென்று ஆவலாய்வந்தேனம்மா
அவர்-போனவிடமறியேன் போயிருக்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
பார்க்கமனதாகிப் பைங்கிளியேவந்தேனம்மா
காணமனதாகிக் கானகத்தேவந்தேனம்மா
இன்னேரமாச்சுதே இராஜாக்களைக்காணேமம்மா
தனியாகவுன்னைவிட்டு தருமரெங்கேபோனரோ
ஒண்டியாய்வுன்னைவிட்டு உத்தமர்களெங்கேபோனர்
இன்றுநான்காணுதற்கு இல்லாமற்போச்சுதம்மா
இன்னமொருவேளை இவர்களை நான்காணுகிறேன்
அவர்-ஆணாய்ப்பிறந்தவர்களலைந்தாலுங்குற்றமில்லை
நீ-பெண்ணாய்ப்பிறந்தவள்தான் பின்தொடரநீதியுண்
ஐவருடனேநீ அலைந்துதிரிவானேன் [டோ
அழுதுதிரி ானேன் அல்லற்படுவானேன்
என்-மாளிகைவாசலுக்கு வாரீரோதங்கையரே
பாரவனந்திரிந்து பஞ்சவர்கள்வாரமட்டும்
எந்தனதுமாளிகைக்கு வாரீரோதங்கையரே
அரண்மனைக்குந்தனை நா னழைத்துபோகவந்தேன்
வெதும்பிவிடாய்த்துநீ வெளியில்திரிவானேன்
வாரீரோதங்கையரே மாளிகைக்குகொண்டுபோறேன்
என்று-வருந்தியழைத்தானே மாபாவிசயிந்தவனும்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குமேதுசொல்வாள்
ஐவரையும்விட்டுவிட்டு வருவேனோ அண்ணாவே
விட்டுப்பிரியவேதான் வேந்தேமனம்வருமோ
அண்ணாவேநீர்கேளும் ஆனலொருவார்த்தை
நான்வரவேணுமென்று மனமுழுமக்கிருந்தால்
வனம்போனபஞ்சவர்கள் வருகிறபோதாச்சு
ஐவர்வரும்வேளை ஆச்சுது அண்ணாவே
ஐவரைகேட்டுநீ அழைத்துப்போமண்ணாவென்ருள்
பஞ்சவரைக்கேளுமண்ணா பாரவனந்துலைத்துவாரேன்
ஐவர்வரும்வேளை ஆச்சுது அண்ணாவென்ருள்



சயிந்தவன் துரோபதையை தேர்மீது எடுத்துப்போகுதல்.

இவ்வார்த்தைதான்கேட்டு இடும்பன்சயிந்தவனும்
எண்ணாதுமெண்ணியல்லோ இருந்துவிசாரமிட்டான்
ஐவர்வந்தால்மோசமல்லோ ஆகாதுகாரியங்கள்
என்றுசயிந்தவனும் எண்ணினான்தன்மனதில்
காவலர்கள்வந்தாலே காரியங்களாகாது
கையிலிருந்ததொரு கத்தியைத்தாழவைத்து
கடுகியெழுந்தானே கட்டழகன்சயிந்தவனும்
ஐவர்வந்தால்சேதிசொல்லு மஸ்தினாபுரம்போறேன்
இட்டுன்னைபோகவென்றே இந்நேரம்காத்திருந்தேன்;
ஐவரையுங்காணேமம்மா ஆரணங்குதுரோபதையே
இன்னமொருவேளை இட்டுக்கொண்டுபோறேனம்மா
ஐவருக்குச்சொல்லி அழைத்துக்கொண்டுபோறேனம்மா
போகவிடைதாரும் போய்வாரேன்தங்கையரே
என்றுமவன்கேட்க ஏதுசொல்வாள்துரோபதையும்
அப்படியேபோய்வாரு மண்ணாவேயென்றுசொன்னாள்
விடைபெற்றுசயிந்தவனும் வேந்தனெழுந்திருந்து
பர்ணசாலைவிட்டிறங்கிப் பார்வேந்தன்போகலுற்றான்
கடுகநடந்தானே கட்டழகன்சயிந்தவனும்
அழகுரதமேறி அக்கானகந்தாண்டி
அவன்மச்சுரதமேறி வாரானேமன்னவனும்
போரான்சயிந்தவனும் பொன்னினிரதமேறி
அநேகதூரம்போனபின்பு ஆரணங்குதுரோபதையாள்
கத்திதனைக்கண்டாளே கட்டழகிபாஞ்சாலி
வைத்துமறந்தானே மன்னவனுமாயுதத்தை
இங்கேவைந்துதான்மறந்தானென் றுமவளெழுந்து
கத்திதனையெடுத்துக் கடுகிநடந்தாளே
அண்ணாசயிந்தவனே அநேகதூரம்போகாதே
நில்லுங்காணண்ணாவே நெடுந்தூரம்போகாதே
என்று-கூடநடந்தாளே கொம்பனையாள்துரோபதையும்
அப்போசயிந்தவனும் அழும்புநினைவுகொண்டு
கேளாதுபோல நடந்தான்கெடுநினைவாய்

அறியாதுபோலே நடந்தானே ஆணழகன்
கூடநடந்தாளே கொம்பனையாள் துரோபதையும்
சேரநடந்தாளே தேன்மொழியாள் துரோபதையும்
அண்ணாவே அண்ணாவென்று அக்கணமே கூச்சலிட்டாள்
அழும்பன்சயிந்தவனுக் கப்போதான் கேட்டதுபோல்
திரும்பியவன்பார்த்து தேரை நிறுத்தினானே [தை
அவன்-நெடுந்தூரம்வந்தபின்பு நிறுத்தினான் தன்ரதத்
அப்போ துரோபதையு மருங்கிளியாளே துசொல்வாள்
அண்ணாவேஎன்காணும் அநேகதூரம்வந்துவிட்டாய்
ஆயுதத்தைநீமறந்து அநேகதூரம்வந்தீரே
இந்தாருமென்றாளே ஏலக்கருங்குழலாள்
அப்போசயிந்தவனும் ஆணழகனேது சொல்வான்
எட்டியேதாருமென்றான் இந்தபடிசயிந்தவனும்
அப்போ துரோபதையாள் ஆரணங்குயேதுசெய்தாள்
ஒருபடியேறியல்லோ உத்தமியாளிந்தாவென்றாள்
அப்போசயிந்தவனும் ஆணழகனேது சொல்வான்
எட்டவில்லைகத்தியென்றான் இன்னங்கொடுப்பதற்கு
மற்றுமொருபடியை மயிலனையாளேறினாளே
அப்போதும்எட்டவில்லை யென்றானே ஆணழகன்
மூன்றும்படியேறி மொய்குழலாள் நின்றுகொண்டு
ஆயுதங்களிந்தாவென்றாள் ஆரணங்கு துரோபதையும்
சயிந்தவனுந்தான்பார்த்து சந்தோஷமாகியல்லோ
நாம்-வந்ததொருகாரியங்கள் வசப்பட்டதென்றுசொல்லி
மெத்தமனமகிழ்ந்து மெல்லியரைக்கொண்டுபோக
அவள்ஏறிப்போனதேயல்லோ ஏகவிட்டான் தன்ரதத்தை
காற்றாய்ப்பறந்ததுகாண் கட்டழகன்தன்ரதமும்
போகுதேயந்தரமாய் பொல்லாதகானகத்தில்
தோருவடிவழகி துரோபதையுமேது சொல்வாள்
அண்ணாசயிந்தவனே அழிநினைவுதேடிவிட்டாய்
ஐவர்களுந்தானறிந்தால் அனர்த்தம்வருமுந்தனுக்கு
பஞ்சவர்களறிந்தாலே பழுதல்லோவுன்குடிக்கு

நிறுத்தும்ரதத்தையென்றாள் நிறுத்தானேபாதகனும்
அப்போதுதுரோபதையாள் ஆரணங்குமனங்கலங்கி
சிந்தைகலங்கியவள் திடுக்கிட்டுமெய்மறந்து
மாதுமனஞ்சலித்து மயிலணையாளேதுசொல்வாள்
அப்போதுதுரோபதையாள் அபயக்குறலிடுவாள்
ஐவர்பஞ்சபாண்டவரே அபயமபயமென்றாள்
ஆகாயவாணியம்மா அல்லவரும்பார்த்திருங்கள்
ஐயன்பிடாரிகளே அந்தரதேவதையே
அந்தரதேவதையே சந்திரசூரியரே
காளிகளேகூளிகளே கானகத்துபக்ஷிகளே
இந்தவனத்தி லிருக்குமிருகங்களே
பாருங்கள்பாருங்கள் பாவியவன்செய்கிறதை
எல்லோரும்பாருங்கள் இவனுடையதுற்குணத்தை
என்னைச்சிறைபிடிக்க இழுத்துகொண்டுபோகிறானே
பஞ்சவர்க்குத்தானுரையும் பார்த்திருந்தபட்சிகளே
ஐவர்க்குத்தானுரையும் ஆகாயவாணியம்மா
நாய்க்குக்கிடைக்குமோ நல்லமுழுத்தேங்காய்
செரிப்பேனோஉந்தனுக்கு சேறுபந்துநான்தருவேன்
உனக்காவனென்றுபாராதே அடிப்பேன்முறத்தாலே
என்றேதுரோபதையு மிளங்கொடியாளேதுசெய்தாள்
ஐயோசிவனேயென்று அழுதுபுலம்புகிறாள்
மாயவரேசுவாமியென்று மாதுபுலம்புகிறாள்
அப்போதுபஞ்சவர்கள் அரன்பூசைதான்முடித்து
அரிபூசைசிவபூசை எல்லாமவர்முடித்து
நடந்தார்கள்பஞ்சவர்கள் ஞாயிறுதித்தாப்போல்
வாரார்கள்பஞ்சவர்கள் வடக்கெழுந்தசூரியன்போல்
பர்ணசாலைதன்னருகே பஞ்சவர்கள்வந்தார்கள்
அங்கேதான்துரோபதையை ஆரணங்குகாணாமல்
காணாமல்பஞ்சவர்கள் கலங்கினாரன்னேரம்
தக்கப்புகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்து

வீமாமதகரியே வில்வேந்தாவென்பிறப்பே
நெருப்பிற்பிறந்தவளை நீலவர்ணன்தங்கையரை
அக்கினியில்வந்துதித்த அபிஷேகப்பத்தினியை
பாஞ்சாலன்பெற்றபெண்ணை பைங்கிளியைக்காணேனே
அழகில்மிகுந்தபெண்ணை ஆரணங்கைக்காணேனே
ஆரெடுத்துப்போனாரோ அறியேனேதம்பியரே
எவரெடுத்துப்போனாரோ ஏதுமறியேனே
பார்த்துவாதம்பியென்றார் பாரமதகரியை
என்றதுகேட்டு எழுந்தார்கள்தம்பியர்கள்
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஆயுதங்கள்தானெடுத்து அடைவுடனேதானடந்தார்
தெற்குத்திசையிலே தேர்விஜயன்தேடிவாரான்
வடக்குத்திசைநோக்கி வாரான்சகாதேவன்
மேற்குத்திசையிலேதான் நகுலனுந்தேடிவாரான்
கிழக்குத்திசைநோக்கி வீமனுந்தேடிவாரான்
அந்தவனங்களிலே ஆராய்ந்துவாரபோது
தேரடியைக்கண்டுமல்லோ திரும்பினான்வீமனவன்
காற்றுவேகமாகவேதான் கடுகிவந்தான்வீமனவன்
எட்டிப்போய்த்தான்பிடித்தான் இயலானரதத்தையவன்
வீமனைக்கண்டானே மெல்லிநல்லாள்துரோபதையும்
அழுதகண்ணைத்தான் துடைத்தா ளாயாசமுந்தீர்ந்தாள்
கைகொடுத்தான்துரோபதைக்கு கடுகயிறக்கிவிட்டான்
கண்டுஇடிவிழுந்தான் காளைசயிந்தவனும்
பார்த்துஇடிவிழுந்தான் பாவிசயிந்தவனும்
சிந்தைகலங்கியவன் திடுக்கிட்டுமெய்மறந்து
மூர்ச்சையாய்விழுந்தானே முடிமன்னன்சயிந்தவனும்
ஒருகையால்ரதந்தூக்கி உதிரடித்தான்மண்மேலே
அவனுடையதேர்சட்டமும் அழகுகுதிரைகளும்
சட்டஞ்சட்டமாகவேதான் தவிடுபொடியாச்சுதங்கே
தேருமுறிந்ததுகாண் சேர்ப்பித்தான்மண்மேலே
வெற்றிமதயானை வீமனவனேதுசெய்வான்

ஏதடிபெண்ணே நீ யிளங்கொடியே துரோபதையே
வந்தவயணமென்ன வகையாகச்சொல்லுமென்றான்
அப்போது துரோபதையா ளாரணங்குதான்பார்த்து
அஞ்சிப்பயந்துமவள் அருங்கிளிபாளேதுசொல்வாள்
வந்தானேசயிந்தவனும் வாருமிநமென்றுசொன்னேன்
நாம்-வனவாசம்வந்ததொரு வயணங்கள்கேட்கையிலே
சொன்னேன்வயணமெல்லாம் சூதாகத்தான்கேட்டு
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயுதத்தைகீழேவைத்தான்
மறந்துவிட்டானென்று மன்னவரேநானெண்ணி
ஆயுதத்தைதானெடுத்து அண்ணுவென்றோடிவந்தேன்
எட்டிக்கொடுமென்றான் ஏறினேன்தேர்மேலே
ஏறினபோதே எகிறவிட்டான்தன்ரதத்தை
இவ்வளவுசேதியென்று ளிளங்கொடியாள் துரோபதையு [ம்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆங்காரவீமனவன்
வெற்றிமதயானை வீமனவனேதுசெய்தான்
காட்டுக்கொடிபிடிங்கி கடுகியேயோடிவந்தான்
மூர்ச்சைதெளிந்தானே முடிமன்னன்சயிந்தவனும்
காட்டுக்கொடியாலே கட்டினான்சயிந்தவனை
அப்போதுமதவீமனவன் ஆங்காரங்கொண்டவனும்
தன்காலில்கட்டிக்கொண்டு தான்நடந்தான்வீமனுமே
பர்னசாலைதன்னருகே பாவிதனைக்கொண்டுவந்தான்
தருமருக்குமுன்னாலே தள்ளிக்கொண்டுவந்தானே
கண்டாரேதர்மராயர் காளைசயிந்தவனை
வாருங்காண்மைத்துனரே வந்தீரெனைத்தேடி
தேடியேவந்ததென்ன சீரானகானகத்தில்
வந்தவயணமெல்லாம் வாய்திறந்துசொல்லுமென்றார்
தருமரவர்கேட்கையிலே தார்வேந்தன்வாய்திறந்து
மாபாவிசயிந்தவனும் வார்த்தைகளேதுசொல்வான்
உங்களைப்-பார்க்கபிரியமுடன் வந்தேனேபஞ்சவரே
காணமனதாகி வந்தேனேகாவலரே
வந்தயிடந்தனிலே உங்களை நான்காணவில்லை

தங்கையரைக்கண்டேனே தங்கள்வயணமெல்லாம்
விபரமாய்ச்சொல்லுமென மெல்லியரை நான்கேட்டேன்
அப்போதுரோபதையாள் ஆரணங்குமேதுசொல்வாள்
வனவாசம்வந்ததொரு வயணமெல்லாந்தானுரைத்தாள்
திரியோதிரனுரைத்த சேதிகளைத்தானுரைத்தாள்
அவ்வார்த்தைகேட்டு அறவேமனஞ்சலித்தேன்
இருமிருமென்றுசொல்லி யேகிவழிநடந்தேன்
வச்சிராயுதத்தை வைத்துமறந்துவிட்டேன்
கையிலெடுத்துக்கொண்டு கடுகவந்தாள் தங்கையரும்
எட்டிக்கொடுமென்றேன் இயலாளதங்கையரை
அவ்வளவில்வீமன்வந்து அடித்தானேகெதையாலே
இடுப்பில்கயிறுகட்டி இழுத்துவந்தான்தங்கள்முன்னே
இவ்வார்த்தைசொல்லி இளைத்தாற்போலேயழுதான்
சாயாம்புமன்னவரும் தருமராதுகேட்டு
மெத்தமனமுருகி வேந்தரவரேதுசொல்வார்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்து
கனிகள்பறித்துக்கொண்டு கடுகியேவாருமென்றார்
அந்தச்சொல்தான்கேட்டு அனைவோருங்கோபமுற்றார்
நகுலசகாதேவ ராஜாக்கள்கோபமுற்று
கண்கள்சிவந்துமவர் காந்தாளக்கோபமுற்று
நெற்றிவிழிசிவக்க நீலவிழிபொறிபறக்க
உச்சிமயிர்துடிக்க உத்தமர்களேதுசொல்வார்
அண்ணாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
துரோபதையைகொண்டுபோக வந்ததொருதோஷியற்கு
பாவையரைக்கொண்டுபோக வந்ததொருபாதகற்கு
போஜனமும்போடுவாரோ புகழ்பெரிய அண்ணாவே
அக்கினைகள்பண்ணி அனுப்புவோமிவனையென்றார்
பொல்லாதபாதகனை போகவிடலாகாது
என்றுமவர்கள்சொல்லி எல்லவருமோர்முகமாய்
அனந்தமார்பரெல்லாம் அண்ணருடன்கோபமிட்டார்
தக்கபுகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்



சயிந்தவனை பாண்டவர்கள் அவமானஞ் செய்கிறது.

கோபித்தகோபமெல்லாங் குளிர்ந்தமழையாச்சு
வெளுத்ததைப்பாலென்பார் வெள்ளத்தைத்தண்ணீரென்
கபடறியார்சூதறியார் கள்ளமொன்றுந்தாமறியார் [பார்
பொய்சொல்லார்தருமரவர் புண்ணியனுரேதுசொல்வார்
கோபித்துக்கொண்டா லாகாதுகொற்றவரே
ஆங்காரகெர்வமது ஆருக்குமாகாது
ஆணவமுண்டானு லழிந்துவிடுங்காலமப்பா
பொறுத்தவர்பூமியாள்வார் பொங்கினவர்காடுறைவார்
மனக்குறைவையாதே வந்தவர்க்குப்பசியாற்றும்
கனிகள்பறித்துமே கடிகியேவாருமென்றார்
எதிர்க்கெதிர்பேசவேண்டாம் எழுந்துநடவுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அண்ணரடிவணங்கி
அஞ்சிப்பயந்தெழுந்தார் அழகானதம்பியர்கள்
காட்டில்பழந்தேடிக் கனிகள்பறித்துவந்து [ண்டை
கொண்டுவந்துவைத்தார்கள் கொப்பெனவே அண்ணர
வாங்கியேதருமரவர் ஐமத்துனுபொசியுமென்றார்
மனதிற்பயமுடனே வாங்கிப்பொசித்தானும்
கனிகள்பொசித்துமவன் கைபூசிக்கொண்டானும்
பேய்வாரேனெனப் பொட்டெனச்சரணமிட்டான்
தக்கபுகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்து
மைத்துனர்தன்னுடனே மன்னனை நீயும்போய்
வழிக்கூட்டனுப்பிவைத்து வாருங்காண்தம்பியென்றார்
அப்படியேநல்லதென்று அழகானதம்பியவன்
வெற்றிமதயானை வீமனவன்தானெழுந்து
அண்ணருரைப்படிக்கு அழைத்துவந்தான்சயிந்தவனை
சென்றாரிருவருமாய்ச் சிலதூரமானபின்பு
போர்வீமனேதுசெய்தான் போரவழிதனிலே
ஐந்துகுடுமிவைத்து அப்பவேதலைசிரைத்தான்
மீசைசிரைத்தானே மின்போடிபண்ணினனே
தாடிசிரைத்தானே தலைபோடிபண்ணினனே

தலைபோடிபண்ணினனே தாமமுடியானுக்கு
கரும்புள்ளிசெம்புள்ளி கலந்தழகாய்பொட்டுமிட்டான்
செம்புள்ளிகரும்புள்ளி சேர்த்தழகாய்பொட்டுமிட்டான்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
தக்கப்புகழ்பெரிய தருமரவர்பார்த்து
அர்ச்சுனதம்பியரே அண்ணனைக்காணுமே
மைத்துனரைக்கூட்டிப்போய் வழிவிட்டுவாருமென்றேன்
போய்நெடும்போதாச்சு புகழ்வீரன்வீமனுந்தான்
வீமனைத்தேடி நீ விரைவில்வந்துசேருமென்றார்
கடுங்காளைவீமனைத்தான் கண்டழைத்துவாருமென்றார்
அப்படியேநல்லதென்று அர்ச்சுனனுந்தானெழுந்து
கச்சைவரிந்துகட்டி கருங்கச்சைசுங்குவிட்டு
வில்லெடுத்துக்கைபிடித்து விஜயனும்போய்நடந்தான்
அண்ணனைத்தேடிவந்தான் அர்ச்சுனராஜதுரை
வீமனைப்பார்த்தானே விஜயனருச்சுனனும்
கண்டானேசயிந்தவனைக் காளைமனமகிழ்ந்து
பார்த்தானேசயிந்தவனைப் பலகாலும்பூரித்து
வீமனைத்தான்பார்த்து விஜயனுமேதுசொல்வான்
என்னமரியாதை செய்தீரென்னண்ணாவே [மோ
மொட்டையடிமொட்டையிட்டால் வாகனங்கள்வேண்டா
இருமிருமண்ணாவென்று ஏகிநடந்தானே
கானகத்தில்நுழைந்து கழுதையொன்றுதான்பிடித்து
மலைக்கழுதைகொண்டுவந்து மன்னவனையேற்றினனே
இப்படியாகவேதா னிவரிருக்கும்வேளையிலே
தக்கப்புகழுடைய தருமரவர்பார்த்து
நகுலரைத்தானழைத்து ராஜாக்களைத்தேடுமென்றார்
கானகத்தில்போனவர்கள் கடுகவந்துசேரவில்லை
கண்டழைத்துவாருமையா காளையிருவர்களை
நாமமுடியான் நகுலனதுகேட்டு
அருளருளுமென்னையா அழைத்தோடிவாரேனென்று
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு

ஆயுதங்கைபிடித்து ஆடவிதனில்போய்புகுந்து
பார்த்தண்ணரைத்தேடிப் பரிநகுலனோடிவந்தான்
கானகமெல்லாந்தேடி கண்டானே அண்ணர்களை
கண்டான்சயிந்தனுட கண்காட்சியானதெல்லாம்
பார்த்தான்சயிந்தவனை பாவிக்குயேற்குமென்று
சந்தோஷப்பட்டானே சயிந்தவனைக்கண்டவுடன்
வீமாமதகரியே வில்லேந்துமன்னர்களே
மூவிரண்டுகுடுமிவிட்டு மொட்டையடித்தீரோ
என்னுலுபகாரம் ஏதுசெய்வேன்மைத்துனர்க்கு
சாணியெடுத்துவந்து சரியானவுண்டைபண்ணி
தலைமேலேவுண்டைவைத்து தணிவிளக்குயேற்றிவைத்து
இப்படியாகவே இவரிருக்கும்வேளையிலே
அனேகநெடும்பொழுது ஆனபிறகாக
தருமரவரெழுந்து தம்பியைத்தானழைத்து
மூவர்களும்போனரே முடிமன்னராஜாக்கள்
இன்னும்வரக்காணேன் என்னமோ நானறியேன்
தேடியழைத்துநீ சீக்கிரத்தில்வாருமென்றார்
தாமமுடியானும் சகாதேவன் தான்கேட்டு
அப்படியேநான்போய் அழைத்துமேவாரேனென்று
கச்சைசவரிந்துகட்டி கருங்கச்சைசுங்குவிட்டு
அம்புவில்லுந்தானெடுத்து ஆணழகன்போகலுற்றான்
அப்போதுரோபதையும் ஆரணங்குதானெழுந்து
தருமர்க்கெதிர்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
நானுங்கூடப்போய்வாரேன் ராஜர்களைதேடவென்றாள்
தருமராதுகேட்டு தளராமலேதுசொல்வார்
அப்படியேபோய்வாரும் ஆரணங்குதுரோபதையே
சீக்கிரத்தில்வாருமென்று செலவுதந்தார்தருமலிங்கம்
கூடத்தொடர்ந்தாளே கொம்பனையாள்துரோபதையும்
இருவருமாகவல்லோ இசைந்துவழிநடந்து
அண்ணர்களைதேடியல்லோ ஆணழகன்வந்துவிட்டான்
கானகத்தினுள்நுழைந்து கண்டானே அண்ணர்களை

மைத்துனரைக்கண்டு வரிசையெல்லாம்தான்பார்த்து
உள்ளங்குளிர்ந்துசிலித் துடம்பெல்லாம்பூரித்து
சந்தோஷப்பட்டுமவர் சர்வாங்கம்பூரித்து
மரியாதைநானென்ன மைத்துனர்க்குச்செய்வேன்காண்
கழுதையின்மேலிருந்தவனைக் கடுகயிறக்கிவிட்டான்
முன்பின்னாக முகந்தெரியஏற்றினான்
எருக்கமாலைகொண்டுவந்து இவன்கழுத்தில்போட்டான்
இந்தவரிசையெல்லாம் விந்தைகண்காட்சியென
மன்னவர்கள்தன்னருகே வந்துநின்றாள்பாஞ்சாலி
அண்ணரைக்கண்டாளே ஆனந்தமானாளே
தமயனைக்கண்டாளே சந்தோஷமானாளே
தாமமுடிவீமரே நீர் தலைபோடிபண்ணினீரே
வாள்விஜய அர்ச்சுனரே வாகனங்கள்தந்தீரே
காளை நகுலரே நீர் கரும்புள்ளிபோட்டீரே
மூன்னூற்சகாதேவா முன்பின்னாய்வைத்தீரே
எருக்கமாலைகொண்டுவந்து இவர்கழுத்தில்போட்டீரே
என்னமரியாதை அண்ணருக்குநான் செய்வேன்
பாஞ்சாலன்பெற்ற பைங்கிளியுமேது சொல்வாள்
வானத்தருந்துதியாள் மாசுபடாப்பத்தினியாள்
ஐவருக்குந்தேவியாகி அழியாதபத்தினியாய்
கற்புடையபத்தினியாய்க் கார்ப்பதுமெய்யானால்
இக்கழுதையைத்தொட்டவர்கள் கடுகநடவாமல்
ஏறினசயிந்தவனை இறங்கவேவொட்டாமல்
அரவக்கொடியோன்பார்க்க அம்பலம்போமளவும்
ஏறினகழுதை இறங்காமலிருக்கவென்று
கட்டவிழ்க்கவந்ததொரு காவலர்களெல்லோரும்
ஓட்டிக்கொண்டுபோகவென்று உத்தமியுஞ்சாபமிட்டாள்
என்-வங்கிஷத்தார்தொட்டால் வனக்கழுதைவிட்டிறங்க
காட்டுக்கழுதையிது கடுகெனவேவிட்டிறங்க
மற்றவர்கள்தொட்டாலே வலித்துகொண்டோடவென்று
இப்படிக்குச்சொல்லியல்லோ இட்டாள்பெருஞ்சாபம்

சாபங்கொடுத்தாளே தருமர்பெருந்தேவியவள்
இப்படியாய்ச்சொல்லி இருந்தாளே துரோபதையும்
அடித்துத்துரத்தினார் அங்கேசயிந்தவனை
துரியனுக்குச்சொல்லுமென்று துரத்தினார்சயிந்தவனை
வெருகுதே அக்கழுதை வனமாய்வனந்தாண்டி
தான்விட்டுவந்ததொரு தன்னுடையசேனையண்டை
வந்துகலந்தானே வனக்கழுதைதன்னுடனே
கண்டாரேசேனையர்கள் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்
பார்த்தாரேசயிந்தவனை பார்வைரெண்டுங்கொள்ளாமல்
இதுவென்ன அதிசயங்க ளெவர்செய்தகோலமென்று
கட்டையவிழ்க்கவென்று காவலர்களோடிவந்து
தொட்டுயவிழ்க்கவேதான் ஓட்டிக்கொண்டுபோனார்கள்
ஓட்டிக்கொண்டுசேனையுடன்உத்தமனும்போய்நடந்தான்
அக்ரோணிசேனையுடன் ஆணழகன்போகலுற்றான்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தாண்டி
அஸ்தினாபுரத்தே அடுத்தது அக்கழுதை
கடையுங்கடைத்தெருவுங் கழுதைவருகையிலே
கழுதையைத்தொட்டவர்கள் கடுகியேகூடவாரார்
பட்டணத்திலெல்லவரும் பருவாகப்பார்த்தார்கள்
என்ன அதிசயங்க ளென்பார்களெல்லவரும்
மாட்த்தில்மண்டபத்தில் வந்தேறிப்பார்த்தார்கள்
கோபுரத்திலேறிநின்று குலுங்கநகைப்போரும்
சொல்லிச்சிரிப்போரும் சீச்சீயென்போரும்
இவனுக்குஇக்கழுதை ஏதென்றுசொல்வோரும்
சாமத்துரோகியிவன் சதிசெய்தானென்போரும்
இப்படியாக இவர்களுஞ்சொல்லையிலே
மற்றுமொருவன்வந்து வாய்திறந்தேதுசொல்வான்
துரியனுடசொற்கேட்டு துரோபதையைகொண்டுவர
போனானேகானகத்திற் போர்மன்னராசரண்டை
ஐவரில்லாவேளையிலே ஆரணங்கைக்கொண்டுசென்றான்

அப்போதுரோபதையும் அபயமபயமென்றாள்
அபயக்குரல்கேட்டு ஐவர்களுமோடிவந்தார்
வெற்றிமதயானை வீமனவன்பார்த்து
மயிலனையைக்கொண்டுபோக வந்ததொருபாவிதன்னை
விடலாகாதென்றுசொல்லி வீமன்மனதிலெண்ணி
அடையாளம்பண்ணி அனுப்பினான் துரியனண்டை
என்றுமவர்கள்சொல்லி யிருக்கின்றவேளையிலே
அந்தத்தெருதாண்டி அப்பாலேபோறானே
மாடத்தெருதாண்டி மன்னர்கள்வீதிவிட்டு
திரியோதிரனிருக்கும் சிம்மாசனத்தருகே
வந்தது அக்கழுதை மகாராஜன்முன்னாலே
அம்பலத்தார்கண்டார்கள் ஆச்சரியப்பட்டார்கள்
திரியோதிரன்கண்டு சிந்தைமனங்கலங்கி
உள்ளங்கலங்கியல்லோ ஓடிவந்தான்சயிந்தனண்டை
இறங்கென்றுகைகொடுத்தானிழுத்துக்கொண்டோடுகுது
ஐயோதெய்வமேயிந்த அனியாயம்நானறியேன்
என்னை இழுத்துக்கொண்டு ஓடுகுது இக்கழுதை
கூவியலறுகிறான் கொப்பெனவேதிரியோதிரன்
அபயமிட்டுச்சுற்றுகிறா னம்பலத்தார்தங்கள்முன்னே
அங்கேயிருந்தவர்கள் அனைவோருந்தான்பார்த்து
கலுக்கென்றுதான்சிரித்தார் கட்டழகரெல்லோரும்
சிரித்ததைத்தான்பார்த்து திரியனுடதம்பியர்கள்
சிரிக்கவுடலெடுத்தோம் சீயென்னப்பேரெடுத்தோம்
என்றுமவர்கள்சொல்லி யிவனருகிலோடிவந்து
தம்பிமாரெல்லோரும் தமயனுக்குக்கைகொடுத்தார்
அத்தண்டபேர்களையுங் அக்கழுதைவலித்தோடும்
அப்போதுஎல்லோரும் அலறுகிறார்கூச்சலிட்டு
ஐயையோதெய்வமென்று அல்லவரும்புலம்புகையில்
அங்கிருந்தராஜாக்க ளானதொருமந்திரிகள்
பார்த்துமவர்நடுங்கிப் பதுங்குவார்துரைகளெல்லாம்
இப்படியாகவே இவர்கள்படும்பாடதனை

தூயகுலத்துதித்த துரோணரவரோடிவந்து
காசிவளநாடாளுங் கர்ணனைக்கண்காட்டி
சர்ப்பக்கொடியோனுடனே தம்பிமாரானவரும்
சாயாம்புமேனி சயிந்தவரானவரும்
மற்றுஞ்சிலமன்னவரும் மகுடமுடிராஜர்களும்
இன்னஞ்சிலசேனைகளும் எல்லோருமொன்றாக
காட்டுக்கழுதையுடன் கலந்துமவரோடுகிறார்
நாம்-கண்டுசும்மாவிருக்கக் காரியங்களல்லவென்றார்
பார்த்திருப்போமென்றால் பரிதாபந்தோணுதையா
இதுக்கொருயோசனைகள் இயம்புங்காண்மன்னவரே
அப்போதுகர்ணருமே இவர்களருகில்வந்து
துரோபதையைச்சொன்னதொரு தோஷமிதுகாணும்
பத்தினியைப்பேசினதோர் பாவமிதுகாணும்
என்றுசொல்லிக்கர்ணருமே இவர்களருகில்வந்து
அப்போதுகர்ணருமே அனைவரையுந்தான்பார்த்து
குலுங்கநகைத்துக் கொப்பெனவேயோடிவந்து
பாரளந்தார்மாயன் திருப்பாதமதைமனதிலெண்ணி
பெருமாள்துணையென்று பிடித்தானேதன்கையால்
கடுகியிழுத்தானே கர்ணமகாராஜன்
கழுதையைத்தட்டி கடுகயிறங்குமென்றான்
அத்தண்டபேர்களுமே அல்லவருங்கையைவிட்டார்
அப்போசயிந்தவனும் அங்கேயிறங்கிவிட்டான்
திரியோதிரன்முதலாய்ச் சேனையெல்லாம்வந்தார்கள்
அவரவர்களாசனத்திலனைவோரும்வீற்றிருந்தார்
அம்பலவாசலிலே அழைத்துவந்தார்சயிந்தவனை
தென்னமுடிவேந்தன் திரியோதிராஜன்
மைத்துனரைத்தான்பார்த்து மகாராசனேதுசொல்வான்
கோதைதுரோபதையைக் கொண்டுவரப்போனீரே
பொட்டையடிமொட்டையிட்டு வாகனத்தின்மேலேற்றி
அனுப்பினவரார்காணும் ஆமழகாசொல்லுமென்றான்
அவன்-பேசபலனழிந்து பிரவேந்தனேதுசொல்வான்

போனதுவும்வந்ததுவும் புதுமைநடந்ததுவும்
அங்கேநடந்ததொரு ஆச்சரியந்தானுரைத்தான்
தேசத்தையாளும் திரியோதிரன்பார்த்து
அவ்வார்த்தைதான்கேட்டு அறவேமனஞ்சலித்தான்
வரிசிந்துர்ராஜனுமே மைத்துனர்க்கேதுசொல்வான்
வெற்றிமதயானை வீமனைக்கொல்லவென்று
பரமனைநோக்கியே பாரத்தபசுபண்ணி
வீமனைக்கொல்லவென்று வேணவரம்பெற்றுவாரேன்
என்றுநடந்தானே இயலானசயிந்தவனும்
தெற்குத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையுமங்கே அதிகவனந்தாணடி
மகாமுனிகள்தபசுபண்ணும் மாயமலைமேலே
தானுந்தபசுபண்ணுன் தாமமுடியானும்
ஆதிசிவனையல்லோ அடிபணிந்துதானினைந்து
அருந்தபசுபண்ணிஞனே அங்கேசயிந்தவனும்
அப்போபரமசிவன் அவனுக்கெதிரில்வந்து
என்னவரம்வேணும் எந்தனைக்கேளுமென்ருர்
அப்போசயிந்தவனும் அனேகவரம்கேட்டான்
கேட்டவரங்களெல்லாம் கிருபையாய்த்தான்கொடுத்தார்
ஆதிசிவன்கையாலே அதிகவரம்பேறுபெற்ருன்
வீமனைக்கொல்லவென்று வேணவரங்கள்பெற்ருன்
கெதைகொன்றமாலையுங் கேட்டுமிகப்பேறுபெற்ருன்
வரங்களதுபேறுபெற்று வாரானேசயிந்தவனும்
அஸ்தினுபுரத்தே ஆணழகன்போகவென்று
மகாதபசுபண்ணதொரு மலையைவிட்டிறங்கி
நடந்தானேசயிந்தவனும் நாலுதிக்குந்தானதிர
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைகளுமே அதிகவனந்தான்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்

மூங்கிலடர்ந்தவனம் முல்லைமல்லிபூத்தவனம்
எங்கும்புலிகரடி இருக்கும்வனந்தாண்டி
மலைப்பாம்புகுடியிருக்கும் மல்லர்வனந்தாண்டி
இருளர்குடியிருக்கும் இருண்டவனந்தாண்டி
கள்ளர்குடியிருக்கும் கனத்தவனந்தாண்டி
இருண்டவனந்தாண்டி யிளந்தோப்புந்தான்தாண்டி
வனமாய்வனந்தாண்டி வந்துவிட்டானத்திபுரம்
அத்தினபுரத்தே ஆணழகன்போய்ச்சேர்ந்தான்
தென்னமுடிவேந்தன் திரியோதிரனிருக்கும்
சபையிற்சிம்மாதனத்திற் சயிந்தவனும்வந்தானே
மாநாகங்கொண்டவனும் மைத்துனரைத்தான்பார்த்து
அரவக்கொடியோனும் அத்தானைத்தான்பார்த்து
கடுகவேதானிறங்கிக் கைகொடுத்துதான்தழுவி
ஆரடாமல்லர்களே அங்கிருக்குஞ்சேவகரே
சயிந்தவனார்வீற்றிருக்குந் தங்காசனம்போடுமென
ஏவல்பணிசெய்கிறவர் எல்லவருந்தான்கேட்டு
சொல்லபெற்றோமென்றுமவர் சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றோமென்றுசொல்லி கும்பிட்டெழுந்திருந்து
சேவகரெடுத்துவந்தார் சிம்மாதனமுமிட்டார்
அப்போதிரியோதிரன் அத்தானைத்தான்பார்த்து
வந்துநெடுநேரம் நின்றீரேமைத்துனரே
இட்டசிம்மாசனத்தில் ஏறியவன்வீற்றிரென்றான்
அப்போசயிந்தவனும் ஆணலழகுமன்னன்
இட்டதொருசிம்மாதனம் ஏறியவன்வீற்றிருந்தான்
அப்போதிரியோதிரன் ஆணழகனேதுசொல்வான்
கானகங்கள்போனீரே கர்த்தாவைக்காணவென்று
கர்த்தாவைக்கண்டீரோ கனத்தவரம்பெற்றீரோ
ஐவரைக்கொல்வதற்கு ஆனவரம்பெற்றீரோ
பஞ்சவரைக்கொல்லுதற்குப் பலத்தவரம்பெற்றீரோ
எந்தன்மனங்குளிர எனக்கறியச்சொல்லுமென்றான்
அப்போசயிந்தவனும் ஆணழகனேதுசொல்வான்

போனதுவும்வந்ததுவும் புன்னிதரைக்கண்டதுவும்
ஐவரையுங்கொல்லவென்று ஆனவரம்பெற்றதுவும்
நாலிரண்டுவார்த்தைகளாய் நடத்திஞன்சயிந்தவனும்
கேட்டுமனமகிழ்ந்தான் கீர்த்திபெற்றேமென்றுசொல்லி
வெற்றிபெற்றேமென்று வேந்தன்மகிழ்ந்திருந்தான்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
மூன்றும்வருஷம் முடிந்ததுமன்னவர்க்கு

மூன்ருவது, முருக்கமகாரிஷிவனம் முற்றிற்று.

---

## நான்காவது, காளமகாரிஷி வனம்

நான்காம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
முருக்கமகாரிஷிவனத்தில் முடிமன்னர்தான்தாண்டி
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலே
மண்ணிவைத்தசீயாடு வனவாசம்குடித்தனமாய்
அந்தவனந்தாண்டி அப்பாலேபோகலுற்ருர்
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அப்பாலேபோகலுற்ருன்
காளமகாரிஷிவனத்தில் கடுகிவந்தார்பஞ்சவர்கள்
அவ்வனத்திற்போய்சேர்ந்தார் ஐவர்பஞ்சபாண்டவர்கள்
பச்சைத்தழையொடித்துப் பர்னசாலையுண்டுபண்ணுர்
ஓரடுக்குப்பர்னசாலை உண்டுபண்ணுர்பஞ்சவர்கள்
மூன்றடுக்குப்பர்னசாலை முடிமன்னருண்டுபண்ணுர்
ஐந்தடுக்குப்பர்னசாலை ஆணழகருண்டுபண்ணுர்
பர்னசாலைமேலேயல்லோ பஞ்சவர்குடித்தனமாய்
மாதுதுரோபதையும் மன்னர்பஞ்சபாண்டவரும்
காயுங்கனியுந்தின்று காலங்கழிக்கிருர்கள்
அவ்வனத்திற்பஞ்சவர்கள் அவரிருக்கும்வேளையிலே
மாநாகங்கொண்டதொரு மகாராஜனேதுசொல்வான்
அரவக்கொடியோனும் அங்கவனேதுசொல்வான்



காளமகாரிஷி அனுப்பிய வேதாளம் ஐவரைத் தேடிவர ஐவர்
இறந்திருத்தலால் வேதாளம் ரிஷியைக்கொன்றது.

சபைகள் நிறைந்திருக்க சர்ப்பக்கொடியோனுரைப்பான்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போனாரே
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தைதெரியவில்லை
எந்தவனத்தி லிருக்கிறாரென்றறியேன்
காளிபேரண்டா நீ கடுகெனவேதானேகி
ஐவரையும்நீதேடி அவரிருக்குந்தாவறிந்து
தேடியேநீபார்த்துத் திரும்பிவந்துசேருமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அருகிருந்த தூதுவர்கள்
சொல்லப்பெற்றோமென்று சுருக்காயெழுந்தார்கள்
கூறப்பெற்றோமென்று கும்பிட்டவிரெழுந்து
அஸ்தினாபுரம்தாண்டி ஆரணியம்தேடிவாரார்
காடுமலைகளிலும் கடுகெனவேதேடிவாரார்
தினகரன்வனந்தனிலே தேடினார்பஞ்சவரை
அங்கிலுங்காணாமல் அப்பாலேதேடிவாரார்
ராமரிஷிவனத்தில் நலமாகத்தேடிவாரார்
அங்கிலுந்தேடினார்கள் ஐவரையுங்காணாமல்
முருக்கமகாரிஷிவனத்தே முடிமன்னர்தேடிவாரார்
அங்கெங்கும்காணவில்லை ஐவர்பஞ்சபாண்டவரை
காளமகாரிஷிவனத்தே கடுகியேவந்தார்கள்
காளமகாரிஷிவனத்திற் காவலர்கள்பஞ்சவரை
பர்ணசாலைமேலாகப் பஞ்சவரைக்கண்டார்கள்
இருக்கிறாரென்றறிந்து ஏகிவழிநடந்தார்
காடுஞ்செடிதாண்டி கடுகியேவாரார்கள்
ஆறுஞ்சுனைதாண்டி அவசரமாயோடிவந்தார்
மகாராஜன்வீற்றிருக்கும் மண்டபத்தருகில்வந்தார்
திரியோதிரனிருக்கும் சிம்மாதனமுன்னேவந்து
அரசனெதிரில்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டார்
கண்டுதிரியோதிரன் கட்டழகனேதுசொல்வான்
பார்த்துதிரியோதிரன் பார்மன்னனேதுசொல்வான்
போனீரேதூதுவரேபுதுமையென்னசொல்லுமென்றான்

ஐவரைத்தேடியே ஆரணியம்போனேமே
காளமகாரிஷிவனத்திற் கண்டோமேபஞ்சவரை
பர்னசாலேமேலாகப் பஞ்சவரைக்கண்டோமே
என்றுசொல்லத்தான்கேட்டு எரிநாகங்கொண்டவனும்
கண்கள்சிவந்தானே காந்தாளப்பட்டவனும்
மாமாவைத்தானழைத்து மாநாகனேதுசொல்வான்
இன்னமும்பஞ்சவர்க ளிருக்கிறூர்கானகத்தில்
மாளாமற்பஞ்சவர்கள் வனமேதிரிகிறூர்கள்
தப்பிப்பிழைத்தாலே தாரணியையாள்வாரே
பங்குள்ளபிரகாரம் பாதிநாடாள்வாரே
எந்தவிதமானுலும் இறக்கவகைபார்க்கவேணும்
ஐவரையுங்கொல்வதற்கு ஆலோசனைசொல்லுமென்றுன்
மாமாவேயெந்தனுக்கு வார்த்தையுரையுமென்றுன்
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வான்மருமகனுக்கு
சாமத்துரோகியவன் சகுனியெடுத்துரைப்பான்
கொல்லேக்குப்பல்லி குடிக்குச்சகுனியல்லோ
துரியனேத்தான்கெடுக்கச் சொல்லுகிறுன்யோசனைகள்
அப்பாமருமகனே ஐவரைக்கொல்லவென்றுல்
நொடிக்குள்காளமகரிஷியை நோக்கிதவம்பண்ணிணுலே
அருந்தபசுபண்ணிணுலே அந்தமுனிவந்திடுவார்
ஐவரைக்கொல்லவென்று அவரைமனுகேட்டால்
நல்லதென்றுசொன்னுலே நாடெல்லாமுன்னுதப்பா
தபசிற்பெரியவர்கள் மகாதேவர்க்கொப்பாவார்
வரத்திற்பெரியவர்காண் சாமிக்கொப்பானவர்காண்
அவராலேயாகுமப்பா ஐவரையுங்கொல்லுதற்கு
உன்னுலேயானமட்டும் உத்தமனேபாருமென்றுன்
என்றுசொல்லத்தான்கேட்டு எழுந்தான்திரியோதிரன்
உக்கிரமுடனெழுந்து ஒருவனுமாய்ப்போறுனே
காடுசெடிதாண்டி கரியமலேதான்தாண்டி
ஆறுஞ்சுனேயுமல்லோ அரியவனந்தான்தாண்டி
ஆரணியத்தன்னிலே அரவக்கொடியோனும்

வந்துமிருந்துமவன் மகாதபசுபண்ணுகிறான்
காளமகாமுனியைக் கருதிமனதிலெண்ணி
அருந்தபசுபண்ணினான் அரவக்கொடியோனும்
வேணதபசுபண்ணான் வேந்தரைக்கொல்லவென்று
பாவிதபசுபண்ணான் பஞ்சவரைக்கொல்லவென்று
இப்படியாய்த்தவமிருந்தான் எரிநாகங்கொண்டவனும்
அப்போமகாமுனியும் அறிந்தார்தவநிலையை
சடையுஞ்சடைமுடியும் தம்பிரான்போலாக
இவருடையசடையழகும் ஈஸ்பரரைப்போலாக
காலில்மெருவடியும் கையிற்கமண்டலமும்
திரியோதிரனருகே சேரவருகையிலே
கண்டுதிரியோதிரனும் கடுகவெழுந்திருந்து
பார்த்துதிரியோதிரனும் பணிந்துயெழுந்திருந்து
முத்துமுடிவேந்தன் முனிக்கெதிரிலோடிவந்து
சுத்திவலம்வந்து தொழுதிரங்கித்தெண்டனிட்டான்
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
கைகட்டிவாய்புதைத்து கட்டழகன்கோமானும்
வாய்மூடிநின்றானே மன்னன்திரியோதிரனும்
காளமகாமுனியுங் கண்டுமனங்குளிர்ந்தார்
சிந்தைமனங்குளிர்ந்து தேகங்கள்பூரித்து
சந்தோஷமானாரே சாமிபெரியவரும்
மெத்தமகிழ்ந்தவரும் வேந்தனைப்பார்த்துரைப்பார்
ஆர்காணும்ராஜாவே அரசர்பெருங்கோமானே
எதுக்காய்வந்தாய்நீ இங்குதவம்பண்ணுகிறாய்
என்னைநினைத்ததுநீ எதுகருமமென்றார்
மனதில்நினைத்ததெல்லாம் மன்னவனேசொல்லுமென்று
வேணவரங்கொடுப்பேன்வேந்தனேசொல்லுமென்றார் [ர்
அப்போதிரியோதிரனும் ஆணழகன்தான்பார்த்து
சர்ப்பக்கொடியோனும் சந்தோஷமானானே
அரவக்கொடியோனும் அங்கேமனமகிழ்ந்து

ஆண்டவரே நீர்கேளும் அடியேனோர்விண்ணப்பம்
என்சாமிகேளுமையா யெந்தனுடவிண்ணப்பம்
அஸ்திஞபுரமாண்ட அரவக்கொடியோனுன்
இக்கரசையாண்டதொரு திரியோதிரனென்பார்கள்
எந்தனமனக்குறையால் வந்தேனும்மைக்காண
கண்டேன்களிகூர்ந்தேன் கவலையைச்சொல்லுகிறேன்
பண்டுபகையாளி பாதிநாள்தாயாதி
எண்ணும்பகையாளி யிருக்கிறார்சத்ராதி
எந்தன்பகையாளர் இயலானபஞ்சவர்கள்
பாண்டுமகாராஜன் பெற்றெடுத்தபஞ்சவர்கள்
இப்போதுதங்கள்வனத் திருக்கிறார்பஞ்சவர்கள்
ஐவரையுங்கொல்ல அதிகமனதெந்தனுக்கு
ஐவரையுங்கொன்றாலே ஆளுவேன்ராச்சியத்தை
அவர்களைக்கொல்லுதற்கு அடியேனலாகாது
உம்மாலேயாகுமென்று உம்மைநினைத்தழைத்தேன்
ஆகையாலெந்தனுக்கு அதிகவரந்தாருமென்றான்
பஞ்சவரைக்கொல்லுதற்கு பலத்தவரந்தாருமையா
அநேகநாளும்மைக்கோரி அரியதவம்பண்ணிநின்றேன்
நீர்-வந்தபொழுதெந்தன் மனங்குளிர்ந்தேனண்டவரே
இந்தவரமெனக்கு யீந்திடுகர்த்தாவே
கொல்லவரமெனக்குக் கொடுத்தருளவேணுமையா
என்று-பாதம்பணிந்தானே பாம்புக்கொடியோனும்
அந்தமகாமுனியும் அவர்மனதுதான்குளிர்ந்து
காளமகாமுனியுங் கடுகிமனமகிழ்ந்து
சந்தோஷப்பட்டாரே சரீரங்கள்பூரித்தார்
மெத்தமகிழ்ந்தாரே வேந்தரந்தமாமுனியும்
மனதுக்கிசைந்தபடி மன்னவனேசெய்கிறேனன்
சித்தத்துக்கேற்றபடி செய்வேன்நீஅஞ்சாதே
ஐவரையுங்கொன்றுநான் அதம்பண்ணிப்போடுகிறேன்
பஞ்சவரைக்கொன்று பாருலகையாளவைப்பேன்
ஐவர்தனக்காக ஆதிசிவன்வந்தாலும்

பஞ்சவரைக்காக்க பாரளந்தார்வந்தாலும்
நான்முகம்படைத்த நற்பிரமன்வந்தாலும்
வெற்றிமயிலேறும் வேலவர்தான்வந்தாலும்
தேவர்க்கதிபதியாம் தேவேந்திரன்வந்தாலும்
இவர்களைக்கார்ப்போமென்று எமனவன்வந்தாலும்
எந்தவிதத்தாலும் இறக்கவகைபண்ணுகிறேன்
என்றுவரங்கொடுத்தார் எரிநாகங்கொண்டவர்க்கு
அப்போதுதிரியோதிரன் ஆனந்தயானேனே
சந்தோஷப்பட்டானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்தானே விஷநாகங்கொண்டவனும்
மனங்கள்மிகப்பூரித்து மாநாகன்போய்நடந்தான்
காளமகாமுனியும் கடுகிவனத்தில்வந்தார்

காளமகாரிஷி ஐவரைக்கொல்ல நினைத்தது.

அப்போதுமகாமுனியும் ஆலோசனைகள்பண்ணி
வேதாளம்தான்பிறக்க வேள்விதனைவளர்க்க
எமதர்மராஜனவன் எம்பெருமானைக்கண்டு
கரியமாலைப்பார்த்து கடுகவெழுந்திருந்து
மாயன்பெருமானை வந்துநமஸ்கரித்தான்
எமபடாளோடி யெடுத்துவந்தார்சிம்மாதனம்
இட்டதோராசனத்தில் எம்பெருமாள்வீற்றிரென்றூர்
அப்போதுஎம்பெருமாள் அரிராமர்தானெழுந்து
சிம்மாதனமேறி ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
வேர்க்கவிருவிருக்க வேந்தரவர்வீற்றிருந்தார்
அப்போதுஎமனவன் ஆயரைப்பார்த்துரைப்பான்
எங்குவந்தீர்மாயவரே எனக்கறியச்சொல்லுமென்றான்
ஏதுவகையாக எம்பெருமாளிங்குவந்தீர்
வந்தகருமத்தை வாய்திறந்துசொல்லுமென்றான்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
உன்னுடையமைந்தனல்லோ அருமையுள்ளதருமருமே
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அநீதமாய்மாளுகிறார்
இறந்துவிடநாளாச்சு இயலானபஞ்சவர்கள்

நம்பினபேர்களைத்தான் நாமல்லோகாக்கவேணும்
கைமோசம்வந்ததென்று கரியமால்தானினைந்து

## எம்பெருமாள் பஞ்சவரைக் காப்பதற்கு எமபுரம் போனது.

அப்போதுஎம்பெருமா ளாயரெழுந்திருந்து
வட்டமாங்கருடனேறி வருகிறார்மாயவனார்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
சில்லென்றுபூத்தகொரு செடியும்வனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
இளமானைப்போலே யிசைந்துவருங்காவேரி
வடமலைரங்கர் வனங்களெல்லாந்தான்தாண்டி
எமபுரந்தேடியே எம்பெருமாளோடிவந்தார்
எமனுக்கெதிராக எம்பெருமான்வந்துநின்றார்
அக்கினிகுண்டம்வெட்டி அனலைவளர்த்தினனே
பாதாளக்குழியைவெட்டி பாவகனைமூட்டினனே
மந்திரத்தாலேயல்லோ வாவென்றார்வேதாளத்தை
ஆயன்பெருமாளும் அவ்வயணந்தானறிந்தார்
ஏழுலகமாளுகின்ற எம்பெருமாளென்னசொல்வார்
பாவிகெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
பங்கும்பகையாளி ஏற்பட்டான்பஞ்சவர்க்கு
எந்தவிதத்திலேயும் இறக்கவகைபண்ணுகிறான்
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
ஐவர்பஞ்சபாண்டவர்க்கு அனர்த்தம்வரலாச்சு
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
தோளிற்பூமாலை தொண்டழிந்துபோகுதே
கையிற்செபமாலை கனங்குலைந்துபோகுதே
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகுதே
நம்பினபஞ்சவர்கள் ராஜாக்கள்மாளுகிறார்

மாண்டுவிட நாளாச்சு மகாராஜமன்னவர்கள்
செத்துவிட நாளாச்சு சீரானபஞ்சவர்கள்
பாவிகெடுத்தானே படுபாவிதிரியோதிரன்
நொடிக்குள்காளமாமுனியை நோக்கித்தபசுபண்ண
அந்தமகாமுனியும் வந்துஎதிரில்நின்றார்
கண்டுதிரியோதிரன் கடுகசரணம்பண்ணி
கைகட்டிவாய்புதைத்து கட்டழகன்நின்றானே
அப்போதுமாமுனியும் அறவேமனமகிழ்ந்து
காளமகாமுனியுங் கண்டுமனமகிழ்ந்து
என்னவரம்வேண்டும் எந்தனைக்கேளுமென்றார்
அப்போதிரியோதிரன் ஆணழகனேதுசொல்வான்
ஐவரையுங்கொல்வதற்கு ஆனவரம்வேணுமென்றான்
பஞ்சவரைக்கொல்வதற்கு பலத்தவரம்வேணுமென்றான்
உம்முடையகையாலே உத்தமரைக்கொல்லுமென்றான்
அந்தமுனிகேட்டு அப்படியேநல்லதென்று
வாக்குவரங்கொடுத்து வந்தானேயந்தமுனி
ஆழக்குழிபறித்து அக்கினியைமூட்டிவைத்தான்
அக்கினிக்குழியிலே ஆங்காரவேதாளம்
பிறக்கும்படியாகப் பெருத்தவேள்விபண்ணுகிறான்
அதுபிறந்ததாமானால் ஐவர்பிழையார்கள்
தோளிற்பூமாலை தொண்டழிந்துபோகுதே
கையிற்செபமாலை கனங்குலைந்துபோகுதே
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகுதே
நம்பினபஞ்சவர்கள் ராஜாக்கள்மாளுகிறார்
ஆகையாலும்மை அழைக்கவேவந்தேன்காண்
வேதாளம்பிறந்தாலே வேந்தரைக்கொன்றுவிடும்
மாண்டுமடிவார் மகாராஜர்பஞ்சவர்கள்
செத்துமடிவாரே சீரானபஞ்சவர்கள்
என்றுரைத்தார்மாயன் ஏமனுடனுக
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயருக்கேதுரைப்பான்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அவர்காலமுள்ளமட்டும்

உம்மையே நம்பியல்லோ உயிர்கொண்டுலாவுகிறேன்
காக்கக்கடனுனக்குக் கரியமாலென்றுசொன்னார்
அப்போதுமாயவனார் அறவேமனமகிழ்ந்து
மாயவனார் தான்கேட்டு மனதுபெரிதுகந்து
கூடவருவீரோ கொப்பெனவேபோகவென்றார்
ஆயருரைகேட்டு அப்படியேவாரேனென்றார்

எம்பெருமானும் எமதர்மராஜனும்
பஞ்சவரைக் காக்கவருதல்.

மாயவரும்எமனுமே வருகிறார்வனந்தனிலே
எமபுரத்தைவிட்டுமல்லோ இருவருமாய்வாறார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தாண்டி
இருண்டவனந்தாண்டி இருவருமாய்வந்தார்கள்
காளமகாமுனிவரிட கானகத்தில்வந்தார்கள்
எமன்கிடாமேலே எம்பெருமாள்கெருடன்மேலே
அந்தவனந்தனிலே வந்தாரிருவர்களும்
வந்துயிறங்கினார் மகாமுனிதன்வனத்தில்

எம்பெருமாள் தடாகம் உண்டுபண்ணல்.

ஆயர்பெருமானும் அங்கெனவேயதுசெய்தார்
அந்தரப்பொய்கையொன்று மாயவருமுண்டுபண்ணார்
அகலநிகளமாய் ஆறுயோசனைகாதம்
பத்துயோசனைதூரம் பாரளந்தாருண்டுபண்ணார்
தாமரைப்பொய்கைதனை சாமியவருண்டுபண்ணார்
அலர்தாமரைப்பொய்கை அங்கெனவேயுண்டுபண்ணார்
அல்லியுடன்தாமரையும் ஆம்பலுமுண்டாச்சு
அழகானபொய்கையிலே அதிசயமென்னவென்றார்
அல்லியுங்கொட்டியுமே அதில்நெருங்கவுண்டாச்சு
அந்தரத்தாமரை அக்குளத்திலுண்டாச்சு
நாணலுங்கோரையுமே நடுவேயதிலுண்டாச்சு
அக்குளத்துக்கரைமேலே அழகானபூமரங்கள்

மல்லிகைமுல்லையுமே மாதளைதமுண்டாச்சு
நல்லதொருபூமலரும் நற்றும்பையுண்டாச்சு
கொன்றைக்குருக்கத்தி கோங்குமுல்லையுண்டாச்சு
ஆற்றலரிமந்தாரை அழகானசண்பகங்கள்
ஆலஞ்செடிமுளைத்து அரசுமேயுண்டாச்சு
வேம்புமரசுமங்கே வேணதுவுண்டாச்சு
பாளைமணம்வீசும் பன்னீருபூபூர்க்கும்
வன்னவண்ணப்பூமரங்கள் மாவிருட்சமுண்டாச்சு
கமுகுகுலைசரியும் கஸ்தூரிமணம்வீசும்
வேரிற்பலாப்பழங்கள் வெடித்துவிழுந்திருக்கும்
மாம்பழமெங்கெங்கும் வனத்திற்பழுத்திருக்கும்
பார்த்தயிடங்களெல்லாம் பழங்கள்பரிமளிக்கும்
கண்டயிடங்களெல்லாம் கனிகள்மணம்வீசும்
இப்படியாயுண்டுபண்ணூர் எம்பெருமாள்மாயவரும்
காலாகாலங்களிலே கட்டினகுளம்போலே
ஆயன்பெருமாளதிசயமாயுண்டுபண்ணூர்

எமனும் பெருமாளும் வேறு வடிவு கொண்டது.

எமதர்மராஜாவ ரென்னவடிவெடுத்தார்
எமபுரத்தையாளுகிற எமன்குயிலானூர்
எம்பெருமாள்மாயவனு ரென்னவடிவானூர்
புள்ளிமான்குட்டியைபோல் பொன்மான்வடிவெடுத்தார்
அந்தநல்லபொன்மானி னதிசயத்தைச்சொல்லுகிறேன்
தங்கமுருக்கியே தரையிற்கவிழ்த்தாப்போல்
பொன்னையுருக்கியெல்லோ பூமியிலேவிட்டாற்போல்
மேகத்திலேயெழும்பும் மின்னலதுபோல
தூரத்திலேயெழும்பு் சோதியதுபோல
எட்டுநாள்சென்றகுட்டி யேந்துங்குழந்தையைப்போல்
மான்குட்டிபோலாக மாயவனூர்வடிவெடுத்தார்
பஞ்சவர்கள்தானிருக்கும் பர்ணசாலைதேடிவாரார்
மூன்றடுக்குப்பர்ணசாலை முன்னுலேயோடிவந்து

ஏழடுக்குப்பர்னசாலை எதிராகவந்து நின்றார்
நடந்துவிளையாடி ராஜாத்தி முன்னேவந்து
துள்ளிக்குதித்து தங்கே துரோபதையாள் முன்னாலே

தருமரைத் துரோபதை மான் பிடித்துத்
தரச் சொன்னது.

கண்டாளேபாஞ்சாலி கானகத்தின்மானதுவை
மானழகைப்பார்த்தாளே மயிலனையாள் துரோபதையும்
கண்டுமனமகிழ்ந்தாள் கட்டழகி துரோபதையும்
பார்த்துமனங்குளிர்ந்தாள் பஞ்சவர்கள்தேவியவள்
மான்பிடிக்கவேணுமென்று மனதில் நினைத்தோமே
ஆர்பிடித்து தருவார்க ளழகானயிம்மானை
தருமரைக்கேட்போமென்று தானெழுந்துஓடிவந்தாள்
தருமரருகேவந்து சாஷ்டாங்கதெண்டனிட்டாள்
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டாள்
வணங்கிநமஸ்கரித்தாள் மாது துரோபதையும்
தக்கபுகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
வணங்குமுடியாளே மங்கை துரோபதையே
ஏதுக்குபெண்ணேநீ என்னைவந்துதெண்டனிட்டாய்
பின்னையுந்தெண்டனிட்டாய் பிள்ளைகளைபெற்றிடுவாய்
பிள்ளைகளைப்பெற்றிடுவாய் பெருவாழ்வுவாழ்ந்திடுவாய்
தெண்டனிட்டகாரியத்தை தெரியவுரையுமென்றார்
வந்துபணிந்ததொரு வயணத்தைச்சொல்லுமென்றார்
என்றுமவர்கேட்க ஏதுசொல்வாள் துரோபதையும்
ஏதோஒருமான்வந் தெதிரிலேநிற்கிறதே
தங்கமுருக்கியே தரையிற்கவிழ்த்ததுபோல்
மேகத்துமின்னலைப்போல் தேகமதுதோணுகுது
தூரத்துச்சோதியைப்போல் தோணுகுதுஎந்தனுக்கு
உச்சிதமாகவே உருகுதுஎந்தனுக்கு
அதிசயமாய்த்தோணுகுது அந்தமானெந்தனுக்கு
மானெனக்குவேணுமையா வனத்தில்விளையாட
விளையாடயெந்தனுக்கு வேணும்பிடித்துத்தாரும்

மான்பிடித்துத்தருவீரென்றுமன்னவரேதெண்டனிட்டே
எந்தவிதத்தாலும் எனக்காகப்பிடியுமென்றுள் [ன்
பிடியும்பிடியுமென்று ,பின்னொருகால்தெண்டனிட்டாள்
மான்பிடித்துத்தாருமென மற்றொருகால்தெண்டனிட்டா
அப்போது தருமலிங்கம் ஆணழகர் தான்கேட்டு [ள்
தக்கப்புகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
ஆவளர்த்தமானோயிது அறியேனிளமயிலே
எவர்வளர்த்தமானோயிது ஏதுமறியேனே
இந்தவனத்தில் இருக்கும்பெரியவர்கள்
தவத்திற்பெரியவர்கள் சன்னியாசியானவர்கள்
யோகத்திற்றானிருக்கும் யோக்கியமுள்ளவர்கள்
ஆர்வளர்த்தமானோயிது அறியேனிளமயிலே
எவர்வளர்த்தமானோயிது ஏதுமறியேனே
மனிதர்வளர்த்ததினால் வந்தது நம்மருகே
அல்லாதேயாமானால் அருகில்வந்துநிற்காது
வளர்த்தமானாகையினால் வந்துவிளையாடுகுது
மானைப்பிடித்தாலே வகைமோசம்வந்துவிடும்
இம்மானைப்பிடித்தாலே இடுக்கம்வந்துநேர்ந்துவிடும்
பெண்புத்திகெட்டுமோசம் போனவர்கள்மெத்தவுண்டு
பெண்ணாலேகெட்டவர்கள் பூயிலேமெத்தவுண்டு
ஆணாலேகெட்டவர்கள் ஆருமில்லைவையகத்தில்
ஸ்ரீராமர்பட்டதொரு சேதிபோலாகுமிது
அரிராமர்பட்டதொரு அலைச்சல்போலாகுமிது
ஆகையாற்பெண்மயிலே அம்மானைப்பிடியுமென்றாய்
அதுகேட்டுதுரோபதையாள் ஆரணங்கேதுசொல்வாள்
அரிராமர்பட்டதொரு அலைச்சல்தனையுமிப்போ
அந்தக்கதையெனக்கு ஆண்டவரேசொல்லுமென்றாள்
மாயவனார்பட்டதொரு வரலாற்றைச்சொல்லுமென்றாள்
எம்பெருமாள்பட்டதொரு இடுக்கங்கள்சொல்லுமையா
அப்போது தருமலிங்கம் ஆணழகரேதுசொல்வார்
ஆனாற்கேள்பெண்ணே அவர்கதையைச்சொல்லுகிறேன்

தருமர் துரோபதைக்கு மானைப் பிடிக்கலாகாதென்று ஸ்ரீராமர் கதையைச் சொன்னது.

ராமரும்லட்சுமணரும் நற்சீதைதன்னுடனே
கைகேசிசொற்படிக்கு கானகத்தேபோயிருந்தார்
தென்னிலங்கைராவணனும் சீதையழகுகண்டான்
சூர்ப்பநகைசொல்லாலே துள்ளிப்பதைபதைத்து
இலங்கையைவிட்டுமவன் ஏகிநடந்தானே
சீதையைசிறையெடுக்க தென்னிலங்கைவிட்டுவந்தான்
கண்டானேமூவர்களைக் கானகத்தில்ராவணனும்
ஜானகியைக்கொண்டுபோகச் சமயமில்லையென்றவனும்
உற்றுநினைத்தானே ஒருகோடிபுத்திகளை
இருந்துநினைத்தானே எண்ணமுற்றசிந்தையிலே
ஆலோசனைபுரிந்து அந்தப்படுபாவி
மாரீசனையழைத்து மானாகச்செய்துவிட்டு
போய்நில்லும்சீதையிடம் பொன்மானேயென்றுரைக்க
பொன்மானதுகேட்டு போகமாட்டேனென்றுசொல்ல்
மாட்டேனென்றுசொன்னசொல்லை மாபாவிதான்கேட்டு
அவ்வளவிலம்மானை அடித்தான்பிரம்பாலே
அடிபட்டுவோடுகுது அந்தவனந்தனிலே
மானவனுப்பிவைத்தான் மாரீசப்பொன்மானை
சீதையிருக்குமிடந் தேடியேவோடிவந்து
மயிலனையாள்முன்னேவந்து மானும்விளையாடும்
கண்டாளேசீதையரும் கானகத்துமானதனை
ஸ்ரீராமர்முன்னேவந்து தேவியருமேதுசொல்வாள்
மானழகைக்கண்டேனதைத் தான்பிடித்துதாருமென்றாள்
மான்பிடித்துத்தாருமென மலரடியைத்தெண்டனிட
ஸ்ரீராமர்தான்கேட்டு சிந்தைமனங்கலங்கி
மான்வந்தமாயமெல்லாம் மாயவனார்தாமறிந்து
மானல்லபெண்ணேயிது மாயமானென்றுசொன்னார்
அல்லவென்றார்கேளாமல் அநேகந்துயரமுற்றாள்
துயரமுற்றாளென்றுசொல்லி சுவாமிமனதிலெண்ணி

ராமரும்லக்ஷ்மணரை நலமாகத்தானழைத்து
மான்பிடித்துநான்வருவேன் வாரமட்டுந்தம்பியரே
சீதையருகாகத் திறமாயிருப்பாயென
இளையபெருமாளும் இவ்வார்த்தைதான்கேட்டு
அப்படியேகாத்திடுவேன் அண்ணாவேபோவென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமர்போகலுற்றார்
அம்புவில்லுங்கைபிடித்து அவ்வனத்தினூடாக
மானைத்துரத்தியே மாயவனார்போனபின்பு
தென்னிலங்கைராவணனும் உன்னுடம்வேகமதாய்
பத்துத்தலையொளித்து பத்திரண்டுகைமறைத்து
நல்லவொளிமறைத்து ராவணன்பேர்மறைத்து
சங்கமணிப்போலே சண்டாளன்வந்தானே
பண்டாரம்போலேயல்லோ படுபாவிவந்தானே
வனமாய்வனந்தாண்டி வந்தானேபர்ணசாலை
இருவரிருந்தஜாடை இவனறிந்தானப்போது
மானைநினைத்தானே மாபாவிசண்டாளன்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
மான்பிடிக்கப்போனதொரு மாயவனாரேதுசெய்தார்
அந்தமான்தன்கையிலே அகப்படாத்தன்மையினால்
கையினால்வில்வளைத்துக் கணைகளைதான்தொடுத்தார்
அம்புதனைத்தொடுத்து அம்மானையெய்தாரே
ராட்சதமான்விழுந்து லட்சுமணாவென்றலற
அந்தமொழிகேட்டு அழகானசீதையரும்
மான்கையிலுங்களண்ணர் மடிந்தாரெனவுரைத்தாள்
இளையபெருமாளும் எழுந்துநடந்தாரே
ராமரைத்தேடியே லட்சுமணர்போனபின்பு
தென்னிலங்கைராவணனும் சீதையருகில்வந்து [ள்
பிச்சையென்றுகேட்கையிலே அச்சமில்லாதள்ளிவந்தா
கூசாமல்ராவணனுங் கொண்டுசென்றான்தென்னிலங்கை
சீதைசிறைபோனபின்பு திருமாலவர்பார்த்து
நல்லதென்றுசொல்லியல்லோ நடந்தாரிருவருமாய்

சவரியைக்கண்டுமல்லோ சந்தோஷம்பண்ணுரே
அனுமாரைக்கண்டுமே அவர்களுறவாகி
அனுமாருறவாலே அங்கதனுஞ்சுக்ரீபனும்
மெத்தவுறவானுர் வேந்தரிருவர்களும்
வாலியைக்கொன்றபின்பு வானரவீரருக்குள்
சுக்ரீபனுக்குப்பட்டங் சூட்டிகடலதனில்
வாராவதிகட்டியல்லோ வந்தார்கள்தென்னிலங்கை
ராவணன்கும்பகர்னன் ராட்சதயிந்திரஜித்தன்
மூலபலச்சேனை முடிந்ததுராமர்கையால்
சேனைகளைக்கொன்றல்லவோ சீதையைசிறைமீட்டி
புட்பரதமேறி புண்ணியனுர்வந்தாரே
அயோத்தியாபுரியதனில் அரிராமர்வந்துவிட்டார்
சீதாசமேதராக சிம்மாதனமேறி
தம்பிமார்மூவர்களும் தானுங்கொலுவிருந்தார்
நீதிதவராமல் நெறிப்படியேஆண்டிருந்தார்
ஐம்பத்தாறுதேசமதை ஆண்டாரேஒருகுடைக்கீழ்
அந்தக்கதையாகும் ஆரணங்கேநீர்கேளும்
சீதையம்மாள்பட்டமொரு சேதியிதுவாகும்
மானைப்பிடிக்கவே மாட்டேனெனவுரைத்தார்

மானைப் பிடித்துத் தரவில்லையென்று துரோபதை யம்மன் பிணங்கியது.

தக்கப்புகழ்பெரிய தருமரிவையுரைக்க
அவ்வார்த்தைதான்கேட்டு அன்னநடை துரோபதையும்
ஏதேதுசொன்னுலும் இரங்காமனதுடையாள்
வரும்விதியறியாளே மாதுகருங்குழலும்
எந்தவிதத்தாலும் இந்தமான்வேண்டுமென்றுள்
மானெனக்குவேணுமென்று மாதுபிணங்கிநின்ருள்
அறவேமனஞ்சலித்து அங்கேதுயரமிட்டாள்
தக்கப்புகழுடைய தருமரவர்பார்த்து
சாயாம்புமன்னரவர் தானுமங்கேதுரைப்பார்
வெற்றிமதயானை வீமரைத்தானழைத்து

வீமாமதகரியே வில்வேந்தேயிப்போது
மான்குட்டிவேணுமென்று மாதுபிணங்கினதால்
குட்டிமானைப்பிடித்து கொப்பெனவேவாருமையா
காட்டுமானைப்பிடித்து கடுகெனவேவாருமையா
ஓடிப்பிடித்துநீ ஒருநொடியில்வாருமென்றார்

வீமன் மான்பிடிக்கப் போகிறது.

அண்ணருரைகேட்டு ஆங்காரவீமனவன்
இதுபோதுமென்றுசொல்லி எழுந்தானேவீமனவன்
ஜல்லடந்தான்போட்டு தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஆயுதங்கைபிடித்து ஆணழகன்போகலுற்றான்
மானைத்தொடர்ந்தானே மதவீமராஜாவும்
துள்ளிப்பதைபதைத்து சுருக்காய்வருவாராம்
வீமரைக்கண்டுமல்லோ மெள்ளநடப்பாராம்
அப்போமதவீமன் ஆங்காரங்கொண்டவனும்
மானைப்பிடிக்க மாயவனார்பின்தொடர்ந்தார்
எட்டிப்பிடிக்க எதிரில்வருவானும்
பதுங்கிவருவானும் பாரமதவீமனவன்
ஐம்பதிங்காதவழு அநேகதூரந்தானடந்தார்
கண்ணுக்குத்தெரியாமல் கடுகவேயேகிவிட்டான்
தேடித்திரிந்தானே சீரானகானகத்தில்
எண்ணுதுமெண்ணுகிறான் இயலானவீமனுமே
அண்ணன்தருமருக்கும் ஆரணங்குதுரோபதைக்கும்
என்னவென்றுசொல்வேனு னிந்தவிதிவசத்தை
இத்தனைதூரம்வந்தேன் இம்மானைக்காணேனே
போனவிடமறியேன் போயிருக்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்கும்தாவறியேன்
மாயமான்போனதொரு வகையொன்று நானறியேன்
என்றுமனங்கலங்கி எண்ணுகிறான்கோடிசிந்தை
நின்றுவிசாரமிட்டு நெடுமூச்செறிந்தானே
விடுவிடுநேரமங்கே வெயிலானவேளையிலே

நல்லவுருவமது நாவுவறளுது
தண்ணீருந்தாகவிடாய் தனிமையாய்க்கொள்ளுது
நாவைவறட்டுகுது நல்லஜலங்காணுமல்
குடலைப்புறட்டுகுது குடிக்கஜலங்கிட்டாமல்
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிநடந்தானே

எம்பெருமாள் வீமராஜனை விஷத்தண்ணீர்
குடிப்பித்துக் கொல்லுகிறது.

இதுதான்சமயமென எண்ணித்திருமாலும்
மாளுயிருந்தவரும் மயிலாய்வடிவெடுத்தார்
மயிலாய்வடிவெடுத்து மரத்தின்மேலேறினரே
எமன்குயிலாகி யிருந்தானேமாயரண்டை
எமன்குயிலானர் எம்பெருமாள்மயிலானர்
மயிலுங்குயிலுமே வனந்தனிலேகூவுகையில்
அந்தக்குரல்கேட்டான் அழகானவீமனுமே
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தயிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
என்றுமவன்சொல்லி ஏகிநடந்தானே
தேடியேவந்தானே சீரானபொய்கையண்டை
தாமரைப்பொய்கை தடாகத்தைக்கண்டானே
தாகவிடாய்தீர்ந்து தமையரண்டைபோவோமென்று
தண்ணீர்தடாகத்தில் இறங்கினன்தார்வேந்தன்
அந்தரமாய்மாயவரும் அங்கொருவரேதுசொல்வார்
ஆரடாதம்பியரே அலைஜலமுண்கிறவன்
தண்ணீர்குடியாதே தாகவிடாய்தீராதே
இந்தக்குளமென்னுதடா இந்தநதியென்னுதடா
இந்தக்குளத்தில் இறங்கிஜலமுண்ணுதே
இவ்வார்த்தைதான்கேட்டு இயலானவீமனவன்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
அந்தரமாய்பேசுறது ஆரென்றுதெரியவில்லை
அந்தரதேவதையோ ஆகாசதுர்க்கைகளோ
மந்திரதேவதையோ வந்தென்னைக்கேட்கிறது

பேயோபிசாசுகளோ பிணந்தின்னும்பூச்சுகளோ
ஆரென்று நானறியேன் அறியவுரையுங்கள்
வெற்றிமதயானை வீமனும்கேட்கலுமே
அந்தச்சமயத்தில் ஆயரவரேதுசொல்வார்
ஆரானாலுந்தனுக்கேன் அப்புறத்தேபோவென்றார்
அப்போதுவீமனவன் அவ்வார்த்தைக்கேதுசொல்வான்
தாகவிடாய்கொண்டு தண்ணீர்குடிக்கவந்தால்
தண்ணீர்குடியாதேயென்றுமேசாற்றுவரோ
தடாகமிருக்கையிலே தண்ணீர்களைதீராமல்
குடியாமற்போவேனோ கொற்றவரேசொல்லுமென
தண்ணீர்குடிக்கவென்றால் தாரணியிற்பயிர்களுக்குள்
வாடாதபயிருமேது வருத்தமானபாரமேது
அதிசயமானவார்த்தை அறிந்தாலுரையுமென்றார்
அப்போதுவீமனவன் அவ்வயணமறியாமல்
தெரியாமல்வீமனவன் தீர்த்தம்புசித்துவிட்டான்
தாகக்களையாலே தண்ணீர்குடித்துவிட்டான்
காளையந்தவீமனுக்கு கண்ணைச்சொருகுதே
தலையைச்சுழற்றுதே தாமமுடியானுக்கு
உடம்புமறக்குதே உத்தண்டவீமனுக்கு
மரத்தடியிற்பள்ளிகொண்டான் மாலைமுடியானும்
மறந்துபடுத்தானே மதகரிவீமனவன்
தன்னைமறந்துமல்லோ தார்வேந்தன்பள்ளிகொண்டான்
மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
காலனையெச்சரித்து கடுகவுயிர்வாங்குமென்றார்
எமனைத்தானெழுந்து யிவனுயிரைவாங்குமென்றார்
அப்போதுஎமனவன் அவசரமாயோடிவந்து
சூலத்தால்குத்தியே பாசத்தால்கட்டினானே
பாசத்தால்கட்டியே பதைக்கவுயிர்வாங்கினானே
சூலத்தால்குத்தியே துடிக்கவுயிர்வாங்கினானே
குளத்தங்கரையோரம் குளிர்ந்தநிழல்தனிலே
பொய்கைகரையோரம் போர்வீமன்மாண்டுவிட்டான்

மாண்டுபடுத்தானே மதவீமன் குளக்கரையில்
செத்துபடுத்தானே சீரானவீமனுமே
இப்படியாக இவனிருக்கும் வேளையிலே

மான் பிடிக்கப்போன வீமனைக் காணுமென்று
தருமராஜர் புலம்புகிறது.

தக்கபுகழ்பெரிய தருமரவர்பார்த்து
சாயாம்புமன்னர் தருமரவரேதுசொல்வார்
மான்பிடிக்கப்போனதொரு மன்னவனைக்காணேனே
இன்னேரமாச்சுதே இன்னம்வரக்காணேனே
மானைப்பிடிக்கையிலே வளர்த்தவர்கள்கண்டாரோ
ஆர்கண்டெதிர்த்தாரோ அமரதுசெய்கிறாரோ
எவர்கொன்றுபோட்டாரோ ஏதுமறியேனே
மண்ணாக்கிக்கல்லாக்கி மரமாக்கிவிட்டாரோ
கல்லாக்கிமுள்ளாக்கிக் கானகத்திற்போட்டாரோ
செத்துமடிந்தானோ சிவன்பாதம்சேர்ந்தானோ
மாண்டுமடிந்தானோ வைகுந்தம்சேர்ந்தானோ
காணவும்போறேனோ கட்டழகன்தம்பியரை
பார்க்கவும்போறேனோ பாரமதகரியை
காணாமல்தம்பியரைக் கலங்குதேதேகமெல்லாம்
பாராமல்தம்பியரைப் பதைக்குதேயென்மனது
காளையருச்சுனரே கடுகியேபோய்வாரும்
பார்த்துவா அருச்சுனரே பாரமதவீமனை நீ
தேடியழைத்துநீ சீக்கிரத்தில்வாருமென்றார்
காளையந்தவீமனை நீ கண்டழைத்துவாருமென்றார்
என்றுமவர்சொல்லி யிருந்தாரொருவிதமாய்

அருச்சுனமகாராஜன் தருமர் சொல்லைக்கேட்டு
வீமனைத் தேடிப்போனது.

ஆணலழகுமன்னன் அர்ச்சுனராஜனும்
தருமருரைகேட்டுத் தானெழுந்தார்விஜயன்
ஜல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு

குந்தியிடுங்கால்களுக்குக் குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு 'மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் தூத்திப்பூச்சல்லடமாம்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
பில்லைசமுதாடு பிகுவெடுத்தலெட்டியாணம்
கச்சைவரிந்துகட்டி கருங்கச்சைசுங்குவிட்டு
பாங்குசொருகினானே பார்த்தனிடப்புறத்தே
கத்திசொருகினானே காலைவலப்புறத்தே
சிங்காணிவில்லெடுத்து சிறுநாணிதான்பூட்டி
அண்ணருடபாதம் அடிவணங்கிதெண்டனிட்டு
போகவிடைதாருமென்றான் போர்விஜயக்கோமானும்
தக்கபுகழுடைய தருமரவர்பார்த்து
வாழ்த்தியெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
காளையருச்சுனரே கட்டழகாநீர்கேளும்
வனத்தினுட்புகுந்து மன்னவனைநீதேடி
கண்டழைத்துவீமனை நீ கடுகிவவாருமென்றார்
போய்வாருமென்றுசொல்லி பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தாரே விஜயப்பெருமானும்
வாரானே அர்ச்சுனனும் வனமாய்வனந்தாண்டி
கானகத்தினுட்புகுந்து காளையரைத்தேடுகிறான்
எங்கெங்குந்தேடினான் இனியவிடமாராய்ந்தான்
அந்தவனந்தனிலே அண்ணரைக்காணமல்
மற்றுமொருவனத்தில் மன்னவனைத்தேடிவாரான்
இன்னமொருவனத்தில் இளவிஜயன்தேடுகிறான்
அண்ணனைத்தேடியே யனேகதூரம்வாரானே
காட்டிலேதேடியல்லோ கடுகியேவாரானே
ஆணலழகுமன்னன் அருச்சுனராஜனுக்கு
தண்ணீர்க்கவனங்கள் தாகவிடாய்க்கொள்ளுகுது
நாவைவறட்டுகுது நல்விஜயன் அர்ச்சுனற்கு
மெத்தக்களைத்தானே வேர்வைகள்சிந்திவிழ
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்

இந்தவனந்தனிலே எங்கும்சலம்கிட்டவில்லை
தண்ணீர்களையாலே தாகவிடாயானதினால்
தண்ணீர்தண்ணீரென்று தவித்துப்புலம்புகிறான்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

மாயவனார் அருச்சுனராஜனை விஷநீர்க்
குடிப்பித்து கொல்லுகிறது.

எம்பெருமாள்மாயவரும் ஏதுசெய்தாரன்னேரம்
மயிலுங்குயிலுமாக வனத்திலேகூவுகிறார்
அருச்சுனர்காதிற்கேட்க அவ்வனத்திற்கூவுகிறார்
அந்தக்குரலோசை அர்ச்சுனனுந்தான்கேட்டு
கூவுங்குரல்கேட்டான் கோபாலர்மைத்துனனும்
அவ்வோசைதான்கேட்டு அர்ச்சுனனுமேதுசொல்வான்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தயிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
என்றுமவன்சொல்லி ஏகிநடக்கலுற்றான்
அந்தயிடம்போகவென்று ஆராய்ந்துதேடிவந்தான்
குயிலிருக்குமிடந்தனிலே கொற்றவனும்வந்தானே
மயிலிருக்குமிடந்தனிலே மன்னவனும்வந்துநின்று
உற்றுற்றுப்பார்த்தானே ஒளிபிறந்தகண்ணாலே
பார்த்தயிடங்களெல்லாம் பச்சென்றுதானிருக்கும்
கண்டயிடங்களெல்லாம் கமகமென்றுபூமணக்கும்
தாமரைப்பொய்கையுஞ் சாலையுஞ்சோலைகளும்
ஆலவிருக்ஷத்தின்கீழ் அண்ணர்பள்ளிகொண்டதுவும்
வெற்றிமதயானை வீமனைக்கண்டானே
கண்டுமனமகிழ்ந்தான் காளையருச்சுனனும்
பார்த்துமனமகிழ்ந்தான் பார்த்தீபனருச்சுனனும்
உற்றுற்றுப்பார்த்தானே உள்ளங்குளிர்ந்தானே
நின்றுனரைநாழி நினைத்தானேகோடிபுத்தி
அண்ணர்தருமருமே அங்கேமனஞ்சலித்து
வீமனைக்காணுதே மெத்தமனஞ்சலித்து
தம்பியைக்காணமல் தவித்துப்புலம்புகையில்

ஆங்கேதருமரவர் ஆயாசப்பட்டிருக்க
இங்கேமதவீமன் இப்படிக்குத்தூங்குறனே
மானும்பிடியாமல் மரத்தடியில்தூங்குரானே
தண்ணீர்குடித்துமல்லோ தாகமுந்தீர்ந்தபின்பு [ன்று
அண்ணரைத்தானெழுப்பி அழைத்து நாம்போவோமெ
தாமரைப்பொய்கையிலே யிறங்கினார்தார்வேந்தன்
அப்போதுமாயவரும் அர்ச்சுனரைத்தான்பார்த்து
ஆயர்பெருமாளும் அந்தரத்திலேதுசொல்வார்
ஆரடாயென்குளத்தில் அள்ளிஜலமுண்கிறவன்
எவனடாஎன்குளத்தில் எடுத்துஜலமுண்கிறவன்
இந்தக்குளமென்னுதடா இந்தநதியென்னுதடா
சாலையுஞ்சோலையும் தாமரைப்பொய்கைகளும்
இத்தனையுமென்னுதடா இறங்காதேயென்குளத்தில்
அள்ளிஜலமுண்ண அதிசயஞ்சொல்லுமென்றார்
தாகந்தணியவென்றால் சந்தேகஞ்சொல்லுமென்றார்
அப்போதருச்சுனனும் அவ்வார்த்தைக்கேதுரைப்பான்
என்ன அதிசயமோ எந்தனுக்குச்சொல்லுமென்றான்
எம்பெருமாள்மாயவரும் ஏதுசொல்வாரர்ச்சுனற்கு
வாடாப்பயிருமேது வையகத்தில்பாரமேது
இவ்வார்த்தைசொன்னு லிறங்கிஜலமுண்ணுமென்றார்
ஆனாலழகுமன்னன் அர்ச்சுனராஜதுரை
அவ்வார்த்தைதான்கேட் டருச்சுனனுமேதுசொல்வான்
ஆர்காணும்பேசுறது அந்தரத்திலேயிருந்து
எவர்காணும்பேசுறது எங்கையோதெரியவில்லை
வேண்டிவிடாய்த்து நான் வேர்வைமிகவொழுக
தண்ணீர்விடாயாகத் தாகத்துக்குண்ணவந்தால்
வேண்டாமெனமறித்துத் தீண்டாதெனவுரைத்தீர்
எதிரிட்டுவந்தாலே இருதுண்டாய்ப்போட்டிடுவேன்
கண்டித்துப்போட்டிடுவேன் கண்ணில்தெரியடா நீ
எதிரிலேநிற்கவேணும் என்சண்டைபார்க்கவேணும்
சரியாகநின்றல்லவோ சண்டைபண்ணிபார்க்கவேணும்

என்றதுபேசியே இறங்கிஜலங்குடித்தான்
தாகவிடாய்தீரத் தண்ணீர்குடித்தானே
தண்ணீர்குடித்தவுடன் தலையைசுழற்றுகுது
அப்போதுமயக்கமல்லோ அதிமயக்கமாகுது
கஞ்சாமயக்கம் கனமயக்கமாகுது
அபினிமயக்கமல்லோ அவனைச்சுழற்றுகுது
தள்ளாடிவாரானே தாமழுடியானும்
ஆனலழகுமன்னன் அர்ச்சுனராஜனவன்
என்னதுமென்னுகிறன் இந்திரன்குமாரனுமே
நினையாது நினைக்கின்றன் நீலவர்ணன்மைத்துனனும்
ஆரோதெரியாது அந்தரத்தில்பேசினர்கள்
எவரோதெரியாது எந்தனுடன்சொன்னரே
தண்ணீர்குடியாதேயென்று சமர்த்துகள்பேசினரே
தீர்த்தங்குடியாதேயென்று வார்த்தைபலசொன்னரே
அவ்வார்த்தைதள்ளின னள்ளியேதீர்த்தமுண்டேன்
சொன்னசொல்தனைமறுத்துசுருக்காகத்தீர்த்தமுண்டேன்
உண்டபொழுதே உடம்பைப்பிரட்டுதையோ
தலையைச்சுழற்றுதையோ தருமருக்காருரைப்பார்
அண்ணர்க்குந்தம்பியற்கும் ஆரணங்குதுரோபதைக்கும்
இந்தவிசேஷமதை எவர்கள்போய்ச்சொல்லுவார்கள்
செத்தவிசேஷமல்லோ சேதிபோய்ச்சொல்வாரார்
மாண்டவிசேஷமது மறுவார்த்தைசொல்வாரார்
என்றுமவன்சொல்லி ஏகிவழிநடந்தான்
தள்ளாடித்தத்தளித்துத் தானேநடந்துவந்து
அண்ணருகாக அருச்சுனன்வந்துநின்றன்
வீமருகாக விஜயனும்வந்துநின்று
கண்ணுறக்கம்போலவே கருகிவந்துபடுத்தானே
எம்பெருமாள்மாயவரும் இதுதான்சமயமென்று
காலனையெச்சரித்தார் கரியமால்பொட்டெனவே
அருச்சுனன்தன்னுயிரை அதிவிரைவாய்வாங்குமென்று
அப்போதுஎமனவர் அதிவேகமாகவந்து [ர்

சூலங்கொண்டுகுத்தியே பாசங்கொண்டுகட்டினனே
பதைக்கஉயிர்மாய்த்த பார்த்திபனருச்சுனனை
இப்படியாக இவன்மாண்டிருக்கையிலே
தக்கபுகழுடைய தருமநடசேதியெல்லாம்

வீமனைத் தேடப்போன அருச்சுனன் இன்னம் வந்து
சேரவில்லை யென்று தருமர் புலம்புகிறது.

அருச்சுனன்போனபின்பு அழகானதருமரவர்
மனதுகலங்கியே மன்னவருமேதுசொல்வார்
கானகத்திற்போனவர்கள் கடுகவந்துசேரவில்லை
இன்னேரமாச்சுதே யின்னம்வரக்காணேன்
நாமத்தழகா நகுலா நீவாருமென்றூர்
தக்கபுகழுடைய தருமரழைக்கவேதான்
நாமமுடியான் நகுலனுமோடிவந்து
அண்ணரெதிரேவந்து அடிவணங்கித்தெண்டனிட்டு
கைகட்டிவாய்புதைத்து கட்டழகனேதுசொல்வான்
என்னையழைத்தபணி ஏதுபணிசொல்லுமென்றூர்
அழைத்தகாரியத்தைநீ ரண்ணாவேசொல்லுமென்றூர்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆணழகர்தருமலிங்கம்
கண்ணீர்ததும்பிடவே கட்டழகரேதுசொல்வார்
வீமனைத்தேடியே வில்விஜயன்போனானே
மான்பிடிக்கப்போனதொரு மதவீமனைக்காணேன்
தேடியேபோனதொரு தேர்விஜயனைக்காணேன்
போனவிடமறியேன் போய்ப்பதுங்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
ஆரோடேசண்டை அமரதுசெய்கிறூரோ
எவரோடேசண்டை எதிர்த்துப்போர்செய்கிறூரோ
மானைவளர்த்தவர்கள் வந்துவதைசெய்தாரோ
கண்டுவதைத்தாரோ கண்டதுண்டமாக்கினூரோ
செத்ததுவும்பிழைத்ததுவும் சேதிதெரியவில்லை
மாண்டதுவும்பிழைத்ததுவும் வார்த்தைதெரியவில்லை

சந்தனமிருபுயத்தை சரியவெட்டிப்போட்டாரோ
குங்குமமிருபுயத்தை குலையவெட்டிப்போட்டாரோ
மலையேபருவதமே வாழ்மலையேகுஞ்சரமே
காணவும்போரேனோ கட்டழகர்தம்பியரை
பார்க்கவும்போரேனோ பாவியென்கண்ணாலே
இன்னமொருவேளை யினிக்காணப்போரேனோ
இருவரையுந்தேடியே இட்டுவருவாயோ
போரீரோதம்பியரே புத்தியுள்ளகண்மணியே
அண்ணருரைகேட்டு ஆணழகனேதுசொல்வான்
அஞ்சிப்புலம்பாதே ஆயாசமாகாதே
ஆரோடேசண்டை அமராதுசெய்தாலும்
எவரோடேசண்டை எதிர்த்துப்போராடினாலும்
சண்டையதுகெலித்துச் சடுதியிற்கொண்டுவாரேன்
அமராதுநான்கெலித்து அவர்களைக்கொண்டுவாரேன்
எங்கேயிருந்தாலும் இப்போதேஆராய்ந்து
ஓடியழைத்து ஒருநொடியில்வாரேனென்றான்
தேடியழைத்து சீக்கிரத்தில்வாரேனென்றான்

நகுலன் தருமராஜர் சொற்படிக்கு வீமனையும்
அருச்சுனனையும் தேடிப்போனது.

கடுகவெழுந்தானே கட்டழகன்சீர்நகுலன்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டித் தாமரைப்பூசுங்குவிட்டு
பாங்கெடுத்துச்சொருகினானே மன்னனிடப்புறத்தே
கத்திசொருகினானே காளைவலம்வந்து
ஆயுதத்தைத்தானெடுத்து அண்ணருக்குத்தெண்டனிட்டு
போகவிடைதாருமென போர்மன்னன்கைதொழுதான்
தக்கபுகழுடைய தருமர்மனமகிழ்ந்து
வாழ்த்தியெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து

நாமமுடியோனே நகுலாயென்கண்மணியே
போனவனந்தனிலே பொறுமையுடன்நீபார்த்து
சென்றவனந்தேடி சீக்கிரமாயாராய்ந்து
காளையிருவரையுங் கண்டழைத்துவாருமென்றார்
வீமனருச்சுனனை விரைவிலழைத்துவாரும்
போய்வாருமென்னப் பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தானே வேந்தன்நகுலனுமே
வாரானேசீர்நகுலன் வடக்கெழுந்தசூரியன்போல்
ஆயுதத்தைக்கைபிடித்து அண்ணர்களைத்தேடிவாரான்
தேடியேவாரானே சீரானகானகத்தில்
ஆரணியமெங்குந்தேடி அண்ணர்களைக்கூவினான்
அங்கேயுங்காணுமல் அப்பாலேபோகலுற்றான்
மற்றோர்வனந்தனிலே மன்னர்களைத்தேடினான்
அங்கேயுங்காணவில்லை அழகானமன்னர்களை
நாமமுடியான் நகுலன்மனங்கலங்கி
சிந்தைகலங்கியவன் திடுக்கிட்டுமெய்மறந்து
அழுதுபுலம்பினனே அண்ணர்களைக்காணுமல்
அப்போதுநகுலனுக்கு அதிகதாகமுண்டாச்சு
தண்ணீர்கவனங்கள் தாகவிடாயாகுது
நாவுவறட்டுகுது நகுலமகாராஜனுக்கு
அண்ணரைத்தேடியே அனேகதூரம்வந்தோமே
அண்ணரைக்காணுமே அதிகதாகமுண்டாச்சே
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிமனந்தளர்ந்து
என்றுவிசாரமிட்டு இருக்கின்றவேளையிலே

எம்பெருமாள் நகுலராஜனை விஷநீர்
குடிப்பித்துக் கொல்லுகிறது.

அப்போதுமாயவரும் அங்கெனவேயேதுசொல்வார்
நாமமுடியான் நகுலனைக்கொல்லவென்று
எம்பெருமாள்மாயவரும் எமனையெச்சரித்தார்
எமனும்ராமனுடன் இருவருமொன்றாகி
மயிலுங்குயிலுமங்கே வனத்திலேகூவுகுது

நாமமுடியான் நகுலனவன்பார்த்து
அந்தக்குரல்கேட்டு ஆலோசனைபண்ணுகிறான்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தவிடந்தனிலே குயிலும்மயிலிருக்கும்
என்றுமனங்குளிர்ந்து ஏகிநடந்தானே
அண்ணரிருவர்களும் அங்கேபடுத்திருந்தார்
கண்டுமகிழ்ந்தானே கட்டழகன்சீர் நகுலன்
ஆனந்தமானானே அண்ணர்களைக்கண்டவுடன்
நாமமுடியான் நகுலனுமேதுசொல்வான்
அண்ணன் தருமராயர் ஆயாசப்பட்டிருக்க
ஆரணங்குதுரோபதையு மங்கேபுலம்பிநிற்க
என்னமனதுகொண்டு இங்கேபடுத்தார்கள்
தண்ணீர்குடித்துநாம் தாகவிடாய்தீர்ந்தபின்பு
அண்ணர்களையெழுப்பி அழைத்துநாம்போவோமென
குளத்திலிறங்கினானே கொப்பெனவே நகுலனவன்
மாயன்பெருமாளும் மலைராமர்தான்பார்த்து
அந்தரமாய்நின்று ஆயரவரேதுசொல்வார்
ஆடாதம்பியரே அள்ளிஜலமுண்கிறவன்
சாலையுஞ்சோலையும் தாமரைப்பொய்கையும்
இத்தனையுமென்னுதடா இறங்கிஜலமுண்ணாதே
தண்ணீர்குடியாதே தாமரைப்பொய்கையிலே
குளத்தைவிட்டப்புறம்வா கொற்றவாயென்றுசொன்னார்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான் நகுலனவன்
ஆரோதெரியாது அந்தரமாய்ப்பேசுகிறீர்
எவரோதெரியாது எங்கேயோபேசுகிறீர்
வார்த்தைகள்கேட்குது வயணந்தெரியவில்லை
சொன்னசொல்கேட்குது சொரூபந்தெரியவில்லை
அந்தரதேவதையோ சந்திரசூரியரோ
ஆகாயதுர்க்கைகளோ ஐயன்பிடாரிகளோ
ஆரோதெரியவில்லை அருகில்வந்துபேசுமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயர்பெருமாளும்

எங்கள்குளத்திலேநீ இறங்கிஜலமுண்ணவென்றால்
வையகத்திலதிசயமும் வருத்தமானபாரங்களும்
வாடாப்பயிரின் வர்னமுறைத்தாயானல்
இறங்கிஜலமுண்ணும் இல்லையென்றால்போய் நடவும்
சொன்னாலேநீர்குடியும் சொல்லாமற்போனாலே
தண்ணீர்குடியாதே தாமமுடியானே
குளத்திலடிவையாதே கொற்றம்போர்மன்னவனே
என்றதோர்சொற்கேட்டு ஏதுசொல்வான்சீர் நகுலன்
நீர்கேட்கும்வார்த்தைக்கு நான்கேட்கு ந்தன்மையென்ன
நீதியல்லநீர் தூர நின்றுதான்பேசுறது
என்னெதிரில்வந்தாலே இருதுண்டாய்போட்டிடுவேன்
என்றுசிலவார்த்தை நின்றுமவன்பேசினனே
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயர்பெருமானும்
மறுவார்த்தைசொல்லாமல் மாயவருந்தானிருந்தார்
அப்போ நகுலனுமே ஆனந்தமாகவேதான்
குளத்திலிறங்கியே கொப்பெனவே நகுலனவன்
தாகந்தெளியவே தண்ணீருந்தான்பொசித்தான்
தாகந்தெளிந்தானே தருமர்தம்பியானவனும்
தண்ணீர்பொசித்தவுடன் தாருமாருய்விழுந்து
தலையைச்சுழற்றுது தார்வேந்தராஜனுக்கு
உடம்புமறக்குதே உத்தண்டவீரனுக்கு
எண்ணுதுமெண்ணுகிறன் இயலான நகுலனுமே
ஆரோதெரியாது அந்தரமாய்ச்சொன்னவர்கள்
அவ்வார்த்தைகேளாமல் அள்ளியேதீர்த்தமுண்டேன்
சொன்னசொற்கேளாமல் சுருக்காகத்தீர்த்தமுண்டேன்
கண்ணுந்தெரியவில்லை காரணமுந்தோன்றவில்லை
நிலமுந்தெரியவில்லை நினைவைமறக்குதே
அறியாமல்நான்பொசித்தே னென்றல்லோ ஆணழகன்
அண்ணற்குந்தம்பியற்கு மாரணங்குதுரோபதைக்கும்
அந்தவனந்தேடி ஆர்தான்போய்சொல்லுவார்கள்
இந்தவிசேஷமதை எவர்போயுரைப்பார்கள்

தருமரிதையறிந்தால் சற்றும்பொறுக்காரே
அண்ணுவுந்தம்பியரும் அழுதுபுலம்புவார்கள்
இங்கேவுயிர்வாங்கி இவர்களிருக்கையிலே
அங்கேநகுலனுமே அண்ணரண்டைமாண்டானே
மாண்டானேசீர்நகுலன் வசநாபிநீரையுண்டு
செத்தான்நகுலனுமே சீரானகானகத்தில்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

வீமனையும் அர்ச்சுனனையும் அழைக்கப்போன
நகுலனையுங் காணேனென தருமர் புலம்பல்.

அப்போதுமன்னவரும் ஆணழகரேதுசொல்வார்
சகாதேவனையழைத்து தருமரவரேதுசொல்வார்
அப்பாசகாதேவா அதிசயத்தைநீர்கேளும்
மான்பிடிக்கப்போனதொரு மதவீமராஜனையும்
வீமனைக்காணவென்று வில்விஜயராஜாவும்
தேடியேபோனானே தேர்விஜயனருச்சுனனும்
நல்விஜயரைத்தேட நகுலனும்போய்நடந்தான்
மூவர்களும்போனாரே முடிவேந்தராஜாக்கள்
ஒருவரையுங்காணேனே உத்தரவுதானறிய
மான்பிடிக்கப்போனவர்கள் வந்தின்னஞ்சேரவில்லை
தேடியேபோனவர்கள் திரும்பிவந்துசேரவில்லை
தம்பிசகாதேவா தாமமுடியானே
தேடியேபோராயோ சேதிவந்துசொல்லாயோ
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ மறுவார்த்தைநானறியேன்
மானைப்பிடிக்கையிலே மான்வளர்த்தார்கண்டாரோ
மானைவளர்த்தவர்கள் வந்துவதைபண்ணுரோ
சப்தரிஷிகளோ சந்நியாசியானவரோ
சப்தரிஷியவர்கள் சபித்துமேபோட்டாரோ
கொன்றுபழிவாங்கிக் கொலைசெய்துபோட்டாரோ
காணவும்போறேனே கட்டழகர்தம்பியரை
பார்க்கவும்போறேனே பாவியென்கண்ணாலே

இன்னமொருக்கால் இங்கேவந்துசேர்வாரோ
இளையசகாதேவா இட்டுக்கொண்டுவாராயோ
காளைசகாதேவா கண்டழைத்துவாராயோ
பாரமுடிமன்னர்களைப் பார்த்துமேநீயழைத்து
வருவாயோதம்பியரே வார்த்தைகள்சொல்லுமென்றார்
அப்போசகாதேவன் அண்ணரைத்தெண்டனிட்டு
தாமமுடியான் சகாதேவனேதுசொல்வான்
அஞ்சாதிரண்ணுவே அழைத்தோடிவாரேன் நான்
காளையந்தமூவரையுங் கண்டழைத்துவாரேனென்றான்
பார்த்தழைத்துவாரேனென்றான் பாரமுடிமன்னர்களை
என்றுஎழுந்தானே இளையசகாதேவன்

சகாதேவன் தருமர் சொல்லைக்கேட்டு தமையன்மார்
மூவரையுந் தேடிக்கொண்டுபோனது.

சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
மண்டியிடுங்கால்களுக்கு மாதனம்பூச்சல்லடமாம்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்குக் குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
சந்திரகாந்திதட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஈட்டிசமுதாடு எடுத்தான்பெரியகத்தி
கத்திசொருகியல்லோ கடுகவெழுந்தானே
அண்ணரைதெண்டனிட்டு ஆணழகனேதுசொல்வான்
போகவிடைதாருமென்றான் போர்விஜயன்தம்பியவன்
தக்கபுகழுடைய தருமரவர்பார்த்து
வாழ்த்தியெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
அப்பாசகாதேவா அறிவுள்ளகண்மணியே
அண்ணன்மார்போனதொரு அடவிதனிற்சென்று
காளையந்தமூவர்களைக் கண்டழைத்துநீர்வாரும்
அண்ணர்களை நீர்கண்டு யழைத்தோடிவாருமென்றார்
போய்வாருமென்றுசொல்லி பொருந்திவிடைகொடுத்தார்

விடைபெற்றெழுந்தானே வேந்தன்சகாதேவன்
அண்ணரைதேடியே அதிவிரைவாய்போய்நடந்தான்
தமையர்களைத்தேடியே தார்வேந்தர்போகலுற்றான்
எட்டிநடந்தானே எழிலானசூரியன்மேல்
தேடிவருகிறானே சீரானகானகத்தில்
எங்கெங்குந்தேடியே இனியவிடமாராய்ந்து
கடுகவருகையிலே காதுமடைத்திடுது
நாவுவறட்டுகுது நல்லஜலங்கிட்டாமல்
மெத்தக்களையாச்சு வேந்தன்சகாதேவனுக்கு
அப்போசகாதேவன் ஆணழகனேதுசொல்வான்
அண்ணர்களைத்தேடி அநேகதூரம்வந்தோமே
தண்ணீர்களையாகித் தாகமெடுக்குதையா
எங்கெங்கேபார்த்தாலும் இனியஜலங்கிட்டவில்லை
அண்ணரையுங்காணோமே ஆரணியந்தன்னிலேதான்
என்றுமவன்சொல்லி இருக்கின்றவேளையிலே

எம்பெருமாள் சகாதேவமகாராஜனை விஷத்தண்ணீர்
குடிப்பித்துக் கொல்லுகிறது.

அப்போதுஎம்பெருமாள் ஆயரவரேதுசெய்தார்
வந்தசகாதேவனையும் வல்லுயிரைவாங்கவென்று
எமனும்பெருமாளும் ஏறினார்மரமேலே
மயிலுங்குயிலுமே வனத்திலேகூவுகுது
இந்தக்குரல்கேட்டு இளையசகாதேவன்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தவிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
பூவளமுஞ்சோலைகளும் புதுமைகளைத்தான்பார்த்து
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
என்றுநடந்தானே இளையசகாதேவன்
தாமரைப்பொய்கைகளும் தண்ணீர்தடாகமுடன்
நாம்செய்தபுண்ணியத்தால் நல்லஜலங்கிடைத்ததென
அங்கேநடந்து அவசரமாய்வாரபோது

மன்னரந்தமூவர்களும் மரத்தடியிற்படுத்திருந்தார்
அண்ணர்கள்மூவருமா யங்கேபடுத்திருந்தார்
அண்ணர்தனைக்கண்டு அதிகமனமகிழ்ந்தான்
தமையன்தனைக்கண்டு சந்தோஷமானனே
அப்போவொருவார்த்தை ஆணழகனேதுசொல்வான்
அண்ணர்தருமரங்கே அழுதுபுலம்பியேதான்
தம்பியைக்காணுமல் தயங்கியவரிருக்க
ஆரணங்குதுரோபதை யங்கேபுலம்பிநிற்க
என்னைநினைவுகொண்டு இங்கேபடுத்தார்கள்
பச்சைமரத்தின்கீழ் படுத்தவிதமென்ன
இந்தமரத்தடியில் இவர்படுத்தகாரியமேன்
குளிர்ந்தநிழலென்று கோமான்படுத்தாரோ
மலர்ந்தமரமென்று மன்னர்படுத்தாரோ
தாகத்துக்குண்டபின்பு தமையர்தனையெழுப்பி [று
அண்ணர்களையெழுப்பி அழைத்துநாம்போவோமென்
தாமரைப்பொய்கையண்டை தார்வேந்தர்வந்துநின்று
அந்தக்குளத்திலே அள்ளிஜலமுண்ணப்போனன்
அந்தச்சமயத்திலே ஆயரவர்பார்த்து
அந்தரமாய்நின்றலவோ ஆயரவரேதுசொல்வார்
ஆரடாதம்பிநீ அக்குளத்திலிறங்கினவன்
எவனடாதம்பிநீ என்குளத்தில்வந்தவனும்
தண்ணீர்குடியாதே தாகவிடாய்த்தீராதே
இந்தநீரென்னுதடா இந்தக்குளமென்னுதடா
சாலையுஞ்சோலையுந் தாமரைப்பொய்கைகளும்
இத்தனையுமென்னுதடா இறங்கிஜலமுண்ணுதே
இறங்கினுலுந்தனுக்கு யிடறுகள்வந்துவிடும்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்சகாதேவன்
அந்தரத்தில்நின்றுகொண்டு ஆர்காணும்பேசுறவன்
தூரத்திலிருந்துகொண்டு சொல்கிறவனர்காணும்
அந்தரதேவதையோ ஐயன்பிடாரிகளோ
ஆகாசதுர்க்கைகளோ ஐயன்பிடாரிகளோ

பேயோபிசாசுகளோ பிணந்தின்னும்ராட்சசியோ
ஆரோதெரியாது அதட்டியேகேட்கிறவர்
எவரோதெரியாது எந்தனைக்கேட்கிறவர்
மற்றுமொருக்கால்தான் வாய்திறந்துபேசுங்கள்
இன்னமொருக்கால்தான் எதிரில்வந்துசொல்லுங்கள்
என்றசொற்கேட்டு எம்பெருமாளேதுசொல்வார்
தண்ணீர்குடிக்கவென்றால் தரணியின்புதுமைசொல்லும்
வாடாப்பயிருமெது வருந்த மானபாரமெது
அந்தவதிசயங்க ளறிந்தாலுரையுமென்றார்
அறிந்துநீசொன்னாலே அள்ளியேதீர்த்தமுண்ணும்
சொல்லுவாயாமானால் சுருக்காகத்தீர்த்தமுண்ணும்
இல்லாமற்போனாலே யிப்பாலேவந்துவிடும்
தாமமுடியான் சகாதேவராஜனவன்
என்றவுரைகேட்டு யேதுசொல்வான்சகாதேவன்
ஆரோதெரியாது அந்தரத்தில்மிரட்டுகிறீர்
எவரோதெரியாது என்னைமிரட்டுகிறீர்
அருகாகவந்தாலே அடித்தெறிந்துபோட்டிடுவேன்
எதிரிலேவந்தாலே யிருதுண்டாய்போட்டிடுவேன்
சரியாயிருக்கவேணும் சண்டைபண்ணியார்க்கவேணும்
மறைவாயிருந்துகொண்டு வாதாடநீதியுண்டோ
என்றுமவனுரைக்க எம்பெருமாள்தான்கேட்டு
ஒன்றுமேசொல்லாமல் உலகளந்தார்வீற்றிருந்தார்
மறுவார்த்தைபேசாமல் மாயவருந்தானிருந்தார்
அப்போசகாதேவன் ஆனந்தமாகவேதான்
குளத்திலிறங்கினனே கொப்பெனவேதீர்த்தமுண்டான்
அள்ளியேதீர்த்தமுண்டான் ஆவல்தெளிந்திடவே
தண்ணீர்குடித்தானே தாமமுடியானும்
அள்ளிஜலமுண்டபின்பு ஆனந்தமார்பனுக்கு
தண்ணீர்குடித்தவுடன் தலையைச்சுழற்றுகுது
உடம்புபறக்குது உள்ளங்குலையுது
நாவுகுளறுகுது நாமமுடியானுக்கு

தன்னை மறக்குது தார்வேந்தராஜருக்கு
ஆரோதெரியாது அந்தரத்திற்சொன்னார்கள்
எவரோதெரியாது எந்தனுக்குச்சொன்னார்கள்
தண்ணீர்குடியாதேயென்று சத்தம்பிறந்ததெங்கே
அவர்சொல்லைக்கேளாமல் அள்ளிநான் தீர்த்தமுண்டேன்
சொன்னசொற்கேளாமல் சுருக்காகத்தீர்த்தமுண்டேன்
தெரியாமல்நீர்குடித்தேன் சிந்தைகலங்குது
அறியாமல்நீர்குடித்தேன் அங்கம்பிரட்டுகுது
என்று நடந்தானே இளையசகாதேவன்
அண்ணன்மார்தன்னருகே ஆணழகன்வந்துநின்றான்
அப்போசகாதேவன் ஆலோசனைகள்பண்ணி
தம்பிகளைக்காணோமென்று தருமரிங்கேவந்தாக்கால்
வசநாபிதண்ணீருண்டு மாண்டிடுவார்தப்பாது
என்றுமனதிலெண்ணி யெழுதுகிறான்மரத்தடியில்
அண்ணாவேமரத்தடியில் அதிசயமானவார்த்தை
இந்தக்குளத்திலே எவர்தாகமுண்டாலும்
வசநாபிதண்ணீரிது குடித்தால்மடிந்திடுவார்
அண்ணாவேஇக்குளத்தி லள்ளிநீர்குடியாதே
நாங்களிதைகுடித்து நாலுபேரும்மடிந்தோம் [ம்
செத்துமடிந்துவிட்டோம் சிவலோகஞ்சேர்ந்துவிட்டோ
மாண்டுமடிந்துவிட்டோம்வைகுந்தம்சேர்ந்துவிட்டோம்
என்றுமவன்சொல்லி யெழுதினான்மண்மேலே
தலையைச்சுழற்றுகையில் தானும்படுத்துக்கொண்டான்
அந்தச்சமய மறிந்தாரேஎம்பெருமாள்
மாயன்பெருமானும் வார்த்தைகளேதுசொல்வார்
காலனையெச்சரித்துக் கடுகவுயிர்வாங்குமென்றார்
எமனையெச்சரித்து யிவனுயிரைவாங்குமென்றார்
எம்பெருமாள்சொற்கேட்டு எமனவனோடிவந்து
சூலத்தால்குத்தியே துடிக்கவுயிர்பிடித்தான்
பாசத்தால்கட்டியே பதைக்கவுயிர்பிடித்தான்
மாண்டுமடிந்தானே மன்னன்சகாதேவன்

செத்துமடிந்தானே சேரானகானகத்தில்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

ஆரணியத்தில் எம்பெருமாள் சூதினாலே வீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் இந்நான்குபேரும் மடிந்தபின்பு காளமகாரிஷி யாகத்திலுண்டாகிய வேதாளம் ஐந்துபேரையுங் கொல்ல வருகிறது.

அந்தச்சமயத்தில் ஆங்காரமாகவேதாள்
காளமகாரிஷியுங் கருகித்தபசுபண்ணி
அக்கினிக்குழியிலே ஆங்காரவேதாளம்
உண்டாகிவந்துதங்கே உலகந்திடுக்கிடவே
கறுத்தநிறமுடனே கைதனிலேவாளுடனே
பெருத்தமுகத்துடனே பெருந்தொப்பைதன்னுடனே
செவந்தமயிரழகும் சீழ்வடிந்தவாயழகும்
கண்களைப்பார்த்தாலே கருங்குன்றுபோலிருக்கும்
கைகளோகாதவழி கால்கள்வெகுதூரம்
அகண்டபுஜங்களது ஐந்நூற்றுக்காதவழி
பல்லழகைப்பார்த்தாலே பனைமரம்போலிருக்கும்
மூக்கழகைப்பார்த்தாலே முதலைகளைப்போலிருக்கும்
இப்படியாகவே யிருக்குமந்தவேதாளம்
பொல்லாதவேதாளம் பிறந்தது அக்கினியில்
காளமகாரிஷியருகே கடுகவந்துதெண்டனிட்டு
என்னையழைத்துதானே துவகையாக
ஆரைநான்கொல்கிறது அடுத்துப்போர்செய்கிறது
எவரைப்போய்கொல்கிறது எந்தனுக்குசொல்லுமையா
கைகள்பதைக்குது காளமகாமுனியே
வயிறுபசிக்கிறது மாமுனியேசொல்லுமையா
அப்போதுமாமுனியும் அதுசொல்லத்தான்கேட்டு
காளமகாமுனியும் கடுகவெடுத்துரைப்பார்
அக்கினியில்வந்துதித்த ஆங்காரவேதாளம்
நான்சொல்லநீகேளும் ராஜாக்கள்ஐவருண்டு

இந்தவனத்திலே இருக்கிறார்பஞ்சவர்கள்
வீரப்புலிபோலே வந்தார்களைவருண்டு
பாரப்புலிபோலே பஞ்சவர்களைவருண்டு
ஐவரையுங்கொன்றுதின்று அரைநொடியில்வாருமென்
வேதாளந்தான்கேட்டு வெகுவாய்மனங்குளிர்ந்து [றூர்
அவ்வளவுபோதுமென்று ஆக்கிரமித்துபற்கடித்து
ஆக்கிரமித்துபற்கடித்து அதட்டிவருகுதங்கே
எங்கெங்கேயென்றுசொல்லி எழும்பியேகொக்கரித்து
கொக்கரித்துவேதாளம் கும்மாளமாய்வருகுது
அந்தவனங்களெல்லாம் ஆராய்ந்துவருகையிலே
செந்தாமரைப்பொய்கையண்டை செத்திருக்கக்கண்டது
மாமரச்சோலையின்கீழ் மாண்டிருக்கக்கண்டது
இறந்தவரல்லாமல் இன்னமொருவரில்லை
செத்தவரல்லாமல் மற்றுமொருவரில்லை
எங்கேமடிந்தாரோ எவ்விடத்திற்செத்தாரோ
செத்தபிணத்திடத்திற் றேடிப்போவென்றூரோ
மாண்டபிணந்தின்ன மாமுனிபோகச்சொன்ஞர்
எத்தனை நாளுக்குமுன்னே செத்தபிணமிதுவோ
செத்தபிணத்தையோநான் சென்றுபொசிக்கிறது
நாறும்பிணமெடுத்து நானோபொசிக்கிறது
மாண்டபிணத்தைநான் வயிறூரவுண்பேனோ
என்றுமேசொல்லி எழுந்ததுவேதாளம்
அங்கேதிரும்பிவந்து அகோரகோபத்துடன்
மகாவேந்தன்தன்னுடனே வருகுதுவேதாளம்
காளமகாரிஷியருகே கடுகிவந்துவுக்கிரமுடன்
எடுத்துமகாமுனியை இரண்டாய்க்கிழித்தது
வாரியெடுத்துமல்லோ வயிற்றைக்கிழித்தது
நெஞ்சுப்பிளந்து நெருப்புத்தணலெழும்ப
மாமுனியைக்கொன்றபின்பு மனதுமிகக்குளிர்ந்து
சந்தோஷமாகியல்லோ வேதாளந்தானடக்க
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோச்சுது

மனதுமிகக்குளிர்ந்து மற்றோர்வனந்தனிலே
போயதுபிழைத்திருக்கும் பொல்லாதவேதாளம்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

தருமராஜர் தம்பிமார் நால்வரையுங் காணுமென்று
துரோபதையுடன் சொல்லிப் புலம்புகிறது.

வேதாளம்போனபின்பு வேந்தர்தருமரவர்
சாயாம்புமன்னவனுர் தருமாவரேதுசொல்வார்
பாஞ்சாலன்பெண்ணே பைங்கிளியேதுரோபதையே
நெருப்பிற்பிறந்தவளே நீலவர்ணன்தங்கையரே
அனலிற்பிறந்தவளே அபிஷேகப்பத்தினியே
ஐவரையும்மாலையிட்ட ஆதிபரஞ்சுடரே
தோராவடிவழகி துரோபதையேநீர்கேளும்
மான்பிடிக்கப்போனதொரு மதவீமனைக்காணும்
வீமனைத்தேடிப்போன விஜயன்வரக்காணும்
இருவரையுந்தேடிப்போன நகுலன்வரக்காணும்
மூவரையுந்தேடிப்போன சகாதேவனைக்காணும்
நால்வரையுங்காணுமே நாயகமேயென்னசெய்வோம்
செத்தார்பிழைத்தாரோ சேதிதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ வார்த்தைதெரியவில்லை
ஆரோடேசண்டை அமராதுசெய்கிறுரோ
எவரோடேசண்டை எப்படிப்போர்செய்கிறுரோ
மானைவளர்த்தவர்கள் வந்துவதைபண்ணுரோ
எந்தத்தபோதனர்கள் எவர்கள்கொன்றுபோட்டாரோ
தபசிற்பெரியவர்கள் சபித்தாரோநானறியேன்
வரத்திற்பெரியவர்கள் வதைசெய்துபோட்டாரோ
போனவிடமறியேன் போர்செய்ததாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
தேடியேபோவோம்வா தேவியேயென்றழைத்தார்
ஆரணங்குதுரோபதையா ளப்படியேநல்லதென்றுள்
துரோபதையுந்தருமருந் துள்ளியெழுந்திருந்து
தேடப்புறப்பட்டார்கள் சீரானகானகத்தில்

தருமரும் துரோபதையும் வீமன், அர்ச்சுனன்,
நகுலன், சகாதேவன் இவர்கள் நாலுபேரை
யுந் தேடிக்கொண்டு போனது.

கூவிப்புலம்பியே கொப்பெனவேவாருர்கள்
அழுதுபுலம்பியே அந்தவனந்தேடிவாருர்
இருண்டவனங்களெல்லாம் எங்கெங்குந்தேடிஞரே
தம்பியரைக்காணுமல் தயங்கிஞர்தருமரங்கே
பாராமல்தம்பிமாரைப் பதைத்துப்புலம்பிஞர்கள்
தக்கப்புகழுடைய தருமரங்கேதுசொல்வார்
தோராவடிவழகி துரோபதைபாஞ்சாலி
இந்தவனத்திலே எங்கெங்குந்தேடிஞேமே
காளையந்தநால்வரையும் காட்டிலேகாணவில்லே
இந்தவனந்தாண்டி இனியவனம்போவோமென்று
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோய்நடந்தார்
தேடியேவாருர்கள் சீரானவனந்தனிலே
தருமருக்குந்துரோபதைக்குந் தாகமெடுக்குது
நாவுவறட்டுகுது நாமமுடியாற்கு
ஆரணங்குதுரோபதைக்கு அதிகதாகமுண்டாச்சு
தண்ணீர்கவனமுந் தாகவிடாயாச்சுது
தக்கப்புகழுடைய தருமரவரேதுசொல்வார்
என்னசெய்வோம்பெண்ணே நாம் எங்குஜலம்கிட்டாது
மன்னவரைக்காணேமே மாதரசேயென்னசெய்வேன்
தம்பிகளைக்காணேமே தாகவிடாய்கொள்கிறதே
என்னசெய்வேனென்றுசொல்லி இளைத்துப்புலம்புகையி
அந்தச்சமயத்திலே அரிராமரென்னசெய்தார் [ல்
மயிலுங்குயிலுமங்கே மரத்தின்மேலேறியே
வனத்தில்குயிலு மயிலுங்கூவுது
அந்தக்குரல்கேட்டு அங்ஙனமேயேதுசொல்வார்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தவிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்

என்றுநடந்தாரே இளந்தோப்புதன்னருகே
தாமரைப்பொய்கையண்டை தம்பிமார்தானிருந்தார்
பள்ளிகொண்டிருக்கிறதைப் பார்த்தாரே தருமலிங்கம்
தக்கபுகழுடைய தருமராஜரே தாசொல்வார்
தோராவடிவழகி துரோபதையேகண்டாயோ
தம்பிமார்பள்ளிகொண்ட தைரியத்தைப்பார்த்தாயோ
மானும்பிடியாமல் வந்துசேதிசொல்லாமல்
குளிர்ந்தநிழலருகே கூசாமற்பள்ளிகொண்டார்
தண்ணீர்குடித்துநாம் தாகவிடாய்தீர்ந்தபின்பு
தம்பியரைதானெழுப்பித் தையலரேபோவோமென்றார்
என்றுமவருரைத்து இளந்தோப்பிற்போய்ப்புகுந்து
தாமரைப்பொய்கையிலே இறங்கினார்தருமராஜர்
அப்போதுமாயவரும் அரிராமர்தான்பார்த்து
அந்தரமாய்நின்று ஆயராங்கேதுசொல்வார்
ஆரடாதம்பிநீ அக்குளத்திலிறங்கினவன்
எவனடாதம்பிநீ இறங்கிஜலமுண்கிறவன்
இந்தக்குளமென்னுடடா இந்தநதியென்னுதடா
சாலையுஞ்சோலையும் தாமரைப்பொய்கைகளும்
இத்தனையுமென்னுதடா இறங்கிஜலமுண்ணாதே
என்றசத்தங்கேட்டுமே எதிசொல்வார்தருமராஜர்
ஆரோதெரியாது அந்தரமாய்ப்பேசுறது
எவரோதெரியாது எவ்விடமோபேசுறது
அந்தரதேவதையோ சந்திரசூரியரோ
ஆகாயதூர்க்கைகளோ ஐயன்பிடாரிகளோ
வானுலகதேவர்களோ வந்தென்னைக்கேட்கிறது
பேயோபிசாசுகளோ பிணந்தின்னும்ராட்சதரோ
ஆரோதெரியாது அந்தரமாய்ப்பேசுகிறீர்
எவரென்றுநானறியேன் எங்கேயோபேசுகிறீர்
வார்த்தைகள்கேட்குது வயணந்தெரியவில்லை
உத்தரவுகேட்குது உருவந்தெரியவில்லை
பேச்சுகள்கேட்குது பேருந்தெரியவில்லை

தாகவிடாயாக தண்ணீர்குடிக்கவந்தேன்
நாவுவறட்டுகுது நடுங்குதுதிரேகமெல்லாம்
உள் நாக்குவரட்டுகுது உத்தரவுதாருமையா
உத்தரவுதந்தாலே உண்ணுகிறேன்தீர்த்தமிங்கே
வார்த்தையுரைத்தாலே வாரிஜலமுண்ணுகிறேன்

எம்பெருமாள் தருமர் தம்பிமார் நாலுபேரையும்
அதிசயங் கேட்டதற்கு யாருஞ் சொல்ல
வில்லை தருமர் சொல்லுகிறது.

என்றுரைக்கதருமலிங்கம் ஏதுசொல்வார்மாயவனார்
இப்பூமிதன்னிலே என்ன அதிசயங்கள்
அதிசயத்தைசொன்னீராகு ,றள்ளியேதீர்த்தமுண்ணும்
இல்லாமற்போனாலே இப்பாலேவந்துவிடும்
சொல்லாமற்போனீராகுல் சுருக்காய்நடவுமென்றார்
என்றசொல்தான்கேட்டு ஏதுசொல்வார்தருமலிங்கம்
மனிதர்பிறக்கிறதும் மனிதரிறக்கிறதும்
இதுவே அதிசயங்கள் இனியொன்றுமில்லையென்றார்
அவ்வயணங்கேட்டு அரிராமரென்னசொல்வார்
இதுவோ அதிசயங்காண் இனியொன்றுமில்லையோதாண்
இன்னமொருவார்த்தை உண்மையுரையுமென்றார்
வையகத்துமாந்தருக்கு வருத்தங்களானதுகாண்
ஏதுவருத்தமென்றார் இனிப்பிறந்தபேர்களுக்கு
அப்போதருமரவர் ஆயருரைக்கேட்டு
சாயாம்புமன்னவனார் தருமரங்கேதுசொல்வார்
பத்துமாதஞ்சுமந்து பாலகனையுண்டாக்கி
முந்நூறுநாள்சுமந்து முருகுழலாள்தன்னருகே
பெற்றெடுத்ததாயாருக்குப் பெரியசுமையொழிய
மற்றுஞ்சுமையில்லை வையகத்துமாந்தருக்கு
இவ்வயணங்கேட்டு ஏதுசொல்வார்மாயவனார்
இன்னமொருவார்த்தை இயம்புவேன்சொல்லுமென்றார்
வையகந்தனிலே வாடாப்பயிருசொல்லும்
என்றைக்கும்வாடாத இனியபயிர்சொல்லுமென்றார்

ஆயரிவையுரைக்க அவ்வார்த்தைதான்கேட்டு
சாயாம்புமன்னவனுர் தருமரங்கேது சொல்வார்
வாடாதிருக்குங்காண் வளருமருகம்புல்
அந்தச்சொல்தானுரைத்தார் அங்கெனமேவமாயவர்க்கு
இவ்வயணங்கேட்டுமே எம்பெருமாளென்ன சொல்வார்
சந்தோஷமாச்சுது தாகந்தெளியுமென்ருர்
உத்தரவுதந்தாரே உலகளந்தாரெம்பெருமாள்
தக்கபுகழுடைய தருமரவர்கேட்டு
உண்ணுமென்றுசொன்ன உத்தரவுதான்கேட்டு
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
தாகந்தெளிவதற்கு தண்ணீர்குடித்தார்கள்
அள்ளிப்புசித்தார்கள் ஆவல்தெளிந்திடவே
தருமருந்துரோபதையுந் தாகத்துக்குண்டார்கள்
தாகந்தெளிந்தபின்பு தம்பிமாரண்டைவந்தார்

தருமர்வந்து தம்பிமார்களை எழுப்ப நாலுபேரும்
இறந்துவிட்டாரென்றறிந்து புலம்புகின்றது.

நாலுபேரண்டைவந்து நடுவேயிருந்துகொண்டு
சகாதேவன்படுத்திருந்த தலைமாட்டிலெழுதியதோர்
வாசகத்தைப்படித்தாரே மன்னர்தருமலிங்கம்
என்னவென்றெழுதி யிருந்ததென்ருல்வாசகத்தில்
நால்வருமாகவே நச்சுப்பொய்கைதீர்த்தமுண்டு
விஷநீரையுண்டலவோ வேந்தர்மடிந்துவிட்டோம்
மாண்டுமடிந்துவிட்டோம் நீங்கள்வந்தாலண்ணுவே
தாகத்துக்குண்ணுதே தப்பிப்பிழையுமென்று
இவ்வயணமாகவே எழுதியிருக்குது
பார்த்துப்படித்துப் பயந்தாரே தருமராயர்
செத்துமடிந்தார்கள் சீரானதம்பியர்கள்
மாண்டுமடிந்தார்களென்று மன்னர்புலம்புகிருர்
என்னசொல்லிபுலம்புகிருர் இருண்டவனந்தனிலே
மலையேபருவதமே மாண்டுமடிந்தீரோ
செம்மலையேபருவதமே செத்துமடிந்தீரோ

நீலமலையே நிலத்தோடேசாய்ந்தீரோ
கல்லான தூணுக்கு கலக்கமில்லையென்றிருந்தேன்
கல்லான தூணைக் கரையானரித்த துவோ
இரும்பான தூணுக்கு என்னகுறையென்றிருந்தேன்
இரும்பான தூணுமே இற்றுவிழுந்துதே
வச்சிரத்தூணுக்கு மயக்கமில்லையென்றிருந்தேன்
வச்சிரத்தூணலவோ மண்ணோடுளுத்துதே
செம்பருந்துவந்தென்னைச் சிறகாலடித்துதே
குஞ்சைப்பறிகொடுத்த கோழிபோலானேனே
ரெக்கைபறிகொடுத்த டேகைபோலானேனே
கையறுத்தஆனைபைப்போல் கலங்கினேன்தம்பியரே
ஓடுகிறமானுக்கு ஒருகாலொடிந்தாற்போல்
உள்ளங்குலைந்து உருகிறேன் தம்பியரே
எந்தனைத்தவிக்கவிட்டு எங்கேமறைந்தீர்கள்
ஐயையோதெய்வமே அலையவிட்டுப்பார்த்தீர்களோ

தருமராஜர் வீமனைப்பார்த்துப் புலம்புகிறது.

தக்கபுகழுடைய தருமரவரெழுந்து
வீமனருகில்வந்து வேந்தர்புலம்புகிறார்
வெற்றிமதயானை வீமாமதகரியே
கட்டிக்கரும்பேயென் கண்மணியேயெங்கொளித்தாய்
நூலார்கடுந்திரளார் நூற்றொருமன்னரையும்
கொல்லுகிறேனென்று நீ கொடியசபதமிட்டாய்
அவ்வார்த்தைதான்மறந்து அப்பா நீயெங்கொளித்தாய்
வச்சிரமுடியேநீ மண்ணோடேசாய்ந்தாயோ
தங்கமுடியேநீ தரையிற்கவிழ்ந்தாயோ
தாயைமறந்தாயோ தமையனை நீமறந்து
எங்கேயொளித்தாயோ எந்தநாடுபோனாயோ
என்னையலையவிட்டு எங்கேநீபோயொளித்தாய்
என்றுபுலம்பி இளைத்துமண்ணில்மூர்ச்சையானார்
களைத்துவிழுந்தாரே கட்டழகர்தருமலிங்கம்
அன்றுவொருநாழிகை சென்றபிறகாக

தருமராஜர் களைதெளிந்து எழுந்திருந்து
அர்ச்சுனனைப் பார்த்துப் புலம்புகிறது.

தோராவடிவழகி துரோபதையாளோடிவந்து
களைத்ததருமருக்கு கடுமூர்ச்சைதெளியவென்று
காட்டில்தழையொடித்து கடுகெனவேயோடிவந்து
பச்சைத்தழையொடித்து பைங்கிளியாள்வீசலுற்றாள்
வீசக்களைதெளிந்து வேந்தரெழுந்திருந்து
என்னவென்றுசொல்லி எடுத்துப்புலம்புகிறார்
ஆணலழகுமன்னா அர்ச்சுனாஎன்பிறப்பே
என்னைத்தனியேவிட்டு எங்கேநீபோயொளித்தாய்
மீசைமுருக்கழகா விழியிற்கருப்பழகா
நாவிலேநக்ஷத்திரம் நயனவிழிப்பார்வைகளும்
தோளில்துளசிமாலை தொப்புளிலமிர்தகலசம்
பல்லிலேபரசவீணை பாதத்தில்தாமரைப்பூ
முதுகிலேமச்சரேகை முழங்கால்முத்துமாணிக்கம்
இடதுகால்விருதுபொம்மை வலதுகால்வீரதண்டை
தலவிருதுகுலவிருது சத்ராதிபோர்விருது
எதிர்த்தவன்றன்விருதும் எதிராளிமுகவிருதும்
இத்தனைவிருதுகளை எடுத்துநீபூட்டிக்கொண்டு
கட்டியெதிர்த்தாலே கலங்குமேசேனையெல்லாம்
சத்ராதிகளைஜெயிக்கும் தனஞ்செயரே அர்ச்சுனரே
எதிரிகளைஜெயிக்கும் என்பிறப்பேஅர்ச்சுனரே
என்னைப்பிரிந்துநீ இறந்துமடிந்தாயோ
அழகையெழுதினவர் ஆயுளையெழுதாரோ
வடிவமெழுதினவர் வயதையெழுதாரோ
பெற்றாளேகுந்தியம்மாள் பிரபலங்கள்காணவென்று
பெற்றாள்வயிற்றிலேநீ பெருநெருப்பையிட்டாயோ
என்னைத்தவிக்கவிட்டு இறந்துவிட ஞாயமுண்டோ
என்றுசொல்லிதருமரவ ரேங்கிமனந்தளர்ந்து
அழுதுபுலம்பியே அங்ஙனமூர்ச்சையானார்
களைத்துவிழுந்தாரே கட்டழகர்தருமலிங்கம்

தருமராஜர் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து
நகுலனைப் பார்த்துப் புலம்புகிறது.

களைத்ததருமரையே கண்டந்த துரோபதையாள்
துள்ளியெழுந்திருந்து துரிதமுடனேடிவந்து
காட்டில்தழையொடித்துக் கடுகெனவேயோடிவந்தாள்
தருமருகாகத் தையலரும்வந்துநின்று
பச்சைத்தழையொடித்து பைங்கிளியாள்வீசுகிருள்
காட்டுத்தழையொடித்துக் கடுகெனவேவீசினளே
மற்றுமொருநாழி யுற்றபிறகாக
வீசக்களைதெளிந்து வேந்தரெழுந்திருந்து
மூர்ச்சையதுதெளிந்து முன்னின்றுபுலம்புகிறர்
அப்பா நகுலாயென் னறிவுள்ளகண்மணியே
மலையேபருவதமே வாழ்மலையேகுஞ்சரமே
நீமடியுங்காரியங்கள் நிண்ணயத்தைநானறியேன்
மாண்டுமடிவீரென்று நான் மனதில்நினைத்ததில்லை
செத்துமடிவீரென்று சற்றுமறியேனே
என்னை நீகையைவிட்டு இறந்துவிடஞாயமுண்டோ
நீங்கள்-போவதறியாமல் பூரித்துநானிருந்தேன்
சாவதறியாமல் சந்தோஷமாயிருந்தேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகங்காணுதையா
கண்டமுகங்களெல்லாம் கடுத்தமுகமாகுதப்பா
கூடப்பிறந்தீர்களே கூட்டுப்பாலுண்டீர்களே
ஒக்கப்பிறந்தீர்களோ ஒருஸ்தனப்பாலுண்டீர்களோ
காட்டுக்குள்கையைவிட்டு கைலாயம்போனீர்களோ
தங்கத்தரிக்கவில்லை தரையிற்கால்பாவவில்லை
நிற்கத்தரிக்கவில்லை நிலத்தில்கால்பாவவில்லை
உங்களை நான்பிரிந்து ஒருநாழிதங்குவேனே
கூடமடிவேன்காண் கொற்றவரேஉங்களுடன்
ஒக்கமடிவேனே உங்களுடனுக

அலண்டுபிரண்டழுதார் அடித்துகொண்டார்தலைமேலே
முட்டிகொண்டார்பூமியிலே மோதிகொண்டாரப்போது
மார்கொண்டகண்ணீரை வழித்தெரிந்தார்மண்மேலே
அடித்துப்பதைத்தலறித் துள்ளிப்புரண்டழுதார்
களைத்துவிழுந்தாரே கட்டழகர்தருமலிங்கம்
மூர்ச்சையாய்விழுந்தாரே முடிமன்னராஜாவும்
தங்கமுடியானாலும் உங்கள்முடியாகுமோதான்

தருமராஜர் மூர்ச்சை தெளிந்து சகாதேவனைப் பார்த்துப் புலம்புகிறது.

தோராவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
களைத்ததருமருக்கு களைகள்தெளியவென்று
காட்டில்தழையொடித்து கட்டழகிவீசலுற்றாள்
பச்சைத்தழையொடித்து பைங்கிளியாள்வீசலுற்றாள்
வீசக்களைதெளிந்து வேந்தரெழுந்திருந்தார்
மூர்ச்சைத்தெளித்தெழுந்து மோதிப்புலம்புகிறார்
சாஸ்திரக்கொடிவேந்தர் சகாதேவராஜாவே
முன்னேவருங்காரியத்தை முதலறிந்துசொல்வாயே
இனிநடக்குங்காரியத்தை எந்தனுக்குநீயுரைப்பாய்
அப்படிக்கொத்ததொரு அறிவுள்ளகண்மணியே
உன்னைப்பறிகொடுத்து உலகினில்வாழ்வேனோ
பன்னிரண்டுதன்வருஷம் பாரவனந்தீர்ந்தபின்பு
அக்கியாதவருஷ மதுவுங்கழிந்தபின்பு
பாரவனந்தீர்ந்து பட்டணமேபோய்ச்சேர்ந்தால்
குந்தியம்மாளோடிவந்து குழந்தைகளெங்கேயென்றால்
மைந்தர்களெங்கேயென்று மாதாவுங்கேட்கையிலே
என்னவென்றுசொல்லி எடுத்துரைப்பேன்தாயார்க்கு

தருமர் நாலுபேர் தம்பிமாரையும் நினைத்துப் புலம்ப அப்போது துரோபதை தன் புருஷர்களைப் பார்த்துப் புலம்புகிறது.

கட்டிக்கரும்பேயென் கண்மணியேயெங்கொளித்தாய்
முடிக்கிமுடியானாலும் முத்துமுடியாகுமோதான்

தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
மாலையிட்டமன்னவர்கள் மாண்டுவிடநீதியுண்டோ
தாலிகட்டும்ராஜாக்கள் தரையில்விழலாச்சே
மங்கிலியமுண்டு மணமுண்டுளென்றிருந்தேன்
உலகத்துப்பெண்கள் ஒருவனுக்குகைகொடுப்பார்
நான்-ஐவருக்குங்கைகொடுத்து அம்பலத்துக்காளானே
செல்வத்தலையிலே செப்போடெழுதினதும் [ன்
அல்லற்படுந்துயரம் அமைத்தாரேபிரமதேவன்
ஆரைக்கழுத்தி அரைக்கழுத்தியானேனே
கோரைக்கழுத்தி குறைக்கழுத்தியானேனே
தங்கக்கழுத்தி தலைவிரிக்கநாளாச்சே
மல்லிகைசோலையிலே மலர்விரிக்கநாளாச்சே
குங்குமச்சோலையிலே குழல்விரிக்கநாளாச்சே
ஐயையோதெய்வமே அனியாயஞ்செய்தீர்களோ
பார்த்துமிருந்துமென்னைப் பரதவிக்கவிட்டீர்களோ
கண்டுமிருந்துமென்னை கனங்குலையவைத்தீர்களோ
தோள்சார்ந்தராஜாக்கள் சோர்ந்துவிடக்காரியமேன்
மார்சார்ந்தராஜாக்கள் மடிந்துவிடக்காரியமேன்
காட்டில்மடிந்தல்லவோ கையைவிட்டுநின்றீர்களோ
அடவியிலேதான்மடிந்து அலையவிட்டுப்போனீர்களோ
சூரியரைச்சாட்சிவைத்து சாகத்துணிந்தீர்களோ
சந்திரரைச்சாட்சிவைத்து சாகத்துணிந்தீர்களோ
சந்தியிலேகையைவிட்டு சமர்த்தாய்படுத்தீர்களோ
மஞ்சளிழந்தும் மணமிழந்தும் பூவிழந்தும்
தாலிச்சரடிழந்தும் தாரணியில்நிற்பேனோ
மஞ்சள்சரடிழந்தும் மண்மேலிருப்பேனோ
கூடமடிவேன்காண் கொற்றவரேவுங்களுடன்
ஒக்கமடிவேன்காண் ராஜர்களேவுங்களுடன்
நானுமடிவேன்காண் ராஜர்களேவுங்களுடன்
அலண்டுபுரண்டழுது அப்பிக்கொண்டாள்மார்மேலே
எங்கேயோவானம் இடிக்குதுஎன்றிருந்தேன்

தப்பாமல்வானமல்லோ தலையிலிடித்துதே
என்றுபுலம்பியே இளங்கொடியாள்தானழுதாள்
கோவென்றசத்தம் குழறிப்புலம்புகிறாள்
தக்கப்புகழுடைய தருமராவரேது சொல்வார்
சாயாம்புமன்னவனுர் தருமரவரேது சொல்வார்
தோராவடிவழகி துரோபதையே நீர்கேளும்
வசநாபிதண்ணீருண்டு மாண்டாரே தம்பியர்கள்
நாமும்புசித்தோமே நல்லவிஷஜலத்தை
இறவாமல்நாமும் மிருப்பதென்னகாரணங்கள்
மாண்டதொருதம்பியர்கள் மன்னவர்கள் தன்னுடனே
நாமும்மடிந்தாலே நல்லதென்றெண்ணுகிறேன்
கூடமடிந்தாலே குணமென்றுஎண்ணுகிறேன்
ஒக்கமடிந்தாலே ஒருமிக்கதீர்ந்துவிடும்
கதியைத்துலைக்கலாம் காவேரிநீந்திடலாம்
விதியைத்துலைக்கவல்லோ வேறுவகையறியோம்
என்செய்வோமென்றுசொல்லி ஏங்கிப்புலம்புகிறார்

தர்மர் மனதறிய எம்பெருமாள் ஒட்டனாகவும் எமன் ஒட்டச்சியாகவும் வந்து பிணத்தை யிழுக்கிறது.

எமனும்பெருமாளும் இருவருமாகவேதான்
தருமர்நினைவறிய சாடிவடிவெடுத்தார்
எம்பெருமாளொட்டனாக எமன்வொட்டச்சியாக
இருவருமாகவே இவர்களண்டை ஓடிவந்து
தருமரைத்தான்பார்த்து சாமியவருரைப்பார்
ஆரையாயிங்கே அழுதுபுலம்புறது
இந்தக்குளத்திலே எவர்தாகமுண்டாலும்
வசநாபிதண்ணீரில் மாண்டுமடிந்தாலும்
எங்களையல்லாமல் எவரெடுக்கலாகாது
எடுத்துப்புதைக்கிறது எங்களுத்தாரமையா
நாங்களெடுக்கும்படி ராஜாவின்கட்டளைகாண்
என்றுமேயெம்பெருமாள் இழுத்துபோருர்வீமனையும்
இளைவிஜயனர்ச்சுனனை இழுத்துப்போருள்ஒட்டச்சியும்

எம்பெருமாள் ஏமனும் சவத்தை எடுத்துக்கொண்டு
போக தருமராஜர் பரிதாபப்பட்டு தன்
சவத்தை வாங்குகிறது.

சவத்தையவரிழுக்க தருமரவர்பார்த்து
கண்டாரே தருமரவர் கடுகியவரறிந்து
பார்த்துமனங்கலங்கிப் பதைத்துபுலம்பியவர்
ஒட்டர்களருகில்வந்து உத்தமருமேதுசொல்வார்
ஆரையாஒட்டர்களே ஐயாவே நீர்கேளும்
அண்ணன் தம்பி நாங்களிங்கே அருகாகவந்திருக்க
தமையனென நானும் தனதாகவந்திருக்க
பூமிதனைவெட்டி புதைக்கும்வயணமென்ன
எங்கள்பிணத்தை நீங்கள் இழுக்காதீர்விட்டுவிடும்
தரையிலிழுக்காதே தர்மமாய்ப்போகுதையா
பூமியிலிழுக்காதே புண்ணியமாய்ப்போகுதையா
கோடிசரணமையா கும்பிட்டேன்விட்டுவிடும்
ஆயிரஞ்சரணங்காண் அடிபணிந்தேன்விட்டுவிடும்
மூவாயிரஞ்சரணம் முடிசாய்த்தேன்விட்டுவிடும்
என்றுவருந்தினரே இயலான தருமலிங்கம்
ஏமனும்ராமனும் இருவருந்தான்பார்த்து
பெருமாள்மனமிரங்கிப் பிரியமுடனாக
வீமனைத்தாழவிட்டார் வேந்தர்பெருமாளும்
தக்கபுகழுடைய தருமரவரோடிவந்து
வீமனையெடுத்துவந்து மெத்தெனவேதான்வளர்த்தி
வீமரருகாக வேந்தரும்வீற்றிருந்தார்
தோராவடிவழகி துரோபதையாளோடிவந்து
ஒட்டச்சிபாதத்திலே உத்தமியாள்தான்விழுந்து
தாயேநீஒட்டச்சியுன் தருமமாய்ப்போகுதம்மா
என்னை-மாலையிட்டமன்மதண்டி வலியாதேபூமியிலே
இந்த-வையகத்தையாண்டவரை வலியாதேதாயாரே
பூமியையாண்டவர்கள் புரட்டாதேமாதாவே
அங்கம்பொறுக்கவில்லை ஆச்சிநீவலியாதே

ஆயிரந்தெண்டமம்மா அடிபணிந்தேனுந்தனுக்கு
மூவாயிரஞ்சரணம் முடிவணங்கிதெண்டனிட்டேன்
கோடிசரணமம்மா கும்பிட்டேன்விட்டுவிடும்
என்றுவருந்துகிறளே இளங்கொடியாள்துரோபதையும்
ஏமனும்பெருமாளும் இருவருந்தான்கேட்டு
பரிதாபந்தாளாமல் பார்த்தனைவிட்டார்கள்
தோராவடிவழகி துரோபதையுமோடிவந்து
இளங்கொடியாளர்ச்சுனரை எடுத்துவளர்த்திடவே
ஓட்டனுமொட்டச்சியும் உத்தரமென்னசொல்வார்
எடுத்துப்புதையுமென்று ஏகிநடந்தார்கள்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
இன்றெல்லாமிங்கிருந்து ஏங்கியழுதாலும்
நம்மாலேயாவது ராஜாவேயொன்றுமில்லை
மாயன்பெருமாளை மனதில்நினைந்தழுதால்
வருந்தியழுதாலே வருவார்காணெம்பெருமாள்
மாயன்வந்தபிற்பாடு வயணந்தெரியுமென்றுள்

தருமராஜர் தன் தம்பிமார் பிழைப்பதற்காக
எம்பெருமாளை நினைத்துப் புலம்புகிறது.

சாயாம்புமன்னவரும் தருமரவரென்னசொல்வார்
அடியளந்தமாயவரே ஆதிமூலம்வாருமென்றூர்
எல்லையளந்தசாமி எம்பெருமாள்மேகவண்ணு
கல்லான அகலிகையை நல்லபெண்ணுக்கிவைத்தாய்
மூலமென்னுங்குஞ்சரத்தை கார்த்தமுகில்வண்ணு
ஆலிலைமேற்பள்ளிகொண்ட அரிராமாவாருமையா
மச்சவடிவுகொண்ட அச்சுதரேயிச்சகத்தில்
கூர்மவடிவுகொண்டு பாதாளம்போய்வந்தீர்
சிங்கமாயிரணியனைப் பங்கஞ்செய்துமார்பிளந்தீர்
ராமர்வடிவுகொண்டு ராவணனைச்சங்கரித்தீர்
அம்பலத்துரோபதைக்கு அட்சயத்துகில்கொடுத்தீர்
மண்டலங்கள்தானறிய மாளாத்துகில்கொடுத்தீர்

பகையாளிவாசலிலே பட்சம்வைத்துகாத்தீரே
எதிராளிமுன்னாலே எங்களைக்காத்தீரே
உண்மகிமையாரறிவார் உம்பர்பிரான்தானறிவார்
நீரே துணையுமல்லால் வேறு துணையுமில்லை
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகங்காணுது
கண்டமுகங்களெல்லாம் வேற்றுமுகங்காணுது
ஏழையழுதகண்ணீர் கூறியவாள்தைக்கலையோ
நானுமழுதகண்ணீர் ரம்பங்கொண்டறுக்கலையோ
என்றுபுலம்புகிறார் இயலானதருமராஜன்
தருமருடனாக தவிக்கிறாள் துரோபதையும்
கூடப்புலம்புகிறாள் கொம்பனையாள் துரோபதையும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

தருமருந் துரோபதையும் வருந்துகிறதை ஏமனும் பெருமாளுங்கேட்டு சந்தோஷப்பட்டு அவர்களிடத்துக்கு இருவரும் வருகிறது.

ஏமனும்மாயவனும் இருவருந்தான்கேட்டு
சந்தோஷப்பட்டாரே சாமிபெருமாளும்
ஏமன்கிடாமேலே எம்பெருமான்கருடன்மேலே
இருவருமாகவே எழுந்தருளிவந்தார்கள்
தருமரிடத்திலே இருவரும்வந்து நின்றார்
தருமருந்துரோபதையும் சாமியைக்கண்டவுடன்
சரணமடைந்தாரே சாமிபெருமாளை
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டார்
சிம்மாதனம்போட்டு ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
இருமிருமென்றுசொல்லி இருவரையுந்தெண்டனிட்டார்
ஏமனும்மாயவரும் இருந்தார்சிங்காதனத்தில்
வண்ணச்சிங்காதனத்தி லமர்ந்தாரிருவருமாய்
அடியளந்தமாயவரும் ஆண்டவருமென்னசொல்வார்

மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
என்னவகையாக என்னையழைத்தீர் தருமலிங்கம்
அழுதுபுலம்புவதேன் ஆயாசமாகவேதான்
என்னபுதுமை எனக்கறியச்சொல்லுமென்றார்
அப்போது தருமலிங்கம் ஆயருக்கேதுசொல்வார்
சாயாம்பூமன்னவனார் தருமரெடுத்துரைப்பார்
மாண்பிடிக்கவந்தவர்கள் மாயவரேதம்பியர்கள்
தாமரைப்பொய்கையிலே தண்ணீர்குடித்தார்கள்
விஷநீரைதான்குடித்து வேந்தர்மடிந்தார்கள்
செத்துமடிந்தார்கள் சிவலோகஞ்சேர்ந்தார்கள்
மாண்டுமடிந்தார்கள் வைகுந்தஞ்சேர்ந்தார்கள்
தம்பியரைத்தேடியே தையலரும்நானும்வந்தோம்
அழுதுபுலம்பிவந்து மன்னர்களைக்கண்டோமே
தட்டியெழுப்பினேன் செத்துமடிந்திருந்தார்
பார்த்துவயிறெறிந்து பதைத்துப்புலம்பினேன்
கண்டுவயிறெறிந்து கார்வண்ணபுலம்புகையில்
எவனோதெரியாது இராட்சதன்போலொட்டனவன்
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளவொட்டன்
ஒட்டன்மனைவியாள் ஒட்டச்சிகூடவந்தாள்
இந்தவனத்திலே எவரெவர்மாண்டாலும்
எடுத்துப்புதைக்கிறது இங்கேயவர்க்குத்தரவாம்
வீமரருச்சுனரை வெகுதூரங்கொண்டுபோனார்
தம்பிமாரிருவரையுந் தானிழுத்துப்போனார்கள்
கண்டுமனம்பதைத்துக் கதறிப்புலம்பினோம்
பார்த்துமனந்தாளாமல் பற்றிவயரெறிந்தோம்
பாதத்தின்மேல்விழுந்துபத்துலட்சந்தெண்டனிட்டோம்
விட்டுவிடச்சொல்லியே வெகுகோடிதெண்டனிட்டோம்
எங்கள்பரிதாபம் பார்த்துமனமிரங்கி
எடுத்துப்புதையுமென்று சொல்லியிந்தவழிநடந்தார்
அவர்கள்போனபிற்பாடு ஆண்டவரேயுனைநினைத்தேன்
தம்பியரைவிட்டு தரிக்கமனம்கூடவில்லை

என்னசெய்வேனென்றுதா னேங்கிப்புலம்புகிருர்
தருமர்புலம்புவதை சாமியவர்பார்த்து
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
தருமர்முகம்பார்த்து சாமியுமேதுசொல்வார்
என்னசெய்வேன்தருமரே எழுத்துப்படியிவ்வளவு
அன்றெழுதுங்கர்த்தன் அழித்தெழுதப்போறதில்லை
கதியைத்தொலைக்கலாங் காவேரிநீந்திடலாம்
விதியைத்தொலைப்பதற்கு வெல்லவகையறியோம்
பிரமனெழுத்திற்குப் பிசகுகள்வாராதே
மாண்டார்பிழைத்தாலே வையகங்கள்கொள்ளுமோ
செத்தார்பிழைத்தாலே செகமெல்லாங்கொள்ளுமோ
அழுதுபுலம்பியே ஆயாசப்பட்டாலும்
ஆண்டாண்டுதோறும் அழுதுபுரண்டாலும்
மாண்டார்வருவாரென்று மனதில்நினையாதே
செத்தார்வருவாரென்று சித்தத்திலெண்ணாதே
தம்பிமாரைநீரெடுத்து தகனங்கள்செய்யுமென்ருர்
இவ்வயணமாகவே யெம்பெருமாள்சொல்லவுமே
தருமர்மனமறிய சாமியுரைக்கவுமே
எம்பெருமாள் செத்தவரை தகனஞ் செய்யுமென்று தருமர் மனமறியச் சொன்னூர் அதுகேட்டு தருமருந் துரோபதையும் புலம்பி சுவாமியை மடிப்பிச்சை கேட்பது.

எம்பெருமாள்மாயவரும் இப்படித்தானுரைக்க
சாமியுரைகேட்டு தருமர்மிகத்தளர்ந்து
சிந்தைகலங்கியவர் திடுக்கிட்டுமெய்மறந்து
மெத்தமனதுநொந்து வேந்தர்புலம்புகிருர்
அடித்தமயில்போலே அழுதுபுலம்புகிருர்
பச்சைபுழுவெடுத்துப் பெருநெருப்பிற்போட்டாற்போல்
துடித்தபுழுப்போலே துள்ளிப்புலம்புகிருர்
உன்னையே நம்பி வுயிர்கொண்டுலாவுகிறேன்
நம்பியிருந்தவென்னை நட்டாற்றில்விட்டுவிட்டாய்

இப்படி நீர் கைவிட்டால் எப்படிக் தநான் பிழைப்பேன்
ஆற்றங்கரையோரத்தில் ஆலமரம்போலானேம்
குளத்தங்கரையோரத்தில் கோடாலிக்காம்பானேம்
நட்டாற்றிலே முளைத்த நாணலுங்கோரையானேம்
உள்ளங்கைநெல்லிக்கனி உருகுலைந்துபோனேமே
தோளில்செபமாலை தொண்டழிந்துபோனேமே
கையில்செபமாலை கனங்குலைந்துபோனேமே
இனியிந்தப்பூமியிலே இருக்கவுநானுகாது
என்னையுங்கொன்றுவிட்டு எம்பெருமாள் தகனஞ்செய்யும்
நால்வருடனேச நம்மைத்தகனஞ்செய்யும்
என்றுபுலம்பினர் இயலானதர்மலிங்கம்
துகில்வளர்ந்தபத்தினியாள் துரோபதையேதுசொல்வா
தமயனருகில்வந்து தையலருமேதுசொல்வாள் [ள்
அண்ணாருகேவந்து அழுதுபுலம்புகிருள்
மங்கிலியப்பிச்சையது மாயவரேதாராயோ
முந்தாணிபிச்சையது முகுந்தரேதாராயோ
என்றுமடியேந்தினு ளிளங்கொடியாள் துரோபதையும்

தருமருந் துரோபதையும் புலம்புவதை எம்பெருமாள்
பார்த்து மனமிரங்கி இங்கேயுமிருந்து வேறே
யொரு ஜோகியாகவந்து நாலுபேரையு
மெழுப்புகிறது.

தருமருந்துரோபதையுந் தானழுதகைதப்பார்த்து
கரியமால்மகிழ்ந்து கடிகநினைவுகொண்டு
இவர்களுக்குமுன்னலே இருந்தாரேமாயவரும்
எம்பெருமாள்மாயவரும் என்னவடிவெடுத்தார்
வேறேயுருவாக விஷ்ணுவடிவெடுத்தார்
மலையாளஜோகியைப்போல் வாராரேமாயவரும்
கைதனிலேமருந்துப்பையுங் காவியுடுப்புகளும்
தோளிலேசோளியுடன் தொங்குகிறதாடிகளும்
கையில்செபமாலை கமண்டலந்தன்னுடனே [ல்
தொண்ணூறும்பத்துஞ்சென்ற துவண்டகிழவனைப்போ

நானூறம்பத்துஞ்சென்ற நரைத்தகிழவனைப்போல்
தோலும்நரம்புகளுந் தொங்கும்கிழவனுக்கு
முள்ளுதடுத்தாலே முப்பதிடம்விழுவார்
நாணல்தடுத்தாலே நாற்பதிடம்விழுவார்
அறுகம்புல்தடுத்தாலே ஐம்பதிடம்விழுவார்
தள்ளாடித்தத்தளித்துத் தடிக்கோலையூன்றிக்கொண்டு
பஞ்சாட்சரமோதி பாதைவழியாக
சிவசிவாவென்றுசொல்லி சீக்கிரமாய்வாராரே
அரகராவென்றலவோ அந்தவழியாகவந்தார்
தருமாருகில்வந்து அருமைஜோகியேதுசொல்வார்
அத்திபுரத்துக்கு சுத்திப்போறேனிதுவழியாய்
ஆரோஇருவர்கள் அழுதுபுலம்பினர்கள்
ஏதுக்கழுதார்கள் என்றறியஓடிவந்தேன்
அழுதவயணமென்ன ஐயாவேசொல்லுமென்றார்
புலம்பியழுவதென்ன புதுமைகளைச்சொல்லுமென்றார்
அப்போதுதருமலிங்கம் ஆணழகரேதுசொல்வார்
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அப்போதெடுத்துரைப்பார்
மான்பிடிக்கவந்தவர்கள் வனத்திலேதம்பியர்கள்
விசநாபித்தண்ணீருண்டு மாண்டாரேதம்பியர்கள்
விஷநீரைத்தான்புசித்து வேந்தர்மடிந்தார்கள்
செத்துமடிந்தார்கள் சிவலோகஞ்சேர்ந்தார்கள்
மாண்டுமடிந்தார்கள் வைகுந்தஞ்சேர்ந்தார்கள்
ஒப்பிட்டவாளை உறையுருவிட்டாற்போல்
தப்பிப்பிழையாமல் சதிசெய்துமாண்டுவிட்டார்
என்றுசொல்லிதருமலிங்கம் ஏங்கிப்புலம்பினர்
மாயவடிவெடுத்த மலைஜோகியேதுசொல்வார்
இறந்ததொருநாலுபேரும் என்னவேணுமுந்தனுக்கு
மாண்டதொருமன்னவர்கள் மன்னவருக்கென்னவேணும்
உண்மையாய்சொல்லுமென்றேஉத்தமரைக்கேட்கலுமே
தக்கபுகழுடைய தருமரெடுத்துரைப்பார்
இறந்தவர்நாலுபேரும் எந்தனுக்குத்தம்பியர்கள்

மயிலனையாள் துரோபதைக்கு மாலையிட்டமன்னவர்கள்
எங்களைத்தனியாய்விட்டு இறந்துமடிந்தார்கள்
என்றுமவருரைத்து யேங்கிப்புலம்புகிறார்
மாயவடிவெடுத்த மலைஜோகியென்னசொல்வார்
இறந்தவர் நாலுபேரில் எவர்வேணுமுந்தனுக்கு
செத்தவரிலொருவரை நான் சீக்கிரமெழுப்பித்தாரேன்
எவர்வேணுமுந்தனுக்கு இப்போதேசொல்லுமென்றார்
ஆமானால்சொல்லிவிடும் அல்லவென்றால் நான்போரேன்
தக்கபுகழுடைய தருமரவர்கேட்டு
மலைஜோகிசொன்னதற்கு மன்னரெடுத்துரைப்பார்
ஐயாவேகேளும் அடியேனொருவார்த்தை
என்தாயார்குந்தியம்மாள் ஈன்றெடுத்தமூவர்களில்
இருவரிறந்தார்கள் இருக்கிறேநானொருவன்
மறுதாயார்மைந்தர்களில் நகுலனையெழுப்புமென்றார்
தக்கபுகழுடைய தருமரைக்கலுமே
மாயமாய்வந்ததொரு மலைஜோகிதான்கேட்டு
தருமர்நினைவறிந்து சந்தோஷப்பட்டாரே
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
தேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உண்ணுமல்பூரித்து உடம்பெல்லாம்பூட்டுவிட்டு
கரியமால்உளமகிழ்ந்து காவலனையெச்சரித்து
நால்வருயிரையுமே நமனாரேவிட்டிடென்றார்

விஷநீர்குடித்து இறந்துபோன நாலுபேரும்
பெருமாளால் எழுந்திருந்தது.

எம்பெருமாள்தானுரைக்க யேமனவர்கேட்டு
அப்படியேநல்லதென்று அந்தயேமனாரும்
பிடித்தவுயிரைவிட்டு போதவெழுந்திரென்றார்
தூங்கிவிழித்தாற்போற் பாங்காயெழுந்தார்கள்
துள்ளியெழுந்தாரே துரைகளந்தநாலுபேரும்
மாயன்பெருமாளை வணங்கியேதெண்டனிட்டார்
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்

வந்துபணிந்தவரை கண்டுமனமகிழ்ந்து
வாழ்த்தியெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
சந்தோஷமாகத் தானிருந்தார்பெருமாளும்
தக்கபுகழுடைய தருமரடிபணிந்து
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டார்
தக்கபுகழுடைய தருமரெடுத்தணைத்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பீரென்னுடனே
நிற்பீர்நிலைதரிப்பீர் நீழேிவாழ்ந்திடுவீர்
கற்பதித்ததூணதுபோல் கலங்காமல்வாழ்ந்திடுவீர்
என்னைப்பெறுவீ ரெதிர்த்தார்முடியறிவீர்
மைந்தர்களைப்பெற்றெடுத்து மகிக்ஷியாய்வாழ்ந்திடுவீர்
போருக்குப்போயிடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவீர்
ஆல்போலேதழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போலெந்நாளும் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்களென்றுசொல்லி மனங்குளிரவாழ்த்தினார்
இருமிருமென்றுசொன்னார் இனிதாகத்தம்பியரை
அண்ணருரையாலே அனைவோரும்வீற்றிருந்தார்
மாயருரையாலே மகிழ்ச்சியாய்வீற்றிருந்தார்
தம்பிமாரைக்கண்டல்லவோ சந்தோஷப்பட்டாரே
தோராவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
புருஷர்களைப்பார்த்து பூரித்தாளுத்தமியும்
கணவரைக்கண்டல்லவோ கட்டழகிமனங்குளிர்ந்து
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

எம்பெருமாள் துரியோதனன் சூதும் காளமகாரிஷி
செய்த யாகமும் வேதாளம் வரவும் தான் இவர்
களைக் காப்பாற்றினதும் பஞ்சவர்
களுக்குச் சொல்லுகிறது.

மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
திரியோதிரன்செய்த சேதியெல்லாம்சொல்லலுற்றார்
காளமகாரிஷியையுங் கடுகிவருந்தியபின்

கொல்லஅனுப்பினன் கொப்பெனவேஉங்களைத்தான்
காளமகாரிஷியுங் கடுகிவனந்தனிலே
அக்கினிக்குழியருகே ஆனந்ததபசுபண்ணி
வேதாளமுண்டுபண்ணி வேந்தருங்களைக்கொல்ல
நாமிருந்தபடியினுலே நமனையழைத்துவந்தோம்
தாமரைப்பொய்கையொன்று தண்ணீருமுண்டுபண்ணே
மாறுகவந்தலவோ வரவழைத்தேனுங்களைத்தான் [ன்
அந்தரமாய்நான்பேசி அனைவரையுங்கொன்றுவிட்டு
ஒட்டனைப்போலவந்து உங்களைவலித்துவிட்டேன்
அநீதமாய்போறீரென அனைவரையுங்காக்கவந்தேன்
என்னபலன்கண்டேன் இராஜாவேவுங்களாலே
மாயனுரைகேட்டு வளம்பெரியதருமராயர்
பாதத்திலேவிழுந்து பணிந்துமுறையமிட்டார்
உம்மையன்றிவேறுதெய்வம் ஒருவரெனக்கில்லையையா
உம்மைச்சதமென்று உயிர்கொண்டுலாவினேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
நீரேதுணையல்லால் வேறேதுணையுமில்லை
அடியாரைக்காக்கிறது ஆண்டவனேயுன்பெருமை
காக்கிறேனென்றுசொல்லி கங்கணங்கட்டினீரே
இரக்ஷிக்கவேணுமென்று எம்பெருமாளாய்ப்பிறந்தீர்
இன்னமென்னவினைவருமோ யானறியேனுண்டவனே
ஏதேதுசெய்வானே இராஜன் திரியோதனன்
அத்தனைக்கும்வந்திருந்து அடியாரைக்காருமென்றார்
என்றல்லோஐவருமாய் இறங்கியடிபணிந்தார்
மெத்தமனமகிழ்ந்தார் மேகவண்ணரெம்பெருமாள்
சித்தமகிழ்ந்தார் தேகமெல்லாந்தான்குளிர்ந்தார்
நல்லதுபஞ்சவரே ராஜர்களே நீர்கேளும்
இந்தவனத்தைவிட்டு இன்னமொருவனத்தில்
மற்றுமொருவனத்தில் வாசங்கள்பண்ணுமென்றார்
பண்ணவினைவந்தாலும் என்னை நினையுமென்றார்

போய்வாரோமென்று பெருமாள்பயணமிட்டார்
ஏமன்கடாவின்மேல் எம்பெருமாள்கருடன்மேல்
வாகனத்தின்மேலேறி வழிபிடித்துப்போனார்கள்
எமபுரந்தான்தேடி எமனும்போய்நடந்தான்
நாலாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு
நான்காவது, காளமகாரிஷிவனம் முற்றிற்று.

---

## ஐந்தாவது, சயிந்தவமகாரிஷி வனம்

ஐந்தாம் வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலேமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
துத்திப்புளிகரணை தும்பையும்நாதுவளை
தின்னுதிரிகிறார் தேசாந்திரிபோலே
சயிந்தவரிஷிவனத்தில் தானடைந்தார்பஞ்சவர்கள்
ஓரடுக்குப்பர்னசாலே உண்டுபண்ணார்பஞ்சவர்கள்
மூன்றடுக்குப்பர்னசாலே முடிமன்னருண்டுபண்ணார்
ஐந்தடுக்குப்பர்னசாலே ஆணழகருண்டுபண்ணார்
ஆறடுக்குப்பர்னசாலே ஐவர்களுமுண்டுபண்ணார்
ஏழடுக்குப்பர்னசாலே எழிலாகவுண்டுபண்ணார்
பர்னசாலேமேலாகப் பஞ்சவர்கள்குடியிருந்தார்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அவ்வனத்திற்றானிருந்தார்
அந்தவனந்தனிலே அநேகநாள்வாசம்பண்ணார்
அநேகநாள்சென்றபின்பு ஆரணங்குதுரோபதையும்
அந்தவனஞ்சாரிவர ஆரணங்குதுரோபதையும்
அந்தவனத்திலே அதிசயம்பார்க்கையிலே
உச்சிதங்கள்பார்த்தே உலாவிவருகையிலே
ஆகாயந்தன்னளவாய் அங்கேயொருமரந்தான்
வளர்ந்துதழைத்து மரத்தில்பழுத்திருக்கும்
ஒண்டிப்பழந்தான் உயர்ந்தகிளேமேலிருக்கும்
சூரியகாந்தியைப்போல் தோணுது துரோபதைக்கு
மெத்தாசைப்பட்டாளே மெல்லியிளங்கொடியாள்



அர்ச்சுனன் துரோபதைக்காக எய்த மாங்கனியை நிலத்திலிருந்து எடுக்
கக் கூடாமையால் எம்பெருமாள் மனஞ் சோதித்து கனியை மரத்தில்
ஒட்டும்படி செய்தது.

கண்டாசைப்பட்டாளாங் காண்டீபன்தேவியரும்
இந்தக்கனியை எவர்பறித்துத்தான்கொடுப்பார்
தருமருடன்சொன்னால் தலைவரிதைக்கேளாரே
மதவீமருக்குரைத்தால் வயிறுரவுண்டிடுவார்
நகுலர்சகாதேவர் நம்மால்முடியாதென்பார்
அருச்சுனற்குத்தானுரைத்தால் அவராலேயாகுமிது
மற்றொருவர்தன்னாலே மாளாதுகனிபறிக்க
அருச்சுனரைமெள்ள அழைத்துவருவோமென்று
மெல்லநடந்தாளே வேல்பொருதுங்கண்ணாளும்
கொஞ்சிநடந்தாளே கொம்பேரிடையாளும்
அருச்சுனராஜரண்டை ஆணழகிவந்துநின்று
அருச்சுனரைக்கண்காட்டி அழைத்தாளேஇப்புறத்தில்
ஜாடையறிந்தலவோ தார்வேந்தனோடிவந்தான்
தருமரறியாமல் தையலுமேதுசொல்வாள்
ஓர்மனுவுயெந்தனுக்கு உத்தரந்தாருமென்றான்
அந்தவுரைகேட்டு அருச்சுனனுமேதுசொல்வார்
மனதில்நினைத்ததெல்லாம் மயிலணையேகேளுமென்றார்
சிந்தையிலெண்ணமெல்லாம் சீராகச்சொல்லுமென்றார்
கேட்டமனுவுக்கு கிளிமொழியேதாரேனென்றான்
உரைத்தபடியெனக்கு தருவேன்காணுத்தமியே
அந்தமொழிகேட்டு ஆரணங்குதுரோபதையும்
கொஞ்சினதுரோபதையுடன் கோபாலன்தங்கையரும்
முத்துநகையாளும் முருகுழலாளேதுசொல்வாள்
காணாதுகண்டேனையா கண்டாசைப்பட்டேனையா
பாராதுபார்த்தேனையா பார்த்தாசைப்பட்டேனையா
தங்கத்தைக்காய்ச்சியே தரையில்கவிழ்த்தாப்போல்
பொன்னையுருக்கியல்லோ பூமியில்விட்டதுபோல்
சூரியனைப்போலழகாய்த் தானிருக்குமாங்கனிதான்
சந்திரனைப்போலழகாய்த் தானிருக்குமாங்கனிதான்
அந்தக்கனியுண்பதற்கு ஆசையாய்த்தோணுகுது
மாங்கனியையுண்பதற்கு மனதுமெத்தத்தோணுகுது

அந்தக்கனிபறித்து அருச்சுனரேதாருமென்றாள்
மாங்கனிதனைப்பறித்து மன்னவரேநீர்தாரும்
என்றுவணங்கினளே இளங்கொடியாள்பாஞ்சாலி
வணங்கியெழுந்துவந்து மன்னவனுக்கேதுசொல்வாள்
தனஞ்செயரேகனிபறித்துத் தாராமற்போனாக்கால்
தண்ணீர்குடியேன்காண் தாகவிடாய்தீரேன்காண்
ஆறுமாதமானாலும் அன்னம்பொசியேனென்று
சொல்லிப்பிணங்கினளே துரோபதைபாஞ்சாலி
ஆனையழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
கனிக்காகநீபிணங்க வாகுமோகட்டழகி
இதற்காயிணங்குவரோ இதுவுமேதாரேனென்றான்
அந்தரமாயிருந்தாலும் அறுத்துநான்தாரேனென்றான்
எந்தமரத்திலே யிருந்ததுபெண்ணரசே
பழங்களிருக்கின்ற பாரவனமெங்கேயென்றான்
என்றுமவர்கேட்க இளங்கொடியாளப்போது

அருச்சுனன் துரோபதைக்கு மாங்கனி பறித்துக்
கொடுக்க வருகிறது.

வாருமையாவென்றுசொல்லி வணங்கியெழுந்திருந்து
அழைத்துவருகிறாள் அருச்சுனராஜனை
கூட்டிவருகிறாள் கொப்பெனவேயருச்சுனனை
கடந்தார்சிலதூரம் கனியிருக்குமவ்வனத்தே
வந்தாரிருவருமாய் மங்கைதுரோபதையும்
இதுதான்மரமென்று இளங்கொடியாள்காட்டலுற்றாள்
ஆனையழகுமன்னன் அருச்சுனராஜனுமே
மரத்திலிருக்குமந்த மாங்கனியைத்தான்பார்த்து
ஆயிரம்யோசனைதூரம் அந்தரமாயிருக்குது
இந்தக்கனிபறிக்க எவரால்முடியுமென்று
இத்தனைதூரத்தி லிருக்கின்றமாங்கனியை
எப்படிக்குநாம்பறித்து ஈந்திடலாம்துரோபதைக்கு
என்றுநினைத்து எழில்விஜயனப்போது
வில்வளைத்துநாரிபூட்டி வில்லிலக்குதைத்தொனித்தான்

அம்புறுத்தூணியிலே அலகம்புதானெடுத்து
அர்த்தசந்திரபாணமதை அருச்சுனருமுச்சரித்தார்
மந்திரதூபமிட்டு வாங்கிவிட்டானக்கனிமேல்
மார்புரளவாங்கியல்லோ தோள்புரளவிட்டானே
வருகுது அஸ்திரந்தான் மாங்கனியைத்தள்ளுது
மரத்தின்பழத்தையல்லோ பாணமறுக்கையிலே
அந்தக்கனிவிழுமாம் அண்டரண்டந்தானதிர
அண்டங்களதிர்ந்துவிழ அவனிபாதாளம்விழ
பூமியதிர்ந்துவிழ பூலோகந்தத்தளிக்க
எல்லையதிர்ந்துவிழ எமலோகந்தத்தளிக்க
கெற்பங்கலங்குது கெந்தருவலோகமெல்லாம்
ஓங்கும்பெருங்கால்தான் ஒருபக்கம்நீர்வாங்கும்
நட்சத்திரங்களெல்லாம் நாலுதிக்குந்தானதிர
பூமியதிரசேடன் புஜத்தோடேபுஜமதிர
ஆதிசேடன்தானும் அதிர்ந்துமேநஞ்சுகக்க
ஆகாசம்நின்றதிர அங்கப்போய்விழுந்தது
மரத்திலிருந்தகனி மண்மேல்விழுந்தது
அருச்சுனருந்துரோபதையும் அக்கனியைப்பார்த்து
பாரமலைபோலே பர்வதம்போற்றோணுது
இருவராலாகாது இந்தக்கனியெடுக்க
இந்தக்கனியைநாமெடுக்கமுடியாது
ஆணலழகனவன் அருச்சுனனுமேதுசொல்வான்
தோராவடிவழகி துரோபதைநாயகியே
வெற்றிமதயானை வீமனைஅழையுமென
அப்படியேநல்லதென்றாள் ஆனந்தவாழ்மாரி

துரோபதை வீமனை அழைக்க வீமன் வருகிறது.

தோராவடிவழகி துரோபதைநாயகியும்
அன்னமதுபோலே ஆரணங்குவந்துமல்லோ
வெற்றிமதயானை வீமருகில்வந்து
அருச்சுனராஜரும்மை அழைத்தோடிவாருமென்றார்
சீக்கிரம்வருகவென்று தேன்மொழிதெண்டனிட்டாள்

வெற்றிமதயானை வீமனுந்தான்கேட்டு
அப்படியேநல்லதென்று ஆனந்தவாழ்மார்பன்
இருந்தவிடத்தைவிட்டு எழுந்துநடந்தானே
இருவருமாகவே யேகிவழிநடந்துவந்து
கனியிருக்கும்வனத்தே கடுகியேகண்டார்கள்
தருமரறியாமல் அழைத்துவந்தாள்தையலரும்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
அசைக்கியேபார்த்தானே அசையவில்லை அக்கனிதான்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
நகுலசகாதேவர் ராஜாவை அழையுமென்றான்
ஆரணங்குதுரோபதையும் அப்படியேநல்லதென்று

துரோபதை நகுல சகாதேவர்களை அழைக்க அவர்கள் வருகிறது.

கொஞ்சியேவந்தாளே கொம்பேரிடையாளும்
நகுலசகாதேவ ராஜாக்கள்முன்னேவந்து
அருச்சுனரும்வீமரும் அழைக்கிறாருங்களைத்தான்
வாருங்களென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டாள்
நகுலசகாதேவ ராஜாக்கள்தான்கேட்டு
அப்படியேநல்லதென்று ஆனந்தமாயெழுந்தார்
மூவர்களுமொன்றாகி முடுகிவந்தார்கானகத்தே
மாங்கனிதானிருக்கும் வனத்தில்வந்துசேர்ந்தார்கள்
நகுலசகாதேவ ராஜர்களும்வந்தாரென்று
எல்லவருமொன்றாகி எடுப்போங்கனியையென்று
ஐந்துபேருங்கூடி அக்கனியைத்தானெடுத்தார்
என்னபலங்கொண்டு இழுத்துவலித்தாலும்
எந்தவிதத்திலேயும் எடுபடலை அக்கனிதான்
சிந்தைகலங்கினார்கள் திடுக்கிட்டுமெய்மறந்தார்
மெத்தபயமாச்சே வேந்தர்கள்நால்வருக்கும்
தோராவடிவழகி துரோபதையைத்தான்பார்த்து
அழகானதருமருக்கு அறிக்கையிடும்பெண்ணேயென்றார்
தோராவடிவழகி துரோபதையுந்தான்கேட்டு

மாங்கனியினுல் ஐந்துபேருந் திகில்பட்டுத் துரோ
பதை தருமரை அழைக்க தருமர் வருகிறது.

ஆகட்டுமென்றுசொல்லி அப்படியேநல்லதென்று
துள்ளியெழுந்தாளே துரோபதைநாயகியும்
ஓடிநடந்தல்லோ ஒருநொடியில்வந்தாளே
தருமரெதிரில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
வாள்விஜயரருச்சுனரும் மாங்கனியைத்தானருத்தார்
எடுத்தாலெடுபடலே யென்றுவரச்சொன்னூர்காண்
வாருமையாவென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டா
தக்கப்புகழுடைய தருமரதுகேட்டு [ள்
இதுஎன்ன அதிசயங்களென்றேயெழுந்திருந்தார்
தருமருந்துரோபதையும் இருவரும்வந்தார்கள்
மாமரத்தருகேவந்தார் மகாராஜர்தருமலிங்கம்
உற்றுற்றுப்பார்த்துமே யோசனேபண்ணுகிருர்
தம்பிமார்நால்வரையும் தருமரவரழைத்து
சாயாம்புமன்னவனுர் தருமரங்கேதுசொல்வார்
ஆருண்ணுமாங்கனியோ அறியேனேதம்பியரே
எவருண்ணுமாங்கனியோ யேதுமறியேனே
எந்தெந்ததேவர்கள் எடுத்துப்புசிக்கிறதோ
சப்தரிஷியவர்கள் சந்யாசியுண்கிறதோ
மேலுலககெந்தருவர் சாலவந்துண்கிறதோ
கைமோசம்வந்ததென்று கடிகியேதருமராஜர்

மாங்கனியினுல் மோசம் வந்ததென்று தருமர்
எம்பெருமாளே நினேத்து தோத்திரம்
பண்ணுகிறது.

தக்கபுகழுடைய தருமரவர்பயந்து
சிந்தைகலங்கியவர் திடுக்கிட்டுமெய்மறந்து
உள்ளங்குலேந்துமல்லோ உடம்புவிடவிடத்து
மன்னர்மனஞ்சலித்து மனதிலேஎண்ணுகிருர்
ஆரைநிளேக்கிருர் அளவற்றசிந்தையிலே

எவரை நினைக்கிறார் எண்ணமற்றசிந்தையிலே
மாயன்பெருமாளை மனதில்நினைத்தாரே
அண்டமுலகளந்த ஆதிமூலமிங்கேவர
ஏழுலகாண்டசாமி எம்பெருமாளிங்கேவர
மண்ணளந்துகணக்குசொன்ன மாயவருமிங்கேவர
தாடகையைக்கொன்ற தயாளகுணரிங்கேவர
அகலிகைசாபந்தீர்த்த ஆண்டவரேவாருமையா
எல்லையளந்தவரே எம்பெருமாளிங்கேவர
ஏழைவருந்துகிறேன் எழுந்தருளிவாருமையா
இப்படியாக இவர்வருந்தும்வேளையிலே

தருமர் இங்கே இப்படி வருந்துவதை எம்பெருமாள் அறிந்து தான் தருமரண்டை வருகிறது.

பஞ்சவர்கள்வருந்துவதை பாரளந்தார்தாமறிந்து
ஐவருக்குமங்கேதான் அனர்த்தம்வருகுதென்று
சயிந்தவரிஷியாலே சாபம்வருகுதென்று
ஆயாவரறிந்து அங்கெனவேதானெழுந்து
ஐவரையுங்காக்கவென்று அப்பொழுதேவாருராம்
வட்டமாங்கருடனேறி மாயவனுர்வாராரே
வனமாய்வனந்தாண்டி வாராரேதருமரண்டை
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
சில்லென்றகாடும் செடியும்வனந்தாண்டி
சயிந்தவரிஷிவனத்தை தான்கண்டார்மாயவரும்
பஞ்சவர்கள்தானிருக்கும் பாரவனத்தில்வந்தார்
மாயவரைக்காணுகையில் வலம்பெரியதர்மராயர்
ஐந்துபேருமாகவே ஆயரைத்தெண்டனிட்டார்
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட்டார்
தெண்டனிட்டமன்னவர்கள் திரும்பியெழுந்திருந்து
சிங்காதனங்களிட்டார் ஸ்ரீராமர்வீற்றிருக்க
இட்டதோராசனத்தில் எம்பெருமாள்வீற்றிருந்தார்

பஞ்சவரைத்தான்பார்த்து பாரளந்தாரேதுசொல்வார்
ஏதுவகையாக என்னையழைத்தீர்கள் [ரூர்
அழைத்ததொருகாரியத்தை அடவுடனேசொல்லுமென்
உங்கள்-மனதிலிருக்கிற மர்மத்தைச்சொல்லுமென்ரூர்
மாயன்பெருமாளும் வார்த்தைகள்சொல்லுமென்ரூர்

தர்மர் மாங்கனியின் வரலாறு சொல்லுதல்.

சாயாம்பூமன்னவனர் தர்மரவரேதுசொல்வார்
ஆகாததம்பிமார் ரரசருடன்பிறந்தேன்
பொல்லாததம்பியுட னல்லற்படப்பிறந்தேன்
எந்தன்விதிவசத்தை என்னவென்றுசொல்வேன்காண்
ஆருண்ணும்மாங்கனியோ அறியேனேமாயவரே
எவருண்ணும்மாங்கனியோ ஏதுமறியேனே
ஆகாததம்பியர்க ளறுத்துவிட்டாரென்னசெய்வேன்
எம்பெருமாள்தனையழைத்தா லெல்லாந்தெரியுமென்று
உம்மைநினைத்தோமே உலகளந்தமாயவரே
வந்தீரேமாயவரே வயணங்கள்சொல்லுமென்ரூர்

எம்பெருமாள் மாங்கனியின் வரலாறுகேட்ட
பஞ்சவர்களைப் பயங்காட்டி மனம்
சோதிக்கிறது.

தர்மருரைகேட்டு சாமியவரேதுசொல்வார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
கைமோசம்வந்துதே கட்டழகாயென்னசெய்வோம்
தபசிற்பெரியவர்காண் சயிந்தவரிஷியாரும்
வரத்திற்பெரியவர்காண் மகாதேவர்க்கொப்பிடலாம்
யோகத்திற்பெரியவர்காண் உற்றசன்யாசியர்காண்
ஒருநூறுவருஷமட்டும் யோகத்திலேயிருப்பார்
அவ்வருஷம்சென்றபின்பு அறுத்திடுவார்மாங்கனியை
அறுத்துப்பொசித்திடுவார் அந்தமகாமுனியும்
இந்தமகாரிஷியும் இந்தவனத்துக்கு
வருகிறநாளாச்சே மாங்கனியெடுத்தீரே

வந்துமவர்பார்த்து மாங்கனியெங்கேயென்று
கோபித்துக்கண்சிவந்து கொல்லநினைப்பாரே
கொல்லநினைப்பாரே குடிகேடுவந்திடுமே
கல்லாகமண்ணுகக் கடுகிச்சபிப்பாரே
முள்ளாகமண்ணுக முன்னேசபிப்பாரே
இன்னுள்பிழைத்திருந்து இறந்துவிடநாளாச்சே
சேனநாள்பிழைத்திருந்து செத்துவிடநாளாச்சே
துரியன்செய்தவஞ்சனைக்கு சீவன்தப்பிப்பிழைத்தீரே
மாபாவிசெய்ததற்கு மாளாமலிருந்தீர்கள்
இந்தவனந்தனிலே இறந்துவிடக்காலமோதான்
சயிந்தவரிஷியாலே சாவுவரநாளாச்சே
இதற்கோயெனையழைத்தீர் என்றுரேமாயவனுர்

எம்பெருமாள் கனியின் வரலாறுசொல்லி தன்னுலே
ஒன்றும் ஆகாதென்று சொல்ல தருமர்
புலம்புகிறது.

இப்படியாகவேதான் செப்பத்திருமாலும்
இவ்வார்த்தைக்கேட்டாரே எழிலானதருமலிங்கம்
முகில்வண்ணர்முன்னுலே முறையிடத்தொடங்கினுர்
ஆகாததம்பிமா ரரசருடன்பிறந்தேன்
பொல்லாததுஷ்டருடன் பிறந்ததொருநன்மையினுல்
என்-அங்கங்குலையுதே ஆண்டவரேயென்னசெய்வேன்
என்னையறியாமல் இக்கனியைத்தானறுத்தார்
அறிந்தேனேயாமாகில் அறுக்கவொட்டேனிக்கனியை
பார்த்தானேயாமாகில் பறிக்கவொட்டேன்மாங்கனியை
அடியார்கள்செய்தபிழை ஆண்டவரேமனம்பொறுத்து
தெரியாதார்செய்தகுற்றம் தேவரீர்மனம்பொறுத்து
உன்-உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகாமல்
உன்-பெட்டியின்பூஷணங்கள் பெருமைகுலையாமல்
உன்-தோளில்ஜெபமாலை தொண்டழிந்துபோகாமல்
உன்-கையில்ஜெபமாலை கனங்குலைந்துபோகாமல்
கார்க்கக்கட னுனக்கு கரியமாலெம்பெருமாள்

ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
என்றுதருமரங்கே நின்றுபுலம்பக்கேட்டு
மாயன்பெருமாளும் மறுவார்த்தையேதுசொல்வார்
என்னைவருத்தாதே என்மேல்சலியாதே
உத்தமரேஉங்களாலே மெத்தப்பொழுதாச்சு
ஏகச்செலவருளும் என்றார்பெருமாளும்
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
பரிதாபம்நாங்கள்படப் பார்த்துமேபோவதற்கு
மனமும்வருகிறதோ மாயவரேவுந்தனுக்கு
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்மாயவரும் [ன்
புகழ்வேந்தர்வார்த்தைக்குப் பொருந்தவேணுமிக்கனிதா
ஐவருடவார்த்தையினல் அம்மரத்திலொட்டவேணும்
அல்லாதேயாமானல் ஆராலுமுடியாது
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்தருமராயர்
அடியேனலாவதேது ஆண்டவரேசொல்லுமையா

எம்பெருமாள் ஐவருடைய எண்ணமும் துரோபதை
எண்ணமும் அறிந்து மாங்கனி மரத்தில்
பொருந்தினது.

தருமருரைகேட்டு சாமிமனமகிழ்ந்து
மாயன்பெருமாளும் வார்த்தையவரேதுசொல்வார்
ஐவர்மனதறிய ஆண்டவரேதுசொல்வார்
தக்கபுகழ்பெரிய தருமரேநீர்கேளும்
உன்-மனதிலேதானிருக்கும் மர்மத்தைசொன்னீரானல்
வஞ்சனைகளெண்ணுதே மனக்கவலையாதே
உண்டானபடியாக உரைத்தீரேயாமாகில்
அற்றுவிழுந்தகனி அம்மரத்திலொட்டுமென்றார்
மண்மேல்விழுந்தகனி மரத்தின்மேலேறுமென்றார்
அல்லாதேயாமானல் அக்கனிபொருந்தாது
இல்லாதேயாமானல் இறந்துமடிவீர்கள்
சொல்லாதேபோனாலே சுருக்காய்மடிந்திடுவீர்

பெருமாளவர்சொல்லப் பேர்பெரியதருமலிங்கம்
மாயருரைகேட்டு மகாராஜரேதுசொல்வார்
மனதிலிருக்கின்ற மர்மமதையேதுசொல்வார்
தன்மனதிலுள்ளபடி தார்வேந்தரேதுசொல்வார்
பெரியதந்தைபெற்றெடுத்த பிள்ளை திரியோதிரன்
தம்பிமார்தன்னுடனே தானுஞ்சுகமானால்
ராச்சியம்நலமாகி நாமும்சுகமானால்
நாடெங்கும்வாழ்ந்திருந்தால் கேடொன்றுமில்லையென
பெரியோருரைப்படிக்குப் பூமிசுமக்காதோ
என்றறிநீவொழிய இனியொன்றுநானறியேன்
இப்படிக்குத்தானுரைத்து இருந்தாரேதர்மலிங்கம்
அப்போதுமாங்கனியும் அந்தரத்திலெழும்புகுது
அறுந்துவிழுந்தகனி அந்தரத்திலெழும்புகுது
இருநாறுயோசனைகள் எழும்பியேநின்றுதங்கே

மாயனுக்கு தர்மர் மனோபாவஞ்சொல்ல மாங்கனி இருநாறுயோசனை தூரமெழும்பப் பெருமாள் வீமனைக் கேட்கிறது.

எம்பெருமாள்மாயவரும் யேதுசொல்வாரப்போது
மதவீமனையழைத்து மாயவனுரேதுசொல்வார்
உன்மனதிலுள்ளபடி யுரையுமென்றார்மாயவரும்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
திரியோதிரராஜன் சேனைபரிகலங்கள்
குருடன்மகனாராங் குடிகெடுத்தராஜர்களை
நூலார்கடுந்திரளார் நூற்றொருவராஜர்களை
கௌரவர்சேனைகளைக் கண்டதுண்டமாக்கியல்லோ
ஆனைகுதிரைகளை அழகுள்ளசேனைகளை
சாமத்துரோகி சகுனியவனையுமே
கொன்றுஅதமாக்கி கொப்பனையாள்துரோபதையை
கொற்றார்குழலியவரைக் கூந்தல்முடிக்கவைப்பேன்
துகிலையுரிந்தகொரு துற்சாதனனுதிரமெல்லாம்
வாரிக்குடித்தாலே வயிறெரிவுதீருமையா

அள்ளிக்குடித்தாலே அங்கந்தரிக்குமையா
பேர்பெரிய அண்ணருக்குப் பட்டந்தரித்தாலே
அப்போதுயென்மனது ஆயாசந்தீருமையா
வெற்றிமதயானை வீமனுரைக்கையிலே
என்றபொழுதே எழும்புதுமாங்கனிதான்
சாற்றும்நானூறு யோசனை தூரம்நின்றிடுமாம்

மாயனுக்கு வீமன் மனோபாவஞ்சொல்ல மாங்கனி
நானூறு யோசனை தூரம் எழும்பப் பெருமாள்
அர்ச்சுனனைக் கேட்கிறது.

அப்போதுயெம்பெருமாள் அங்கனவேயேதுசெய்தார்
அர்ச்சுனரைப்பார்த்து ஆணழகர்கேட்கலுற்றார்
வாள்விஜயாவுந்தனுட மனதில்நினைத்ததெல்லாம்
ஒன்றுமொளியாமல் உறையுமென்றார்மாயவனார்
என்றுமவருரைக்க எழில்விஜயனருச்சுனனும்
மாயருரைக்கேட்டு வாள்விஜயனேதுசொல்வான்
கர்னன்சகுனியும் காங்கேயரானவரை
கொல்லுகிறேனென்றுசொல்லி கொடியசபதமிட்டேன்
சங்கமனைக்கொல்லுகையில் சமர்பூமிக்ஷேத்திரத்தில்
அமரதர்சமரதர் அளவற்றராணுவங்கள்
அனைவரையுங்கொன்றுமே அண்ணருக்குப்பட்டங்கட்டி
அண்ணருக்குப்பட்டங்கட்டி அடிபணிந்துநிற்கவென்று
எண்ணியிருக்கிறேன் இனியொன்றுமில்லையென்றான்
அறுநூறுயோசனை தூரம் நின்றது அக்கனிதான்

மாயனுக்கு அர்ச்சுனன் மனோபாவஞ்சொல்ல
மாங்கனி அறுநூறு யோசனை தூரம் எழும்ப
பெருமாள் நகுலனைக் கேட்கிறது.

அப்போதுஎம்பெருமாள் அங்கெனவேயேதுசெய்தார்
நகுலனைத்தானழைத்து நாரணருமேதுசொல்வார்
நாமமுடியானே நகுலனேயென்றழைத்து
மனதில்நினைத்ததொரு மர்மத்தைசொல்லுமென்றார்

மாயருரைகேட்டு மன்னவனுமப்போது
நாமமுடியான் நகுலனுமேதுசொல்வான்
திரியோதிரன்படைகள் சேனைகளைக்கொன்றழித்து
ஆனைசேனைபரிவாரம் அடங்கலுங்கொன்றழித்து
மாரளவுரத்தங்களை வழியவிட்டுமண்மேலே
அதமாக்கிசேனைகளை அண்ணருக்குப்பட்டங்கட்டி
என்-கண்ணாலேபார்ப்பதற்கு கருத்தில்நினைத்தேனையா
என்றுமவனுரைத்து இருந்தான்நகுலனுமே
அந்தவுரைகேட்டு அழகானமாங்கனியும்
அந்தரத்தில்நின்றகனி அப்புறத்தில்போகுது
எண்ணூறுயோசனையில் நின்றது அக்கனிதான்

எம்பெருமாளுக்கு நகுலன் மனோபாவஞ் சொல்ல
மாங்கனி எண்ணூறுயோசனை தூரமெழும்பப்
பெருமாள் சகாதேவனைக் கேட்கிறது.

எம்பெருமாள்மாயவரு மேதுசெய்தாரப்போது
சகாதேவராஜாவை சாமியவர்கேட்கலுற்றார்
இளையசகாதேவா எண்ணமெல்லாஞ்சொல்லுமென்றார்
தாமமுடியழகன் சகாதேவனேதுசொல்வான்
திரியோதிரன்படையை சேனைபரிதளத்தை
உன்பாதம்சிரசில்வைத்து உக்கிரமாய்ச்சணடைசெய்து
அண்ணனுக்குப்பட்டங்கட்டி அவனிதனையாளவென்று
எண்ணியிருக்கிறேனே இதுவேநினைவொழிய
மற்றொன்றுமில்லையென்று மாயர்பாதம்பணிந்தான்
இவ்வாறுதானுரைத்து இருந்தான்சகாதேவன்
அப்போதுமாங்கனியும் அனேகதூரமெழும்பி

எம்பெருமாளுக்கு சகாதேவன் மனோபாவஞ் சொல்ல
மாங்கனி தொளாயிரப்யோசனை தூரத்தில் நிற்க
எம்பெருமாள் துரோபதையைக் கேட்கிறது.

தொளாயிரம்யோசனை தூரம்நின்றதக்கனிதான்
ஆதிநாராயணரும் அங்கெனவேயேதுசெய்தார்

மாயன்பெருமாளும் வார்த்தைகளேதுசொல்வார்
பாஞ்சாலன்பெற்றபெண்ணே பத்தினியேதுரோபதை
நெருப்பிற்பிறந்தவளே நீலப்பசுங்கிளியே [யே
ஐவருக்குந்தேவியரே அழியாதபத்தினியே
மனதில்நினைத்ததெல்லாம் மங்கையரேசொல்லுமென
நெஞ்சில்நினைத்ததெல்லாம் நேராகசொல்லுமென
அப்போதுதுரோபதையும் ஆரணங்கேதுசொல்வாள்
தூரத்திலப்புலியாள் தூசுபடாப்பத்தினியாள்
வானத்திலப்புலியாள் மாசுபடாப்பத்தினியாள்
என்னவென்றுசொல்லலுற்றாள் ஏலப்பசுங்கிளியாள்
திரியோதிரன்பாளையத்தை செருக்களங்கள்கொன்றழித்
ஐவர்களிட்டதொரு அருஞ்சபதஞ்சென்றபின்பு [து
வெற்றிமதயானை வீமருடகையாலே
பாம்புக்கொடிவேந்தன் பட்டபிறகாக
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்பட்டபின்பு
நாகக்கொடியோனும் நாசமடைந்தாலே
அவன்-மல்லாக்காவிழுந்தவுடன் மார்பிலேதானிருந்து
மார்பைப்பலகையாக்கி மார்பெலும்பைச்சீப்பாக்கி
மார்பில்வருமுதிரமெல்லா வாரித்தலைதடவி
நல்லெண்ணெயைப்போல நலங்கிட்டுகூந்தலுக்கு
சீப்புசிக்கங்கோலெடுத்து சீவிமயிராற்றி
அவன்குடலைப்பிடுங்கியல்லோ கொண்டைக்கயறுகட்டி
ஈரலின்பிச்செடுத்து யிறுக்கித்தலைமுடிப்பேன்
என்-விரித்ததலைமுடிக்க மெத்தநாள்சென்றிடுமோ
அவிழ்த்ததலைமுடிக்க அனேகநாள்சென்றிடுமோ
கூந்தல்முடிப்பேனோ குறைகளெல்லாந்தீர்வேனோ
சாமிதயவாலே தலையைமுடிப்பேனோ
என்றுநினைத்திருந்தேன் இனியொன்றுநானறியேன்
இந்தவிதஞ்சொல்லி இருந்தாளேபாஞ்சாலி
துரோபதைசொல்லலுமே தூரயிருந்தகனி
அந்தரத்தில்நின்றகனி அவனியதில்விழுந்து

துரோபதை மனேபாவஞ் சொன்னது சரியல்லாமல்
தொளாயிரம் யோசனை தூரம்போன மாங்கனி
பூமியில்விழ பெருமாள் துரோபதையைக்
கேட்கத் துரோபதை சொல்லல்.

ஆகாசம்போனகனி அற்றுவிழுந்தது
கண்டார்கரியமாலுங் கடுகெனவேயேதுசொல்வார்
மனதில்கபடுவைத்து வஞ்சனைகள்சொன்னதினல்
அந்தரத்தில்நின்றகனி அவனியிலேவிழுந்ததென்றார்
ஏதேதொளித்தாயோ எந்தனுக்குச்சொல்லுமென்றார்
ஒன்றுமொளியாமல் உத்தமியேசொல்லுமென்றார்
அப்போதுதுரோபதையும் ஆரணங்குயேதுசொல்வாள்

துரோபதை மறுபடியும் பெருமாளுக்கு உண்மையை
சொல்ல மாங்கனி மாத்தில் பொருந்தினது.

அண்ணுவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
இன்னமொருபாவம் இனியொன்றுநானறியேன்
மற்றுமொருபாவம் வஞ்சனைகளொன்றறியேன்
யாதொருவஞ்சனைகள் இடறுகள்நானறியேன்
அண்ணுகரியமாலே அடியேனொருவார்த்தை
பார்த்தனைமாலையிடப் பாஞ்சாலன்என்னைப்பெற்றான்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குலத்திற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரில் உள்ளேமணற்சேருமுண்டு
அடிக்கிறகாற்றதனில் அலைத்துரும்புதானுமுண்டு
காலவிஷமுண்டவர்க்கு கண்டங்கறுப்புமுண்டு
நீரிற்சுழலுமுண்டு நிலமதனிற்பூச்சியுண்டு
தண்ணீர்கலையுமுண்டு சந்திரற்குமாசியுண்டு
சந்திரற்குமாசியுண்டு சற்றேகருப்புமுண்டு
குண்டுமணிக்காயிலும் கொஞ்சங்கறுப்புமுண்டு
எனக்கு-பயிரேகருப்பொழியா மற்றகருப்புமில்லை
பொட்டேகறுப்பொழிய பின்னேகறுப்புமில்லை

அக்கினியிற்பெண்பிறந்தேன் ஐவரையுமாலையிட
நெருப்பிலேபெண்பிறந்தேன் அருச்சுனரைமாலையிட
என்-கூடப்பிறந்தது கோதண்டமானவில்லு [று
பத்தரையில்நான்வளர்ந்தேன் பார்த்தரேவேணுமென்
அடுக்கரையில்நான்வளர்ந்தேனருச்சுனரேவேணுமென்
வளர்ந்துசமைந்தேனே மாலையிடும்நாளானேன் [று
போதவளர்ந்தேனே பிள்ளைபெறும்நாளாச்சு
இப்படியாகஇருக்கின்றவேளையிலே
எழிலான அருச்சுனற்கு என்னைக்கொடுக்கவென்று
என்தகப்பன்பாஞ்சாலன் எண்ணியிருக்கையிலே
அரக்குமாமாளிகையில் ஐவர்மடிந்தாரென்று
மாண்டார்களென்றுசொல்லி மண்டலத்திற்பேராச்சு
செத்தார்களென்றுசொல்லி ஜெகமெல்லாம்பேராச்சு
அப்போதுஎன்தகப்பன் ஆயாசப்பட்டுருகி
அருச்சுனர்க்கென்றபெண்ணை ஆருக்குகொடுப்பேனென
அருச்சுனரைப்போலாக ஆண்பிள்ளையில்லையென்று
வில்லைவளைப்பார்கள் மேதினியிலில்லையென்று
ஏலப்பசுங்கிளியை எப்படிகாப்போமென்று
எண்ணுதுமெண்ணியே இருந்துவிசாரமிட்டார்
இப்படியாக இருக்கின்றகாலத்திலே
வந்தாரேயந்தவேளை மகாவியாசபகவானும்
என்தகப்பன்பாஞ்சாலன் எழுந்திருந்துஓடிவந்து
கண்டவுடனேயல்லோ கடுகவெழுந்திருந்து
வந்தவியாசரை வணங்கியேதெண்டனிட்டு
துரிதமுடனேதான் தோத்திரங்கள்தான்செய்து
இருமிருமென்றுசொல்லி இட்டார்சிம்மாதனங்கள்
இட்டசிம்மாதனத்தில் ஏறியவர்வீற்றிருந்து
என்தகப்பனைப்பார்த்து என்னவென்றார்உன்க்ஷேமம்
அப்போதுஎன்தகப்பன் ஆயாசமாயுரைப்பார்
எந்தன்விசேஷமெல்லாம் எடுத்தவர்க்குரைத்து
அருச்சுனர்க்கென்றுநான் அனலிற்பிறந்ததுவும்

அரக்குமாமாளிகையி லவரிறந்ததுவும்
இத்தனையுஞ்சொல்லி இருந்தாரேஎன்தகப்பன்
அப்போவியாசரும் அரசனிடவார்த்தையெல்லாம்
செவிகொடுத்துகேட்டுமல்லோ சீக்கிரமாயேதுசொல்வார்
உத்தமியாள்தன்னுடனே ஒன்றாய்ப்பிறந்தவில்லு
கூடப்பிறந்ததொரு கோதண்டமானவில்லு
எடுத்துநிறுத்துமென்றார் எல்லவருந்தானறிய
பெருவில்லைவளைத்தவர்க்கு பெண்ணைத்தருவேனென்று
ஐம்பத்தாறுதேசத்துள்ள அரசர்கள்தானறிய
அரசர்கள்தானறிய யறையும்பறையோசை
அப்போதறிந்திடலாம் ஐவருடசேதி
என்றுமவருரைத்து ஏகிநடந்தாரே
அந்தவுரைகேட்டு ஆனந்தமாயெழுந்து
கூடப்பிறந்ததொரு கோதண்டமானவில்லு
வந்துவளைத்தவர்க்கு மாலையிட்டுத்தாரேனென்று
வில்லைவளைத்தவர்க்கு மெல்லியளைத்தருவேனென்று
ஐம்பத்தாறுதேசத்து அரசர்க்குமோலைதந்தார்
பெண்ணைத்தருவேனென்று பிடித்தார்கள்சின்னத்தொனி
சின்னத்தொனியையல்லோ தேசமெல்லாமூதிவைத்தார்
பாஞ்சாலன்சீமையெல்லாம் பந்தலலங்கரித்தார்
எங்குமலங்கரித்தார் இராசாக்கள்வந்திருக்க
பாஞ்சாலன்சொன்னதொரு பரிவானவார்த்தையினால்
ஐம்பத்தாறுதேசத்திலுள்ள அரசர்கள்வந்திருக்க
நாலுபுறத்திலுள்ள ராஜரெல்லாம்வந்தார்கள்
முத்துமுடிதரித்த முடிமன்னரானவரும்
பச்சைமுடிதரித்த பட்டத்துராஜர்களும்
வச்சிரமுடிதரித்த மண்டலத்துராசர்களும்
காசிநாடாண்டதொரு கர்ணமகாவீரியரும்
நாலுதிக்கிலுண்டான ராஜரெல்லாம்வந்தார்கள்
அப்பெரியபந்தலிலே யர்ச்சுனரும்நீருமாய்
அன்றொருபார்ப்பானாய் அங்குநீங்கள்வந்தீர்கள்

பாஞ்சாலன்தானறியான் பாரளந்தாரானவரை
ஆருமறியாமல் அவரெடுத்தமார்க்கமெல்லாம்
உங்கள்வடிவுதன்னை ஒருவரறியார்கள்
அந்தச்சமயத்தில் அடைவுடனேஎன்தகப்பன்
வந்திருந்தராஜர்களை வளையுமென்றார்வில்லதுவை
எப்பெரியராஜர்களும் இவ்வில்வளைக்கறியார்
காண்டீபந்தனையெடுப்பார் கலங்கியேவைத்திடுவார்
ஆராலுமுடியாது அப்பெரியவில்வளைக்க
காசிநாடாண்ட கர்ணரெழுந்திருந்து
வில்லைவளைத்துமல்லோ வில்நாரிபூட்டுகையில்
எண்ணாதுமெண்ணினேன் இவனேபுருஷனென்று
வடிவுசிலையுடையான் மாலையிடவேணுமென்று
எண்ணினேன்மனதி லினியொன்றும்நானறியேன்
வில்வளைக்காமல்கர்ணர் வில்தெரித்துபோய்விழுந்தான்
அன்றுமொருபார்ப்பானும் அர்ச்சுனர்வில்வளைத்தார்
நீர்பார்த்துமீனெய்தார் நித்திலங்கும்பூமுடியார்
பார்ப்பான்கழுத்திலே பணிமாலைபோடுமென்றார்
குஷ்டரோகியானவர்க்கு குடித்தனஞ்செய்வேனோ
என்றல்லோமாலைதனை எடுத்தேசுழற்றிவிட்டேன்
கர்ணன்கழுத்திலே கைமாலைவிழுகாமல்
பார்ப்பான்கழுத்திலே பணிமாலைவிழுந்ததுவே
அப்பாவஞ்செய்ததல்லால் ஆயரேவேறொன்றில்லை
அருச்சுனற்குமாலையிட்டு ஐவர்க்குத்தேவியானேன்
பார்த்தற்குமாலையிட்டு பஞ்சவர்க்குந்தேவியானேன்
மற்றொருபாவங்கள் மாயவரேசெய்தறியேன்

### எம்பெருமானுக்கு துரோபதை தன் கலியாண சங்கதி சரியாய்ச்சொல்ல மாங்கனி மரத்திற் பொருந்தியது.

தோராவடிவழகி துரோபதையாள்சொல்லுகையில்
என்றபொழுதிலே எழும்புதுமாங்கனிதான்

பொட்டெனவேதானெழும்பி பொருந்துதேமாங்கனியும்
தருமர்மனங்குளிர்ந்து சந்தோஷமானூரே
பஞ்சவர்கள்ஐந்துபேரும் பார்த்துமகிழ்ந்தார்கள்

எம்பெருமாள் பஞ்சவர்க்கு புத்திசொல்லி தான்
அவர்கள் கையில் செலவுபெற்று துவார
கைக்குப் போகிறது.

ஐவர்மகிழ்ந்தபின்பு அரிராமரேதுசொல்வார்
பஞ்சவரைதானழைத்து பாரளந்தாரேதுசொல்வார்
இந்தவனந்தனிலே இருந்துசிலகாலம்
மற்றொருவனந்தனிலே வனவாசஞ்செய்திடுங்கள்
என்னவினைவந்தாலும் என்னை நினையுமென்றூர்
பத்திரமாக யிருங்களென்றூர்பஞ்சவரை
போகச்செலவுதாருமென்றெழுந்தார்புண்ணியரும்
பஞ்சவர்களைவரும் பாஞ்சாலிதுரோபதையும்
ஐவருந்துரோபதையும் ஆண்டவனைத்தெண்டனிட்டு
போய்வாருமென்றுசொன்னூர் புகழ்வேந்தரைவர்களும்
விடைபெற்றெழுந்தாரே வேந்தர்பெருமானும்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்றூர்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
சில்லென்றகாடுஞ் செடியும்வனந்தான்தாண்டி
துவாரகாபுரியைநாடி துரிதமுடன்வந்துவிட்டார்
துவாரகாபுரிதனக்கு சுவாமியும்போனபின்பு
ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்குதுரோபதையும்
மன்னர்பஞ்சபாண்டவரும் மயிலணையாள்துரோபதையு
அந்தவனத்திலே அநேகநாள்வாசம்பண்ணூர் [ம்
இப்படியாக இருக்கிறூர்பஞ்சவர்கள்

ஐந்தாவது, சயிந்தவமகாரிஷி வனம்

முற்றிற்று.



திரியோதிரன் சித்திரசேனனுடன் சண்டைசெய்து
தேர் சக்கரத்தில் கட்டப்பட்டது.

## ஆறுவது, காமதேனு பர்வதம்

ஆரும்வருஷம் பிறந்ததுஐவருக்கு
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோருர்கள்
கூடைதலேமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலேமேலேவைத்தார்
மன்னிவைத்தசீமாடு வனவாசம்போருர்கள்
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோருர்கள்
காமதேனுபர்வதத்தைக் கடுகியேதானடந்தார்
காமதேனுவனந்தனிலே கடுகவந்துசேர்ந்தார்கள்
ஐந்தடுக்குப்பர்ணசாலே யழகாகவுண்டுபண்ணுர்
ஏழடுக்குப்பர்ணசாலே எழிலாகவுண்டுபண்ணுர்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

### திரியோதிரன் ஆலோசனே.

தென்னமுடிவேந்தன் திரியோதிரன்தானும்
வணங்காமுடிவேந்தன் மாபாவியென்னசெய்தான்
சபைகள்நிறைந்திருக்க சர்ப்பக்கொடியோனுரைப்பான்
காளமகாரிஷியாரைக் கருதித்தபசுபண்ணி
ஐவரையுங்கொல்லவென்று பஞப்பவனந்தனிலே
கொல்லுகிறேனென்றுசொல்லிகொப்பெனவேபோனுரே
ஐவர்-செத்ததுவும்பிழைத்ததுவுஞ் சேதிதெரியவில்லே
ஆரடாதூதுவரே ஆயிரம்பேர்வாருமென்முன்
அப்படியேதூதுவர்கள் அணேவோரும்வந்தார்கள்
திரியோதிரனேவந்து தெண்டனிட்டுயேதுசொல்வான்
எங்களேயழைத்தபணி ஏதுபணிசொல்லுமென்ருர்
அப்போதிரியோதிரன் அவர்களுக்குயேதுசொல்வான்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்போனுரே
எந்தவனத்திலே இருக்கிருரென்றறியேன்

ஐவருங்காணுமல் ஆராய்ந்துபார்த்துவாங்கள்
என்றுமேசொன்னனே எரிநாகங்கொண்டவனும்

துரியோதிரன் தூதர்கள் பஞ்சவரைக்காண வருகிறது.

மாநாகன்சொன்னதெல்லாம் மல்லர்கள்தான்கேட்டு
வாருர்கள் தூதுவர்கள் மகாராஜன்சொற்படிக்கு
அத்திபுரந்தாண்டி அவசரமாய்வாருர்கள்
குருக்ஷேத்திரபூமி குருபூமிதேசம்விட்டு
காடுஞ்செடிகடந்து கடுகவேவாருர்கள்
சில்லென்றுபூத்ததொரு செடியும்வனந்தாண்டி
சூரியன்வனந்தனிலே தூதர்தேடிப்பார்த்தார்கள்
அங்கேயுங்காணுமல் அப்பாலேதேடிவாரார்
ராமரிஷிவனத்தில் நடந்தெங்குந்தேடிவாரார்
அங்கேயுங்காணுதே அப்புறந்தேடிவாரார்
முருக்கமகாரிஷிவனத்தில் முடிகியேதேடினர்கள்
அங்கேயுந்தேடியே அப்பாலேபோகலுற்ருர்
காளமகாரிஷிவனத்தில் கடுகியேதேடி ாரார்
அங்கேயுங்காணுமல் அப்பாலேபோகலுற்ருர்
சயிந்தவரிஷிவனத்தில் தாமெங்குந்தேடினர்கள்
அங்கேயுங்காணுமல் அப்புறந்தேடிவாரார்
காமதேனுபர்வதத்திற் கண்டார்கள்பஞ்சவரை
ஐவரையுங்கண்டவுடன் அங்கேபயந்தெளிந்தார்
பஞ்சவர்களைவரையும் பார்த்துதிரும்பினர்கள்
காவலர்களைவரையுங் கண்டுதிரும்பினர்கள்

துரியோதிரனனுப்பிய தூதுவர்கள் காமதேனு
வனத்தில் பஞ்சவரைக்கண்டு துரியோ
தனனுக்குச் சொல்லல்.

கண்டல்லோ தூதுவர்கள் கடுகிவழிநடந்தார்
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
காடுவனங்களுமே கரியமலைதான்தாண்டி
ஆனந்தமாகவே அத்திபுரத்தில்வந்தார்

திரியோதிரனிருக்கும் சிங்காதனத்தருகே
மகாராசன்முன்பாக வந்துபணிந்தார்கள்
வந்துபணிந்துமல்லோ மன்னருக்கேதுரைப்பார்
திரியோதிரனுக்கு சேதிகளைச்சொல்லலுற்றார்
ஐவரைத்தேடியே ஆரணியம்போனோமே
மாண்டார்களென்றீரே வனத்திலேகண்டோமே
காமதேனுபர்வதத்திற் கண்டுவந்தோம்பஞ்சவரை
அந்தவனந்தனிலே ஐவரிருக்கிறார்கள்
பார்த்துபயந்துவந்தோம் பஞ்சவர்களைவரையும்
கண்டுபயந்துவந்தோம் காவலர்களைவரையும்
என்றுமொழிந்தார்கள் ஏகிவந்ததூதுவர்கள்
தூதுவர்கள்சொன்னதெல்லாம் திரியோதிரன்கேட்டு
துள்ளிமனங்கொதித்து சொல்லுவானொருவார்த்தை

துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்குப்போக
சகுனியுடன் ஆலோசனைப் பண்ணுகிறது.

என்றவுரைகேட்டு எரிநாகங்கொண்டவனும்
சபைகள்நிறைந்திருக்க சர்ப்பக்கொடியோனுரைப்பான்
ஐவர்வனவாசம்போய் ஐந்தாறுவருஷமுண்டு
வில்வித்தைஅண்மைகளை மெத்தமறந்திருப்பார்
ஆனைகளுஞ்சேனையும் அண்டவொண்ணாப்படையுமில்லை
அக்ரோணிசேனையுடன் ஐவர்மேல்படையெடுத்தால்
ஐவரைக்கொன்றிடலா மதம்பண்ணிப்போட்டிடலாம்
இதுவேசமயங்காண் இராசரைக்கொல்லுகைக்கு
அம்மான்சகுனியேநீ ஆலோசனைசொல்லுமென்றான்

சகுனி துரியோதிரனை பஞ்சவர்கள்மேல் சண்டைக்கு
போகச் சொல்லுகிறது.

அப்போசகுனியும் அங்கேயெடுத்துரைப்பான்
கொல்லைக்குப்பல்லியவன் குடிக்குச்சகுனியவன்
இதுசமயமிதுசமயம் இவன்குடியைக்கெடுக்கவென்று
மருமகனுக்காக வார்த்தைகளேதுசொல்வான்

மெய்வார்த்தைசொன்னீர்காண் விஷநாகங்கொண்டவா
ஐவர்பிழைத்துயினி ஆரணியம்விட்டுவந்தால்
தப்பிப்பிழைத்துவந்தால் தர்மர்பஞ்சபாண்டவர்கள்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுகேட்பாரே
இப்போபடையெடுத்து இராசரைக்கொன்றிடலாம்
நல்லசமயங்காண் நமக்குக்கிடைத்ததென்ன
தென்னமுடிவேந்தன் திரியோதிரப்பெருமான்
மாமனுரைகேட்டு மகாராசனேதுரைப்பான்

திரியோதிரன் சண்டைக்குப்போக சேனைகளைத்
திடப்படுத்துகிறது.

ஆர்காணும்ராசர்களே அருகிருக்கும்மந்திரிகளே
ஐந்துகுருக்களுடன் ஆயிரஞ்சேவகரும்
பலபலராணுவமும் பத்துலக்ஷம்சேவகரும்
நாலானசேனைகளும் நடப்பார்கள்தாதியரும்
அத்தண்டசேனைகளும் அடங்கலும்பயணமென்றார்

திரியோதிரன் பஞ்சவர்களுடன் சண்டை
பண்ண வருகிறது.

அப்போதிரியோதிரன் அவனுடையசேனைகளும்
பயணம்பயணமென்று பயணபேரியடியுமென்றான்
இன்றுவெளிக்கூடாரம் இயலுடனேபோடுமென்றார்
நாட்டுமென்றார்சண்டாவை நகாரையடியுமென்றார்
அங்கேநட்டான்சண்டாவை யடியுமென்றார்பேரிகை
அடிபடுதுராயபேரி அண்டங்கிடுகிடென்ன
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரெணங்கள்ரெணங்களென்று ரெணபேரியடிபடுது
ஆனையின்மேல்பேரிகையும் அசுவத்தின்மேல்டங்காவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஒருகோடிமுரசுகளும்
தாளமொருமத்தளமும் தவில்முரசுவீராணம்
பதினெட்டுவாத்தியமும் பலதிசையுந்தான்முழங்க
அண்டபிண்டந்தானதிர அடிபடுதுமேளவகை

முக்காததூரமட்டும் முரசுமுழங்கிவர
நாற்காததூரமட்டும் நாகசின்னமூதிவர
ஐங்காததூரமட்டும் அடிபடுதுபேரிகையும்
ஆனையின்மேல்நகபத்து குதிரையின்மேல்டங்காவும்
கானலுக்கெடுத்தார்கள் கருப்புநல்லகூடாரம்
வெயிலுக்கெடுத்தார்கள் வெள்ளை நல்லகூடாரம்
மழைகளுக்கெடுத்தார்கள் வர்னவெள்ளைக்கூடாரம
பனிகளுக்கெடுத்தார்கள் பட்டுநல்லகூடாரம்
காற்றுக்கெடுத்தார்கள் கருப்புநல்லகூடாரம்
குதிரையொருகோடி கொக்கரித்துவருகுதங்கே
யானையுஞ்சேனைகளும் அண்டவொண்ணுரா ணுவமும்
அமரதருஞ்சமரதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுசோனகரும்
வேதியருமாதியரும் வில்வேந்தராசர்களும்
தொழுவார்மலையாளர் சோனகரும்ஒட்டியரும்
பட்டாவுஞ்சூரியரும் பாரியவில்சமுதாடு
நேரிசமும்பெரியசத்தி நிகரானபாங்குகளும்
அதிருமிருப்புலக்கை ஆயுதவரிசையுடன்
ஈட்டிகத்திவேலாயுதம் எடுத்தார்கள்சூலாயுதம்
அத்தண்டராணுவமும் அல்லவரும்பயணமென்றூர்
துரோணரும்அசுவத்தாமா சொல்லரியவீரர்களும்
கிருபன்கிருபாசாரி கீர்த்திபெற்றகர்னனுமே
சாமத்துரோகி சகுனியவன்கூட
மாமாசகுனியும் மைத்துனன்தேத்தரசன்
தங்கைமணவாளன் தறுதலைப்பொட்டிமகன்
அக்காள்மணவாளன் அறுதலியாள்பெற்றபிள்ளை
காந்தாரிபிள்ளைகளும் கவுரவர்சேனைகளும்
குருடன்பெற்றபிள்ளைகளும் கோடியரசர்களும்
ஐவரைக்கொல்லவென்று அநேகம்பேர்பிரயாணமானூர்
செந்துளெழும்புகுது தெய்வலோகங்கப்புகுது

கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
கொடிகள்பறக்குது குவலயமெட்டுகுது
முடிகள்திருகுது மூன்றுலோகந்தத்தளிக்க
அச்சுகிறுகிறென்ன ஆனைநெடுந்தேரசைய
வண்டில்கிரிச்சிகளும் மதயானை கோஷ்டமிட
குதிரைகனைத்துவிழக் கோடிமன்னர்சத்தமிட
சந்தையிரச்சலது சமுத்திரக்கோஷ்டமுடன்
செல்லும்ஜனங்கள்தொகை சொல்லமுடியாது
வாரஜனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
பஞ்சவரைக்கொல்லவென்று பாதகனும்வாரானே
ஐவரைக்கொல்லவென்று அரும்பாவிவாரானே
அஸ்தினபுரந்தாண்டி அப்புறம்வருகையிலே

துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்கு வருகிற போது துரோணரைச் சாஸ்திரம் பார்க்கச்சொன்னது.

தென்னமுடிவேந்தன் திரியோதிரன்பாவி
துரோணரைத்தானழைத்துச் சொல்வான் திரியோதிரன்
பஞ்சவரைக்கொல்லவென்று பாரவனம்போறோமே
வாருந்துரோணரே வழிநிமித்தம்பாருமென்றான்
ஐவரைக்கொல்லவென்று ஆரணியம்போறோமே
என்னசகுனங்கள் இனிநிமித்தங்காணுகுது
சகுனத்தைப்பாருமென்றான் தாமமுடியானும்

துரியன் சொற்படி துரோணர் சகுனம் பார்க்கிறது.

தென்னமுடிவேந்தன் துரியோதிரன்சொற்படியே
அரசனுரைப்படிக்கு ஆசாரியானவரும்
தாமமுடியானுக்குச் சகுனங்கள்பார்க்கையிலே
என்னசகுனங்கள் எதிராகக்காணுகுது
பொல்லாச்சகுனங்கள் பொருந்துதுமன்னனுக்கு
வாயசமிடமாச்சு வலியன்வலமாச்சு
நரையாணிடமாச்சு நரிகள்குறுக்காச்சு
பாம்புகுறுக்காச்சு பார்ப்பானெதிரானான்

சாரைகுறுக்காச்சு சந்திரர்மேல்பல்லிசொல்லும்
வேடரெதிர்வருவார் வில்லியரெதிரானூர்
வெட்டிப்பிடியுமென்று வேடரெதிர்வாரார்கள்
குத்திப்பிடியுமென்று கோட்டானுமோலமிடும்
பட்டப்பகலிலே பகலாந்தைசீறுகுது
நெருப்பெடுத்துக்கூன்கிழவி நின்றிழவுதான்கொடுத்தாள்

துரோணுசாரியர் திரியோதிரனுக்குச் சகுனங்கள்
நல்லதல்லவென்று சொல்ல துரியன் அவர்
சொல்லை தடுத்து வருகிறது.

அரியோதிரனுக்குத் துரோணரவருரைப்பார்
அப்பாதிரியோதிரா அரசர்சிகாமணியே
எந்தனுடவார்த்தைதனை இராஜாவேநீர்கேளும்
ஆகாதசகுனங்கள் ஆகுதேயிப்பொழுது
பொல்லாச்சகுனங்கள் பொருந்துதேயென்னசெய்வோம்
இன்றொருநாள்போக்கி இனியொருநாள்நாம்வரலாம்
சண்டைக்குப்போகவேண்டாம் வாருமென்றழைக்கையி
தென்னமுடிவேந்தன் திரியோதிராஜன் [லே
அவ்வார்த்தைதான்கேட்டு அரசுமன்னனேதுசொல்வா
சகுனத்தால்பழுதுமுண்டோ சதிரானராஜர்களே [ன்
பொல்லாச்சகுனமென்று போகாமல்நிற்பார்களோ
ஐவருமல்லாமல் அடப்பக்காரபையனில்லை
'பஞ்சவருமல்லாமல் பலவகையோ ொருவரில்லை
இந்தச்சகுனத்தால் ஏதொருகுற்றமில்லை
நடவும்நடவுமென்று நடைபேரியடியுமென்றான்
வருகுதுபாளையங்கள் மண்ணும்விண்ணுங்கொள்ளாமல்
செந்தூளெழும்புகுது சூரியனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பிலேயிருக்கும்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனந்தான்தாண்டி

செந்நாய்புலிகரடி சேரும்வனந்தான்தாண்டி
எல்லையதுதூரம் முல்லைவனந்தான்தாண்டி
சூரியன்வனந்தனிலே துரைகளெல்லாஞ்சேர்ந்தார்கள்
அங்கேநட்டான்சண்டாவை அடியுமென்றான்பேரிகை
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றநாள் [யை
மற்றநாட்காலையிலே வாறார்கள் துரைகளெல்லாம்
ராமரிஷிவனத்தில் நடந்தார்துரைகளெல்லாம்
சண்டாவைநாட்டுமென்றான் சல்லரியடியுமென்றான்
அடித்தார்கள்பேரிகையை அடிவானத்திடிபோல
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றநாள்
மற்றநாட்காலையிலே வருகுதுபாளையங்கள்
காளமகாரிஷிவனத்தில் கடுகவந்துசேர்ந்தார்கள்
ரணபேரியறையுமென்றான் நல்லசின்னம்ஊதுமென்றான்
அரசன்தன்சொற்படியே அறைந்தார்கள்பேரிகையை
ஊதினார்சின்னத்தொனி உலகேழுந்தானதிர
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றநாள்
மற்றநாட்காலையிலே மன்னர்பயணமிட்டார்
காமதேனுபர்வதத்திற் கடுகிவருகையிலே
ஐவரைக்கொல்லவென்று அரும்பாவிவருகையிலே
பஞ்சவரைக்கொல்லவென்று படுபாவிவருகையிலே

திரியோதிரன் ஐவரையுங் கொல்ல வருகிறதை
எம்பெருமாளறிந்து வந்தவர்க்கெல்லாந்
தாகமுண்டாக்கினது.

ஐவருக்கும்வந்தவிதி ஆயருந்தாமறிந்து
வகைமோசம்வந்துதே காவலர்கள்பஞ்சவர்க்கு
மோசங்கள்வந்து முடிந்ததுமன்னவர்க்கு
பாவிகெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
தோஷிகெடுத்தானே தொண்டர்களைக்கொல்லவென்று
எந்நாளும்பகையாளி ஏற்பட்டான்பஞ்சவர்க்கு
எந்தவிதத்திலுமே இறக்கவகைபண்ணுகிறான்
அசதியாய்நாமிருந்தால் ஐவரிறந்திடுவார்

மறதியுடனிருந்தால் மாண்டிடுவார்பஞ்சவர்கள்
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகுதே
தோளில்செபமாலை தொண்டழிந்துபோகுதே
கையில்செபமாலை கனங்குலைந்துபோகுதே
என்னஉபாயமது செய்கிறாரெம்பெருமாள்
வருகிறராசருக்கும் மாணாகங்கொண்டார்க்கும்
தண்ணீர்கவனங்கள் தாகவிடாயுண்டுபண்ணார்
தண்ணீர்கவனங்கள் தாகவிடாயானார்கள்
அத்தண்டராசருக்கும் அடிநாக்குலருகுது
நாவுவறட்டுகுது நடுநாக்குலருகுது
அவ்வனத்தில்தீர்த்தங்கள் அள்ளியுண்ணகிடையாது
மாயர்பெருமாளும் மலைராமரேதுசெய்தார்
தேவேந்திரனுடைய சுரபியென்னுங்காமதேனு
அப்பசுக்கள்தீர்த்தமுண்ணும் அக்குளமொன்றொழிய
தீர்த்தங்களில்லாமற் செய்துவிட்டாரப்போது
அந்தஜனங்களுக்கும் அனேகம்விடாயாச்சுது
தண்ணீர்களையாகி தவிக்குதுபாளையங்கள்
காதையடைத்துக் களைத்தார் துரைகளெல்லாம்
தூதுவரைத்தானழைத்து திரியோதிரனுரைப்பான்
இந்தவனத்திலே எங்கும்நதியிலையோ
எங்குங்குளமிலையோ யிறங்கியேதீர்த்தமுண்ண
தேடியேபாருமென்று செப்பியனுப்பினான்
அப்படியேநல்லதென்று அந்தவனங்களெல்லாம்
தேடப்புறப்பட்டார்கள் திரியோதிரன்தூதுவர்கள்
அந்தவனங்களெல்லாம் ஆராய்ந்துபார்த்தார்கள்
காமதேனுதன்குளத்தைக் கண்டார்கள்தீர்த்தமுண்ண
ஓட்டம்நடையுமாய் ஓடிவந்தார்தூதுவர்கள்
திரியோதிரனார்க்குச் சேதியுரைத்தார்கள்
அகலமுள்ளதாயிருக்கும் அலங்காரபொய்கைகண்டோம்
வாருங்களென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டார்

திரியோதிரன் காமதேனுக்குளத்தில் தண்ணீர்
குடிக்க சேனையுந் தானும் வருகிறது.

தென்னமுடிவேந்தன் திரியோதிரன்கேட்டு
நல்லதுவாரோமென்று நடந்தார்கள்சேனையெல்லாம்
வருகிறவேளையிலே வானுலகயிடையரெல்லாம்

தெய்வலோகத்து இடையர் காமதேனு பசுக்களுக்கு
அந்தக் குளத்தில் தண்ணீர்காட்ட வருகிறது.

அந்தச்சமயத்தில் அந்தரத்துயிடையரெல்லாம்
வானுலகயிடையரெல்லாம் மாடுகளைத்தான் திருப்பி
காட்டிலேமேய்கிற காமதேனு அத்தனையும்
மேய்த்துத்துரத்தியே மிரட்டிக்குளத்தில்விட்டார்
குளத்திலேநீர்குடித்துக் குளமெல்லாஞ்சேருக்கி
தண்ணீர்கலங்கியே தரையில்மண்மேல்கிளம்பும்
குளங்கள்கலக்கியல்லோ குளத்தின்மேல்மண்கிளம்பும்

பசுக்கள் குளத்தைக் கலக்கினதை தூதர் சொல்லத்
திரியோதிரன் கேட்டுக் கோபித்து இடையர்
களைக் கொன்று பசுக்களை மடக்கச்
சொல்லுகிறது.

அந்தச்சமயத்திலே அரவக்கொடியோன் தூதர்
தூதர்கள்தான்பார்த்து சொல்லுவார்ராஜருக்கு
ஐயையோராஜாவே ஆரோதெரியாது
ஆயிரமிடையர்கள் ஆவுகளைக்கொண்டுவந்து
விட்டுமே அக்குளத்தை மிக்கச்சேருக்கிவிட்டார்
தண்ணீர்குடிக்கவேதான் உதவாதுயென்றார்கள்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்ராஜனுமே
ஆயிரமிடையரையும் அங்கேபலிவெட்டிவிட்டு
அத்தண்டபசுவையெல்லாம் அத்திபுரமோட்டுமென்றார்
இராஜனுரைகேட்டு நடந்தாரே தூதுவர்கள்
மாடுகளத்தனையும் மடக்கித்திருப்பினார்கள்
எதிர்த்தயிடையர்தனை யாவரையுங்கொன்றுவிட்டார்
சண்டைபண்ணவந்தவரை சதைத்தங்கேபோட்டார்கள்

காமதேனு பசுக்களை மேய்க்கவந்த இடையர்களைத்
திரியோதிரன் தூதர் கொன்றவர்கள்போக
மற்ற இடையர்கள் போய் தேவேந்திர
னுடன் சொல்லுகின்றது.

தப்பிப்பிழைத்தவர்கள் தான்விழுந்தோடலுற்றார்
அமராபதிதேடி அவ்விடையர்ஓடலுற்றார்
தேவேந்திரன்முன்னே தெண்டனிட்டாரிடையரவர்
வந்துபணிந்தவர்கள் வார்த்தைகளேதுசொல்வார்
காமதேனுபர்வதத்திற் காளைகளைமேய்த்திருந்தோம்
காட்டிலேமேய்த்தோட்டி கடுகிக்குளத்தில்விட்டோம்
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளமன்னன்
சேனைபரிவாரந் திரளுடன்கூட்டிவந்தான் [ன்
மாடுகளைமடக்கிக்கொண்டான் வல்லுயிரைவாங்கிவிட்டா
அல்லவரைக்கொன்று னடியார்கள்தப்பிவந்தோம்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வாரிந்திரும்
உருட்டினன்கண்ணை உருமினன்பெரும்புலிபோல்
கண்கள்சிவக்குதே காந்தாளமாகுதே
மீசைதுடிக்குதே மின்கோபமாகுதே
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுதே
நீலவிழிகள்ரெண்டு நெருப்புத்தணலாய்விடுது
என்றுமில்லாக்கோபம் பிறந்ததுயிந்திரற்கு

தேவேந்திரன் தன் மகனைச் சண்டைக்குப் போகச்
சொல்ல சித்ராங்கதன் மாதலியை தேர்
கொண்டுவரச் சொன்னது.

என்மகனேசித்ராங்கா இயலானரத்தினமே
மாட்டைமடக்கினதோர் மன்னவராஜானை
பிடித்தபிடியோடே பின்கட்டாய்கட்டிவாராய்
ஆனைசேனைபரிவாரம் அடங்கலுங்கொன்றழித்து
பிடித்தபிடியோடே கொண்டுவாராய்பொட்டெனவே
கைப்பிடியாய்க்கொண்டு கண்ணெதிரேவந்துநில்லு
இல்லாதேயாமானல் எதிர்வந்துநில்லாதே

உத்தாரம்பண்ணுரே உம்பர்பிராணிந்திரும்
தேவேந்திரன்மகனுர் சித்திராங்கதராஜன்
அவ்வார்த்தைதான்கேட்டு அதிகமாய்ச்சிந்தித்து
மாதலியைத்தானழைத்து மச்சுரதமெங்கேயென்ருர்
தேரையலங்கரித்துச் சீக்கிரம்நீகொண்டுவா
என்றவுரைகேட்டு எழுந்தானேமாதலியும்
ஆறுவண்டி நூறுசட்டம் அதற்கேற்றகுத்துக்காலும்
குத்துக்கால்சொப்பனிட்டுக் கொடுங்கைத்திரைவளைத்து
கொடுங்கைத்திரைவளைத்து கும்பகலசம்வைத்து
கும்பகலசத்தின்மேற் குடைகளைகட்டினுன்
அங்கெனவேதேர்சீலை அலங்காரம்பண்ணினுனே
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்சொப்பனிட்டான்
வாசியைகுளிப்பாட்டி வாயிற்கடிவாளமிட்டான்
நாலுகால்வண்டயமும் நடுக்கழுத்திற்கொலுசுகளும்
முன்னுலேசுட்டிகளும் பின்னுலேகுச்சுகளும்
பக்கத்தில்அங்குபடி பதியவைத்தான்சேணகளை
முதுகிலேசீனிகளும் முன்னேகடிவாளம்
சந்திரசூரியபிறை தரித்தார்குதிரைக்கு
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்தெண்டனிட்டான்
சூரியன்மேல் சித்திரசேனன் சண்டைக்குப் போகிறது.
கடுகியெழுந்தானே கட்டழகன்சித்திரசேனன்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு தித்திப்பூச்சல்லடமாம்
பில்லைசமுதாடு பிகுவெடுத்தஒட்டியாணம்
கட்டியரைதனிலே காங்குகச்சைசுங்குவிட்டு
சந்த்ரகாந்திதட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
முத்திணுருமாலை முகத்தழகாய்கட்டினுன்
சிங்காணிவில்லெடுத்து சிறுநாரிபூட்டினுன்
அம்புருத்தூணியை அணிந்துகொண்டான்தன்முதுகில்

தேரைச்சுற்றிதெண்டனிட்டு சிவ்வெனவேஏறினன்
ஏறினபோதே யிபலானசாரதிதான்
துரகதம்வார்கைபிடித்து துரிதமுடன்சவாரிசெய்ய
வருகுதமச்சுரதம் வானுலகந்தானதிர
தேர்தனிலேசங்குநாதம் சித்ரசேனன்பண்ணினனே
சங்குநாதம்பண்ணினனே தான்திரும்பச்சுரபியெல்லாம்

### துரியோதிரன் சேனைகளைக் காமதேனு அதம் பண்ணினது.

அந்தச்சமயத்தில் அறிந்ததுகாமதேனு
சங்கத்தொனிகேட்டுத் தான்வருகுதுகாமதேனு
குதித்துக்கும்மாளமிட்டு வருகுதுகாமதேனு
வந்துவிழுந்தது வளம்பெரியபாளையத்தில்
குத்துதுகொம்பாலே குளம்பால்மிதிக்கிறது

### துரியோதிரனும் அவனுடைய சேனைகளும் சித்திர சேனனும் சண்டை பண்ணுகிறது.

அத்தண்டசேனைகளை அதம்பண்ணுங்காமதேனு
மாண்டஜனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
செத்தஜனங்களென்றால் செப்பமுடிபோகாது
அந்தச்சமயத்தில் வந்துவிட்டான்சித்ரசேனன்
வில்வளைத்துநாரிபூட்டி விட்டான்சரபாணம்
கைகண்டபாணமெல்லாங் கடுகெனவேவிட்டுவிட்டான்
கூச்சலெழும்புகுது கொப்பெனவேபாளையத்தில்
கண்டான்திரியோதிரன் கட்டழகனேதுசொல்வான்
எவனோதெரியாது இங்குவந்தான்சண்டைசெய்ய
இத்தண்டதுரைகளெல்லாம் எல்லாருமுஸ்தீப்பாய்
ஆயுதங்கள்தானெடுத்து அமரதுசெய்யுமென்றான்
எண்ணான்குஆயுதத்தை எடுத்துஅரையிற்கட்டி
சண்டைசண்டையென்றுசொல்லிசண்டைநகாரடித்தார்
ரணங்கள்ரணங்களென்று ரணபேரிகைதானடித்தார்
எட்டினார்சண்டை எழும்புதுசமரப்போ

வில்வளைத்துநாரிபூட்டி விட்டாரிவர்கணையை
ஒருவர்க்கொருவர் ஒழிவில்லாப்பாணம்விட்டார்
அம்புவரும்வேகமதை ஆர்க்கமுடியாது
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடியாது
ஒருகோடிபாணங்கள் ஒருமித்துவிட்டுவிட்டார்
சூரியன்விடும்பாணம் சொல்லமுடியாது
கர்ணன்விடும்பாணம் கணக்குமிதங்களில்லை
துரோணர்விடும்பாணம் சொல்லமுடியாது
கோபமாய்கிருபாச்சாரி கோடானபாணம்விட்டார்
வீஷ்டுமாசாரியரும் வேணபாணங்கள்விட்டார்
அசுவத்தாமாவும் அநேகநெடும்பாணம்விட்டார்
சகுனிசயிந்தவரும் சரமேற்சரம்பொழிந்தார்
அவரவர்கள்விடும்பாணம் அபரிமிதமில்லை
ஒருவர்க்கொருவர் ஒருகோடிபாணம்விட்டார்
வாயுவாஸ்திரங்களும் வருணாஸ்திரங்களும்
சந்திரஅஸ்திரமும் இந்திரஅஸ்திரமும்
சங்கஞ்சங்கம்போலே சரங்கள்பொழிந்தார்கள்
கண்டானேசித்ரசேனன் கண்கொள்ளாக்கோபமுடன்
வில்வளைத்துநாரிபூட்டி விட்டான்நெடும்பாணம்
தன்மேல்விடும்பாணமெல்லாம் தாக்காமலேவிலக்க
பின்னையுங்கோடிசரம் பிரளயமாய்விட்டுவிட்டான்
அத்தனைபேர்விட்டசரமத்தனையுங்கொள்ளைகொண்டான்
அங்கரசர்தேருடைந்து அவரவர்கள்வில்பறித்து
ஆனையின்மேலிருந்ததுரை அலறியேமண்ணைக்கவ்வ
குதிரையின்மேலிருந்ததுரைகொக்கரித்துமண்ணைக்கவ்வ
ஒட்டையின்மேலிருந்ததுரை ஓலமிட்டுக்கீழேவிழ
தென்னங்குலைபோலே திருகினான்வேணதலை
கருப்பங்கருணையைப்போல் கண்டித்தான்வேணதலை
ஆலைக்கரும்புபோலே அறுத்திட்டான்வேணதலை
பேய்க்காலெறும்புபோல் பிசைந்தெடுத்தான்பாளையத்
பனைநுங்குபோலாக பருத்தவிழிபிதுங்க [தை

கண்டச்சதையறிந்து கழுகுக்கிரைபோடுகிறான்
ஈரல்சரியுது இரைச்சிவெளியாகுது
குடல்கள்சரியுது குறிப்பாகஅப்பொழுது
ரெப்பைவிலாயெலும்பு நெறநெறென்றுகால்முரியும்
பட்டஜனங்களென்றால் மட்டுமிதங்களில்லே
செத்தஜனங்களென்றால் செப்பமுடியாது
சித்ரசேனன்சண்டையிலே ஜெனங்களுமாளுகுது
அபயமபயமென்று அலேயுதுபாளேயங்கள்
தண்ணீர்தண்ணீரென்றுசொல்லி தவிக்குதுபாளேயங்கள்
ரத்தாறுவோடுகுது ரணமுண்டங்கொக்கரித்து
இந்தவிதம்பாளேயங்க ளேடாகூடமாச்சுது
துரியோதிரராஜன் தேரிழந்துநின்றுவிட்டான்

சித்ரசேனன் திரியோதிரனேக் கட்டி இழுத்துக்கொண்டு
போகிறபோது துரியோதிரன் முறையிடுவது.

அங்கந்துளேயாக்கி அதிரடித்தான்சித்ரசேனன்
அந்தரவீதியிலே அவனேப்பிடித்துக்கட்டி
பிடித்தபிடியோடே பின்கட்டாய்க்கட்டினான்
தேர்குத்துக்காலோடே துரியனேப்பிடித்துக்கட்டி
ஊதினான்சங்குநாதம் உம்பர்பிரான்றன்மகனும்
துரியன்பிடிபடவே திகிலெடுத்துராசரெல்லாம்
ஒருவருடனொருவர் சொல்லாமலோடலுற்றார்
திரியனேக்கட்டிக்கொண்டு தெய்வலோகம்போறாராம்
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனும்
எண்ணுதுமெண்ணுகிறான் எண்ணிப்புலம்புகிறான்
ஆரோதெரியாது ஆகாசம்கொண்டுபோறான்
எவனோதெரியாது எமலோகங்கொண்டுபோறான்
ஐவர்பஞ்சபாண்டவரை அனர்த்தம்பண்ணவந்தேனே
என்னேயொருவர் இழுத்துப்போறாரென்செய்வேன்
கூடவந்தராஜாக்கள் கோடானகோடியுண்டு
மட்டில்லாராஜாக்கள் வந்தார்கள்வீரியர்கள்

அத்தண்டராஜாக்கள் அல்லவருங்கையைவிட்டார்
கட்டியிழுத்துக் கைலாசம்கொண்டுபோருர்
ஆர்வந்துகாப்பார்கள் ஆபத்துவேளையிலே
எவர்வந்துகாப்பார்கள் என்சீவன்பிழைக்கயிப்போ
தருமரைத்தானினைந்தால் தயவுவைத்துக்காத்திடுவார்
இந்தவனத்திலே யிருக்கிருரென்ருர்கள்
கூவிப்புலம்பினுல் குரல்கேட்குந்தருமருக்கு
தம்பியரைத்தானனுப்பி தயவுவைத்துக்காத்திடுவார்
ஐவருமிப்போது அன்புவைத்துக்காத்தாலே
ஐவரைக்கொல்லுகைக்கு ஆலோசனைதேடிடுவோம்
தப்பிப்பிழைத்தோமானுல் தருமரைக்கொன்றிடுவோம்
என்றவன்யோசனையாய் என்னசொல்லிப்புலம்புகிருன்
கூவிப்புலம்புகிருன் கொற்றவன்திரியோதிரன்
அண்ணுவேயண்ணுவே அழகானதருமலிங்கம்
ஐவர்பஞ்சபாண்டவரே அண்ணுவேநீர்கேளும்
ஐவரைப்பார்க்கவே அதிகப்பிரியமுமாய்
பார்க்கும்படியாக வந்தேன்காண்பஞ்சவரே
காணும்படியாக வந்தேன்காண்காவலரே
எவரோதெரியாது இழுத்துப்போருன்அந்தரமாய்
ஆரோதெரியாது அழைத்துப்போருன்அந்தரமாய்
கூடப்பிறக்கிலேயோ கூட்டுப்பாலுண்கிலேயோ
தாயாரும்வேருனுல் தகப்பனுரொன்றலவோ
மனதுமிரங்கலையோ மகாராஜர்தருமலிங்கம்
தம்பிதமையன்மேல் தயவிலேயோவுங்களுக்கு
அநீதமாய்க்கொண்டுபோருன் ஆரோதெரியாது
என்-ஆவியைக்காத்தாலே அனேகங்கோடிபுண்ணியங்கா
சாயாம்புமேனியனே தயவில்லேயோஎன்மேலே [ண்
என்றுபுலம்பியே இடிபோலேகூச்சலிட்டான்
கூவுங்குரல்கேட்கும் கொப்பெனவேதருமருக்கு
உற்றுற்றுக்கேட்டாராம் உரகதன்வார்த்தையெல்லாம்
தருமர்மனங்கொள்ளாமல் தம்பியரைத்தானழைத்து

திரியோதிரன் முறையிடுவதை தருமர் கேட்டு
அர்ச்சுனனைப்போய் திரியோதிரனை
அழைத்துவரச் சொன்னது.

ஆணுலழகுமன்னு அருச்சுனரே நீர்கேளும்
பெரியதகப்பன்பெற்ற பேரான அண்ணன்தம்பி
துரியோதிரனம்மைத் தேடியேபார்க்கவந்தான்
ஆரோஒருவன் ஆகாயங்கொண்டுபோருன்
எவனோதெரியாது இழுத்துப்போருன் அந்தரமாய்
பார்த்துமிருந்தோமானல் பாதகமெத்தவரும்
மெத்தவருந்துகிருன் வில்வேந்தனிப்போது
நம்மைவருந்துகிருன் ரக்ஷிப்பாரென்றுசொல்லி
ஆபத்துவேளையிலே ஆதரித்தால்புண்ணியங்காண்
கடுகவிடுவித்துக் கையோடேகூட்டிவாருய்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்வாள்விஜயன்
ஊரோடிருந்தநம்மை உரகதன்தானழைத்து
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
எத்தனைவஞ்சனைகள் இடறுகள்செய்தான்காண்
நாடுபறித்தானே ராச்சியத்தைக்கொள்ளைகொண்டான்
ஐவரையும்விலங்கிட்டு அறையிலடைத்தானே
அரண்மனைப்பெண்களையும் அம்பலமேற்றிவைத்தான்
அண்ணன்பெருந்தேவி யாடையுரியவைத்தான்
பாரவனவாசம் பரதேசமோட்டினன்
இந்தப்பரதேசம் இனித்திரியுமென்றனே
சாமத்துரோகனுக்கு தயவுநினைப்பாரோ
பொல்லாதபாவிக்குப் புண்ணியந்தேடுவாரோ
தென்னமுடிவேந்தன் திரியோதிரராஜன்
எத்தனைநாளிருந்தாலும் இடரல்லோதேடுகிருன்
கொல்லநினைக்கிருன் கொடும்பாவிதிரியோதிரன்
இன்றோடொழிந்தது எமலோகஞ்சேரட்டும்
செத்தார்பழுதில்லை சீரானஅண்ணாவே
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்தருமராயர்

அவரவர்செய்தவினை அவரேயனுபவிப்பார்
நன்மையைச்செய்தவர்கள் ராச்சியத்தையாண்டிடுவார்
பொல்லாங்குசெய்தவர்கள் போவார்பெருநரகில்
நன்மையைச்செய்தவர்க்கு நட்சத்திரங்காணும்
தீமையைச்செய்தவர்க்குத் தெரியாதிருளாகும்
வஞ்சனைகள்வேண்டாமே மாயன்துணையாவார்
இக்கணமேநீயேகி யிட்டுவந்துசேருமென்றார்
என்வார்த்தைதள்ளாதே என்றனை தம்பியரே

அர்ச்சுனன் தரியனை அழைக்கப்போவது.

என்றவுரைகேட்டு எழுந்தானர்ச்சுனனும்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
சந்திரகாந்திதட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஈட்டிசமுதாடு எடுத்தான்பெரியகத்தி
கத்திசொருகியல்லோ கடுகவெழுந்தானே
சிங்காணிவில்லெடுத்து தேர்விஜயன்பயணமானான்
வாரானே அர்ச்சுனனும் நாழிகைக்குகாதவழி
நடந்தானே அர்ச்சுனனும் நாழிகைக்குகாதவழி

அர்ச்சுனனும் சித்திரசேனனும் சண்டை செய்தல்.

அப்போதர்ச்சுனனும் அதிகவேகமாகவல்லோ
அக்கினிபாணத்தை அதிவிரைவாய்த்தானெடுத்து
வரிவில்வளைத்தெடுத்து மார்புரளவாங்கினான்
அக்கினிபாணமது அதிரவேபோய்தடுக்கும்
கண்டானேசித்ரசேனன் கண்கொள்ளாக்கோபமுடன்
சீறியெழும்பியே சீக்கிரமாய்வந்தெதிர்த்தான்
சண்டைசண்டையென்று சமர்ப்போர்முழங்குது
ஒருவர்க்கொருவர் உயுத்தங்களாகுது

ஒருவர்விடுஞ்சரங்கள் ஒருவர்விலக்குவாரும்
இருவர்சமானமாக யிசைந்துமேசண்டைபண்ணூர்
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலேபந்தலிட்டார்
சூரியனைத்தான்மறைக்கும் சூரர்விடும்பாணமெல்லாம்
நான்குகடிகைமட்டும் நல்லசண்டைபண்ணூர்கள்
அர்ச்சுனன்சண்டைகளை அண்டர்பிரான்மகனறிந்து

அர்ச்சுனனும் சித்திரசேனனும் சமாதானமாகி
துரியோதிரனை தர்மரண்டை
அழைத்துப்போகிறது.

என்னிலும் வல்லபிரான் என்றுமனதிலெண்ணி
இவன்-யாரோதெரியாது ஆண்மையுள்ளசேவகன்காண்
வம்மிசத்தையறிந்து மறுத்தல்லோசண்டைசெய்வோம்
என்றல்லோசித்ரசேனன் ஏதுசொல்வானர்ச்சுனனை
ஆரடாதம்பிநீ ஆண்மையுள்ளசேவகனே
எவனடாதம்பிநீ எதிர்த்துசண்டைசெய்யவந்தாய்
ஊரேதுபேரேது உன்தகப்பன்வாரேது
எவருடையபுத்திரன்நீ எனக்கறியச்சொல்லுமென்றான்
இவ்வார்த்தைகேட்கவே ஏதுசொல்வானருச்சுனனும்
யுத்தகளந்தனிலே உறவின்முறைகேட்பாருலகில்
படுகளத்திலொப்பாரி கேட்பாரோபாருலகில்
நீ-ஆண்பிள்ளையானால் அமரதுசெய்யுமென்றார்
உன்தகப்பன்தன்பெயரும் ஊர்பெயருஞ்சொன்னாலே
நானுரைப்பேன்பிற்பாடு நவிலென்றான்வாள்விஜயன்
தேவேந்திரன்மகனும் சித்திரசேனன்தான்கேட்டு
உத்திரவுதான்கேட்டு வுச்சாகங்கொண்டவனும்
தேவர்க்கதிபதிதான் தேவேந்திரனென்தகப்பன்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்அர்க்சுனனும்
அண்ணனென்றறியாமல் அமரதுசெய்தேனே
வில்லைத்தரையில்வைத்து விஜயனுமோடிவந்து
சாஷ்டாங்கமாகவே சரணமென்றுதெண்டனிட்டான்

மூக்கால்வலம்வந்து மூவொருகால்தெண்டனிட்டான்
அண்ணுசரணமென்று அடிபணிந்தானர்ச்சுனனும்
தேவேந்திரன்மகனும் சித்ரசேனனேதுசொல்வான்
ஆர்வீட்டுப்பிள்ளை நீ அறியவுரையுமென்றார்
என்னையறியாயோ என்னுடைய அண்ணுவே
என்தாயார்குந்தியம்மாள் என்தகப்பன்தேவேந்திரன்
என்தகப்பன்தேவேந்திரன் என்பேரருச்சுனன்காண்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்சித்ரசேனன்
என்-தந்தைக்குநீபிறந்த தன்மையினுல்தம்பியரே
நான்விட்டபாணத்தால் தப்பியேநீர்பிழைத்தீர்
அல்லாதேயாமாகுல் அமரில்மடிந்திடுவீர்
தப்பிப்பிழைத்தீரே சாமியுடபுண்ணியத்தால்
என்றிவர்களோர்மனதா யிருவருறவாடி
ஒருவர்க்கொருவர் உறவாடிக்கொண்டார்கள்
எழில்விஜயனப்போது ஏதுசொல்வான்அண்ணனுக்கு
தென்னமுடிவேந்தன் துரியோதிரராஜன்
என்னசெய்தானென்று நீர் இட்டுப்போறீரண்ணுவே
அவன்செய்தகுற்றமெலாம் அண்ணுநீர்சொல்லுமென
இவ்வார்த்தைதான்கேட்டுஎன்னசொல்வான்சித்ரசேனன்
காட்டிலேமேய்ந்ததொரு காமதேனு அத்தனையும்
பாற்பசுக்கள்தன்னையிந்தப் பாவிமடக்கிக்கொண்டான்
ஆயிரமிடையரையும் அநீதமாய்க்கொன்றுவிட்டான்
அவ்வார்த்தைதான்கேட்டு அனுப்பினுரென்தகப்பன்
கைப்பிடியாய்க்கொண்டுவர கட்டளையுமிட்டார்காண்
அவர்சொன்னபடியினுலே அமரதுசெய்தேன்காண்
இவனுடையசேனைகளை எல்லாம்நான்கொன்றழித்து
விரைவாககைபிடியாய் விண்ணுலகங்கொண்டுபோறேன்
என்றவுரைகேட்டு என்னசொல்வான்அர்ச்சுனனும்
ஆனுல்கேள்அண்ணுவே அடியேனொருவார்த்தை
சாயாம்புமேனியரும் தருமரவரெங்களண்ணர்
என்னைவிடுவித்து இட்டுவாயென்றுசொன்னுர்

என்னையனுப்பினார் இயலான தர்மலிங்கம்
அழைத்துவரச்சொன்னாரே அண்ணனுமிப்பொழுதே
உன்முகத்தில்நான்விழிக்கேன் என்றுமேதர்மலிங்கம்
கூட்டியனுப்பினார் குறிப்பாகயெந்தனையும்
என்மேல்தயவுவைத்து இவனையனுப்புமென்றான்
தேவேந்திரன்மகனார் சித்ரசேனனேதுசொல்வான்
மாடுமடக்கியே வல்லுயிரைக்கொன்றவனை
கைப்பிடியாய்க்கொண்டுவரக் கடுகியனுப்பினார்
ஆகையாற்கொண்டுபோறே னர்ச்சுனாஎன்னசெய்வேன்
ஆனால்கேளண்ணாவே அடியேனொருவார்த்தை
அர்ச்சுனன்வந்து அழைத்துபோனானென்றுசொல்லும்
ஐவரென்றுசொன்னாலே அதிகமனமகிழ்வார்
அல்லாதேயாமானால் அழைத்துமேபோனாலே
என்வார்த்தைதள்ளிநீர் இட்டுக்கொண்டுபோனாலே
அண்ணாவேநாளைக்கு அமராபுரம்வருவேன்
தேவேந்திரபுரத்தைச் சிதறவேகொள்ளைகொள்வேன்
ஆடுகளை மாடுகளை அழகானஊருகளை
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிகளும்
அங்காடிவீதிகளும் அரண்மனைத்தெருவுகளும் [ன்
அத்தனையும்கொள்ளையிட்டு அதம்பண்ணிபோட்டிடுவே
என்வார்த்தைதான்கேட்டு இவனைவிடுவிடென்றான்
சித்ரசேனன்கேட்டுச் சிந்தைமகிழ்ந்தவரும்
சந்தோஷப்பட்டவரும் சர்ப்பக்கொடியோனை
கட்டவிழ்த்துவிட்டுவிடுங் காணென்றான்சித்ரசேனன்

சித்ரசேனன் தேவேந்திரனைக் காண்கிறது.

போய்வாறேனென்றலவோ புறப்பட்டான்தேரேறி
அமராபதிதேடி அடைவுடனேதானடந்தான்
தேவேந்திரனுக்கு சித்ரசேனன்தெண்டனிட்டான்
அர்ச்சுனன்தன்னுடைய அதிசயச்சேதிகேளும்
அரவக்கொடிவேந்தன் அகப்பட்டசேதிகளும்
இவ்விருவர்சேதிகளும் இயலாகத்தன்சேதி

தகப்பனுடனுரைக்கச் சந்தோஷமாகினர்
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனை
துரியோதிரனுரைத் தேர்விஜயன்கூட்டிவாரான்
அண்ணரருகாக அழைத்துவந்துவிட்டாராம்
அண்ணர்தருமருக்கு அடிபணிந்தான் துரியோதிரன்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
எமன்மகன்தருமராயன் எடுத்தணைத்தான் துரியனையும்
எங்கிருந்துவந்தீரப்பா எனக்கறியச்சொல்லுமென்றார்
அத்துவானகானகத்தில் ஆரணியம்வந்ததென்ன
அந்தரமாகவே ஆர்காணும்கொண்டுசென்றார்

துரியோதிரன் தருமருக்குத் தன் வரலாறு கூறுதல்.

துரியோதிரராஜன் சொல்லத்தொடங்கினன்
ஆசையாம்பாசமதா லண்ணாவைபார்க்கவந்தேன்
எத்தனை நாள்காடுறைந்தீர் இட்டுபோகவேணுமென்று
அஸ்தினபுரத்துக்கழைத்துக்கொண்டுபோவோமென்று
எண்ணாதுமெண்ணினன் இக்காடுதேடிவந்தேன்
என்னை - ஆரோதெரியாது அந்தரமாய்க்கட்டிபோனர்
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனன்தானுமங்கே அமர்செய்துயிட்டுவந்தான்
எத்தனை நாள்காடுறைவீர் இயலானராஜாவே
பாரவனவாசம் பரதேசந்திரிவானேன்
வேடரைப்போலாக வில்லியரைப்போலாக
பரதேசந்திரிவானேன் பட்டணத்தில்வாங்களென்றான்
அஸ்தினபுரத்தை ஆண்டிடுவீர்வாங்களென்றான்
இவ்வார்த்தைதான்கேட்டு எதுசொல்வார்தருமராயர்
ஆறுவருஷமாச்சு ஆரணியம்வந்து நாங்கள்
இன்னுஞ்சிலகாலம் இப்படியேதான் திரிந்து
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரிந்து
வந்தபிறகாக மனதுவைத்துஎன்மேலே
சொன்னபடிசீமை துரைத்தனந்தாருமென்றார்
வெற்றிமதயானை வீமாமதகரியே

வீமன் கனி பறித்துவர துரியோதிரன் புசித்து
தருமரிடத்தில் செலவுபெற்று அஸ்தினு
புரம் செல்லுகிறது.

அண்ணர்களாயாகி அதிகப்பசியானர்
காடெல்லாந்தான் திரிந்து கனிபறித்துவாருமென்றார்
வெற்றிமதயானை வீமனெழுந்திருந்து
அறுநெல்லிசிறுநெல்லி அழகானதர்மத்தையும்
காட்டுவிளாம்பழமும் கருநெல்லிப்பழங்களுடன்
வேலில்பழுத்திருக்கும் வெடித்தபலாப்பழமும்
மலைத்தேன்சுனைத்தேனும் மாங்கனியும்தேங்கனியும்
மட்டில்லாப்பழம்பறித்து மதவீமன்கொண்டுவந்தான்
தேக்கில்தான்பறித்து திறள்வீமன்கொண்டுவந்தான்
பறித்தகனிகளெல்லாம் பசியாறஉண்ணுமென்று
கைக்குச்சலங்கொடுத்துக் கட்டழகருண்ணுமென்றார்
ஆசனந்தான்போட்டு அமுதுபுசியுமென்றார்
விஷநாகங்கொண்டவனும் வேந்தனும்புசித்தான்
எண்ணுதுமெண்ணுகிறுன் எரிநாகங்கொண்டவனும்
இப்படிக்கொத்த இயலானபஞ்சவர்கள்
எப்படிக்குச்சாவார்கள் இக்கனியைத்தின்றவர்கள்
அஸ்தினுபுரத்திற்போய் ஆலோசனைபண்ணவேண்டும்
எப்படியும்பஞ்சவரை இக்காட்டிற்கொல்லவேண்டும்
என்றுமனதிலெண்ணி இருந்துகனிபொசித்தான்
பசியாறவுண்டானே பாதகன் துரியோதிரன்
சாயாம்புமன்னவனுர் தருமர்பெருமானும்
பின்னுஞ்சிலகனியை பெருமூட்டையாகக்கட்டி
அப்பா துரியோதனு அழகான இக்கனியை
அரண்மனைக்குகொண்டுபோம் அனைவரும்தான்புசிக்க
எடுத்துப்போமென்றுசொல்லி ஈந்தாரே அக்கனியை
வாங்கியே அக்கனியை மன்னவனும்தோளிலிட்டான்
ஐயாபோய்வாரேனென் றடிபணிந்தான் துரியனுமே

சாயாம்புமன்னவனார் தருமலிங்கமேதுசொல்வார்
காண்டீபா அருச்சுனரே கடுகியேயெழுந்திருந்து
அண்ணன் துரியன்முன் அக்கனியின்மூட்டைகொண்டு
காடுகடக்களவும் கைமூட்டைநீவாங்கி
அண்ணரைவழிகூட்டி அனுப்பிவாதம்பியென்றார்
தருமருரைகேட்டு தார்விஜயன்தானெழுந்து
கனிமூட்டைதோளில்வைத்து கடுகியேபின்னடந்தான்
திரியோதிரன்பின்னே நடந்தானேதேர்விஜயன்
காடுசெடியுங் கடியவனாந்திரமும்
ஆறுஞ்சுனையும் அவ்வனமுந்தான்கடந்து
காடுகடந்தபின்பு கைமூட்டைவாங்கிக்கொண்டு
தென்னமுடிவேந்தன் துரியோதிரனேதுசொல்வான்
தூரநில்லும்அர்ச்சுனரே தொல்லுலகில்வாராதே
கடக்கநில்லும்அர்ச்சுனரே காசினியில்வாராதே
காடுமிதித்தகாலால் என்நாடுமிதியாதே
அரைக்ஷணப்போதையிலே அறுத்தெறிவேனுன்தலையை
தருமர்பெருமையினால் தணித்துவிட்டேன்கெர்ப்பமதை
என்று துரியன்சொல்லி இசைந்துவழிநடந்தான்
அண்ணருகாக அர்ச்சுனன்வந்தழுதான்
அப்போ துரியோதிரன் அதிகவிரைவாக
காடுசெடியுங் கரியமலைகடந்து
அஸ்திணபுரத்துக்கு ஆணழகன்போயடுத்தான்
சிங்காதனமீதிற் சென்றானே துரியோதிரன்
ஆசாரியரைவரையும் ஆனந்தமகாராஜனையும்
மாமன்சகுனியையும் மைத்துனன்சயிந்தவனையும்
அத்தண்டபேரையும் அழைத்தான் துரியோதிரன்[ தான்
கொண்டுவந்தகாய்கனியைக் கொப்பெனமுன்னேவைத்
இக்கனியையுண் ணுமவ ரெப்படிகாண்மாண்டிடுவார்
தேவேந்திரனார்மகனார் சித்ரசேனனேனைப்பிடித்தார்
தேரிலேனைக்கட்டி தெய்வலோகங்கொண்டுசென்றார்
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்

அருச்சுனன்வந்து அமரதுசெய்தான்காண்
என்னைவிடுவித்து இட்டுவந்தானண்ணனிடம்
ஐவரையுங்கண்டேனே அநேகமானவார்த்தைகளை
உச்சிதமாகவேதான் ஒற்றுமையாய்வார்த்தைசொன்னேன்
இந்தக்கனிதான்புசிக்கும் எழிலானபஞ்சவர்கள் [ன்
எப்படிக்கிறந்திடுவார் இபலானபஞ்சவர்கள்
என்றிவர்கள்தான்பேசி யிருந்தார்சிலநாட்கள்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
ஆறும்வருஷம் முடிந்ததுஐவருக்கு
ஆறுவது, காமதேனுபர்வதம் முற்றிற்று.

---

## ஏழாவது, கெந்தர்வ பர்வதம்

ஏழாம்வருடமது பிறந்ததுபஞ்சவர்க்கு
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோறார்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மண்ணிவைத்தசீமாடு வனவாசம்போகிறார்கள்
காமதேனுபர்வதத்தைக் கடந்துவழிகூட்டி
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோறார்கள்
கெந்தர்வபர்வதத்தில் வந்தாரேபஞ்சவர்கள்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
அங்கேபெருமாளும் அலைகங்கைஸ்நானஞ்செய்து
ஈரமுலர்த்தி இழைசேர்ந்தபட்டுடுத்தி
சாம்பமூர்த்திபூசைகளும் சகலமும்தான்முடித்து
ஆசனமிட்டுமல்லோ அரிராமர்பூசைபண்ணார்
அரிபூஜைகுருபூஜை அனைத்துங்கடன்முடித்து
கைதனிலேதீர்த்தமள்ளிக் கதிரோனைப்பூசித்து



பெருமாள் சக்கரத்திற்குபயந்து கெந்தருவன் அர்ச்சுனனிடம் அபயமடைதல். பெருமாள் துரியோதிரனுடன்வந்து அர்ச்சுனனிடம் போர்புரிதல்.

எரிக்குங்கதிரோனை எம்பெருமாள்தோத்தரித்து
கண்ணிரண்டுமூடியே கையிரண்டுமேந்திக்கொண்டு
சிவஞானமாகவே ஸ்ரீகிருஷ்ணன்தானிருந்தார்
எம்பெருமாள் செபம்பண்ணும் வேளையில் கெந்தருவன்

தம்பலம் உமிழப் பெருமாள் கோபிக்கிறது.

ஆகாயவீதியிலே அழகானகெந்தருவன்
மாயனென்னும்கெந்தருவன் வாறனேதேரேறி
தேரேறிவருகையிலே தின்றுஉமிழ்ந்தானே
வால்மிளகுஏலரிசி வாசமுள்ளஜாதிபத்திரி
வெத்திலையும்பாக்குகளுமென்றுஉமிழ்ந்தானே
மாயவனார்கைதனிலே வந்துவிழுந்தது
துப்பியதம்பலமுந் துழாய்மௌலிகையில்விழ
கண்திறந்துபார்த்தாரே கைதனிலேதம்பலத்தை
சுற்றியங்கேபார்த்தாரே தோணவில்லைவேறொருவர்
ஆகாயவீதியிலே அவனாரோதெரியாது
கைதனிலேதம்பலத்தை காரியுமிழ்ந்தானே
செபதபஞ்செய்கையிலே செய்ததிவன்கெருவமென்ன
கண்கள்சிவந்தாராம் காந்தாளமானாராம்
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுமாம்
நீலவிழிக்கண்கள்ரெண்டும் நெருப்புத்தணலாகுது
கோவைப்பழம்போலக் கூர்விழிக்கண்சிவக்கும்
பாவற்பழம்போலப் பத்தியேகண்சிவக்கும்
சக்கரத்தைத்தானெடுத்து சாமிபெருமாளும்
கொல்லநினைவுகொண்டார் கோபாலவெம்பெருமாள்
மந்திரதூபமிட்டு வலதுகையில்தானெடுத்தார்
தம்பலம்உமிழ்ந்தவன்றன் தலையை நீவாங்கிவா
அரைக்ஷணப்போதையிலே அறுத்துவா அவன்தலையை
அரனார்வந்தெதிர்த்தாலும் அமரர்வந்தெதிர்த்தாலும்
பிரமதேவன்வந்தாலும் பிரியங்கள்சொன்னாலும்
தேவபிரான்வந்தாலும் தெண்டனிட்டுக்கொண்டாலும்
கர்த்தரீவந்து கையமர்த்திக்கொண்டாலும்

முப்பத்துமுக்கோடி முனிவர்தடுத்தாலும்
ஆரார்தடுத்தாலும் ஆரவாரம்செய்தாலும்
அரைநாழிக்குள்ளாக அறுத்துவா அவன்தலையை
இக்கணமேசென்று நீ இருதுண்டம்போட்டுவா

மாயன் கெந்தருவன்மேல் கோபித்து சக்கரத்தை
அனுப்புகிறது.

சக்கரத்தை தூபமிட்டு சாமியவர்விட்டுவிட்டார்
வருகுதுசக்கரந்தான் வானுலகந்தான்கடந்து
இயல்பாய்வழிதனிலே எதிர்ப்பட்டார்நாரதரும்
நாரதமாமுனிதான் நமஸ்கரித்தார்சக்கரத்தை
இத்தனைகோபத்துடன் எங்கேநீர்போறீர்காண்
அரிராமச்சக்கரந்தான் அம்முனிக்குயேதுசொல்லும்

நாரதர் சக்கரத்தை நீர் போகிறகாரியம் என்ன
வென்று வினவ சக்கரம் சொல்லுதல்.

ஸ்ரீராமரெம்பெருமாள் செபதபஞ்செய்கையிலே
வாசங்கள்தான்தின்று வலதுகையில் துப்பினன்
ஆகையால்சுவாமியவர் அப்போதுகோபமானர்
என்னையனுப்பினர் இவன்தலையையறுக்கவென்று
கெந்தருவன்றன்தலையை முந்த அறுக்கவந்தேன்
அவ்வார்த்தையைக்கேட்டு அந்தமுனிபோய்நடந்தார்
கெந்தருவன்தன்னருகே வந்தாரே நாரதரும்
ஆரடாகெந்தருவா ஆயரவர்பேரில்
தம்பலமுமிழ்ந்ததினல் சுவாமியவர்கோபமுடன்
சக்கரம் அனுப்பியுந்தன் தலையைதரிக்கவென்று
வருகுதுசக்கரந்தான் மாளவிதியாச்சே
ஆதிசிவனருகே அபயமிட்டுப்போனக்கால்
பரமசிவன்தான்பார்த்துப் பக்ஷம்வைத்தாராமானல்
ஆதிசிவன்தன்னலே ஆகும்உனைக்காக்க
அல்லாதேயாமானல் அறுத்துவிடும்உன்தலையை
தப்பிப்பிழையுமென்று தவமுனிசொல்லுகையில்

கெந்தருவன் சக்கரத்துக்கஞ்சி மும்மூர்த்திகளண்டை
போய் முறையிட்டு இராமையால் அருச்சுன
னண்டை போகிறது.

அவ்வார்த்தைதான்கேட்டு அஞ்சிப்பாய்ந்தவனும்
வாய்வேகமாகவே வழிபிடித்தான் கெந்தருவன்
சக்கரம்வந்திடவே தான்புலம்பிஓடுகிறான்
ஆதிசிவனருகில் அபயமிட்டுஓடுகிறான்
அரவாபரணனே ஐயாஉனக்கபயம்
சங்கரா நான்சரணம் சதாசிவாஉனக்கபயம்
சாந்தலிங்கா நான்சரணம் தாணுவேஉனக்கபயம்
வெள்ளிரிஷபமேறும் வித்தகா நான்சரணம்
மாபூஷணந்தரித்த மகாதேவாஉனக்கபயம்
முக்கண்படைத்தவரே முதல்வரேஉனக்கபயம்
திரிபுரமெரித்தவெங்கள் தேவாஉனக்கபயம்
காமனைக்கண்ணாலெரித்த கடவுளே நான்சரணம்
எமனையுதைத்தவரே ஈசாவுனக்கபயம்
கங்கையணிந்தோனே உடுக்கைதரித்தோனே
திங்களைத்தன்சிரசில் தரித்தசிவனாரே
அபயமபயமையா அந்திவண்ணாஉனக்கபயம்
அபயக்குரல்கேட்டு ஆதிசிவனேதுசொல்வார்
ஆரடா கெந்தருவா அபயமிட்டவாறேது
ஆருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தவயணங்கள் வார்த்தையுரையுமென்றார்
ஆண்டவனேயென்சாமி அடியேன்ஒருவிண்ணப்பம்
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
காயாரக்காய்த்ததொரு கமுகினதுபாக்கை
வாயாரத்தின்று மண்மேலேதுப்பினேன்
தாமரைப்பொய்கையிலே சாமிபெருமானும்
தினகரனைத்தான்பார்த்து செபதபஞ்செய்தாரும்
நானுமிழ்ந்ததம்பலம் ராமர்கையிற்றான்விழவே
கோபாலசாமியவர் கோபம்பெரிதாகி

சக்கரத்தையனுப்பினர் தலையைத்தரிக்கவென்று
என்னைக்கொல்லவருகுது இயலானசக்கரந்தான்
ஆகையாலாண்டவனே ஆதரிப்பீரென்றுவந்தேன்
என்னை நீகாத்தருளும் ஈசாவெனப்பணிந்தான்
காக்கக்கடனுனக்கு கார்வண்ணன்மைத்துனனே
இவ்வார்த்தைதான்கேட்டு ஈஸ்பரருமேது சொல்வார்
நான்வேறுவிஷ்ணுவேறே நானிலத்திற்கெந்தருவர்
ஆயருக்குப்பகையாகி அருகேவரலாமோ
உன்னை நான்காத்தாக்கால் உலகளந்தாரென்ன சொல்வார்
கார்வண்ணரெந்தனுக்கு கடுகிப்பகையாவார்
காக்கவேமுடியாது கடக்கவேபோய்விடுங்காண்
பிரமதேவன் தன்னருகே போவீரேயானால்
அவராலேயாகுங்கா ணாதரிக்கவல்லபிரான்
என்றுஉரைத்தாராம் எண்டோளரப்போது
அழுதுபுலம்பியே அப்புறம்போய்புகுந்தான்
பிரமலோகந்தான்புகுந்து பிரமர் அருகில்வந்தார்
அபயமபயமையா ஆதரிக்குங்கர்த்தாவே
என்னையேயாதரியும் என்றல்லோ தெண்டனிட்டான்
ஆயனைப்பார்த்தெழுதும் அரிபிரமரேது சொல்வார்
ஆருக்குஅபயமாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தகருமங்கள் வாய்திறந்துசொல்லுமென்றூர்
ஆண்டவனேஐயாவே அயனாரே நீர்கேளும்
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
அடைக்காயும்வெற்றிலையும் அய்யா நான்மென்று தின்று
வாசங்கள் தின்று நான் மண்மேலேதுப்பினேன்
மாயவனார்கைத்தலத்தில் வந்துவிழுந்துதாம்
மாயன்வெகுகோபமாகி வரவிட்டார்சக்கரத்தை
என்னையேகொல்லவென்று இயலாயனுப்பினர்
ஆகையாலாண்டவனே யாதரிப்பீரென்றுவந்தேன்
எந்தனையாதரியும் என்றல்லோ அடிபணிந்தான்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏது சொல்வான் நான்முகனும்

நான்வேறுவிஷ்ணுவேறு நாணிலத்தில்கெந்தருவா
மாயருக்குப்பகையாகி வந்தாயோபாதகனே
உன்னையேயாதரித்தால் உலகளந்தாரெந்தனுக்கு
பொல்லாப்புநேர்ந்துவிடும் பெரும்பாவியெந்தனுக்கு
உன்னையேயாதரிக்க உதவாதுயெந்தனுக்கு
எமபுரமேகிநீ எமனுடனுரைத்தால்
எந்தவிதமாகிலும் எமனுன்னைக்காத்திடுவான்
கடுகநடவுமென்றார் கைவிட்டார்பிரமதேவர்
அழுதுபுலம்பியே அதிவிரைவாய்தான்வாருன்
எமனருகில்வந்து இளைத்துப்புலம்புகிருன்
காலனுங்கண்டு கடுகவேயேது சொல்வான்
ஆருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்ருன்
அப்போதுகெந்தருவன் அவருக்கெடுத்துரைப்பான்
அந்தரமார்க்கத்திலே அழகுரதமேறிவந்தேன்
வாசங்கள்தின்று நான் மண்மேலேதுப்பினேன்
வந்துவிழுந்துதாம் மாயருடகைத்தலத்தில்
ஆகையால்கோபித்து அனுப்புவிட்டார்சக்கரத்தை
என்னைக்கழுத்தறுக்க எகிரிவருகுதென்ருன்
என்னையுமாதரியு மென்ருனே கெந்தருவன்
காலனுங்கேட்டுமவன் கடுகியெடுத்துரைப்பான்
மாயருக்குப்பகையானுல் மன்னவரேகார்க்கலாமோ
மாயருடஊழியத்தை மன்னவனேசெய்திடுவான்
உன்னையேகாத்தாலே உலகளந்தார்கோபமுற்ருல்
எதிர்த்துப்புறப்பட்டால் எதிர்நிற்கப்போறேனே
காக்கமுடியாது கட்டழகாகெந்தருவா
அமராபதியாளும் அழகானதெய்வபிரான்
தேவேந்திரராருகில் தேடிநீர்போவீரானுல்
காக்கவும்வல்லபிரான் கடுகநீபோகுமென்ருர்
அவ்வார்த்தைகேட்டுமவன் அழுதுபுலம்பிவாருன்
தெய்வலோகந்தனிலே தேவேந்திரரருகே

அபயமிட்டு அடிபணிந்தான் ஆனதொருகெந்தருவன்
ஆரடா தம்பிநீ அறியவுரையுமென்றான்
ஆண்டவனேஐயாவே அடியேன்ஒருவார்த்தை
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
வெற்றிலையும்பாக்கும் வால்மிளகுஜாபத்திரியும்
ஜாதிக்காயேலரிசி சன்னலவுங்கமுடன்
வாசங்கள்தின்றுநான் மண்மேலேதுப்பினேன்
வந்துவிழுந்ததாம் மாயவனார்கைதலத்தில்
ஆகையாலெம்பெருமாள் அடியேன்மேல்கோபமாகி
சக்கரத்தையனுப்பியெந்தன் தலையையரியுமென
வருகுதுசக்கரந்தான் வல்லுயிரைவாங்கவென்று
கொல்லவருகுது கொப்பெனவேசக்கரந்தான்
ஆதரித்தென்னைரட்சி அநேககோடிமோட்சமுண்டு
என்றவுரைகேட்டு எதுசொல்லாரித்திரரும்
மாயருக்குப்பகையாகி வந்தவனை ஆதரித்தால்
எதிர்த்தாரேயாமானால் எதிர்நிற்கப்போறேனோ
மாயனுக்குச்சரியானார் வையகத்தில்யாருமில்லை
உன்னையேயாதரிக்க உலகத்தில்யாருமில்லை
தருமருடதம்பியவன் தார்விஜயன் அருச்சுனன்தான்
அர்ச்சுனனாலுன்னை ஆதரிக்கவேமுடியும்
அபயக்குரல்கேட்டு ஆதரிப்பான்வாள்விஜயன்
ஆதிசிவனான அரனாரும்வந்தாலும்
எழுதும்பிரம்மாவும் எம்பெருமாள்வந்தாலும்
முப்பத்துமுக்கோடி முனிவர்கள்வந்தாலும்
ஆர்வந்தெதிர்த்தாலும் ஆரவாரம்பண்ணாலும்
அருச்சுனராஜனவன் அனைவோரைவென்றிடுவான்
வாள்விஜயனருச்சுனரும் வல்லமையுள்ளவன்காண்
அருச்சுனனைநீர்கோரி அபயமிட்டுபோனீரானால்
ஆதரிப்பான்வாள்விஜய னதிவிரைவிற்போய்ச்சேரும்
என்றவுரைகேட்டு எழுந்தானேகெந்தருவன்
அழுதுபுலம்பியே அருச்சுனரைத்தேடிவாரான்

தெய்வலோகந்தாண்டி தேர்விஜயனைத்தேடி
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அலறியேதேடிவாரான்
அபயம்அபயமென்று அருச்சுனன்முன்னேவந்தான்
அருச்சுனன் கெந்தருவனுக்கு அபயங்கொடுத்தது.
அபயக்குரல்கேட்டு அருச்சுனனே துரைப்பான்
ஆரடாகெந்தருவா அழுதுபுலம்புவானேன்
ஆரெதிர்த்துவந்தாலும் அமரதுசெய்திடுவேன்
அந்தரதேவதைகள் ஐயன்பிடாரிகளும்
ஆகாயவாணிகளென் றாத்துமாதானறிய
காக்கிறேனஞ்சாதே என்றல்லோகைகொடுத்தான்
அர்ச்சுனன்கைகொடுத்து அஞ்சாதேயென்றுசொல்ல
சற்றேபயந்தெளிந்து தார்வேந்தன் கெந்தருவன்
அர்ச்சுனராஜனவன் அப்போதுவதுசொல்வான்
யாருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
எவரெதிர்த்தாருன்னோடே இங்கழுதுநீவந்தாய்
வந்தகருமமென்ன வாய்திறந்துசொல்லுமென்றான்
அஞ்சிப்பயந்தவனும் அருச்சுனனோடுரைப்பான்
ஆகாயவீதியிலே அழகுறதமேறிவந்தேன்
வாசங்கள்தின்றுநான் மண்மேலேதுப்பினேன்
நானுமிழ்ந்ததம்பலந்தான் ராமர்கையில்விழுந்துதாம்
ஆகையால்மாயவரும் அப்பவேவெகுகோபமுடன்
என்னையேகொல்லவென்று எடுத்துவிட்டார்சக்கரத்தை
சக்கரம்வருகுதுகாண் தலையைத்தரிக்கவென்று
ஆதிசிவனருகில் அபயமிட்டுபோனேனையா
தன்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்
அயன்பிர்மதேவனிடம் அபயமிட்டுப்போனேனையா
ஆதரிப்பாரென்றுநான் அபயமிட்டுப்போய்ச்சேர்ந்தே [ன்
என்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்
எமதருமராஜனண்டை எதிர்கொண்டபயமிட்டேன்
தன்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்
தேவேந்திரனருகில் சென்றுநானபயமிட்டேன்

காத்திடுவாரென்று நான் கடுகியே அபயமிட்டேன்
என்னாலேயாகாது என்றல்லோ தள்ளிவிட்டார்
அழகில்மிகுந்தவரே அர்ச்சுனரேயும்மைநாடி
தேடியேஅபயமிட்டு தெய்வலோகம்விட்டுவந்தேன்
ஆதரித்தீராமாகில் அனைவர்க்குங்கீர்த்தியுண்டு
இவ்வார்த்தைதான்கேட்டு எழில்விஜயனர்ச்சுனனும்
எண்ணுதுமெண்ணுகிறு னெண்ணிமனங்குண்ணுகிறுன்
மாயருக்குப்பகையாகி வந்தவனைக்காத்தாலே
ஆயருக்குமெந்தனுக்கும் அடுத்தாற்பகையாமே
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிவிசாரமிட்டு
ஐவர்சகாயரல்லோ ஆயர்பெருமாளும்
நம்பினேனென்றவரை ரக்ஷிக்கவேணுமல்லால்
காக்கிறேமென்றுசொல்லி கையைவிடலாகாது
ஆயர்பெருமாளுக்கு அன்பானவார்த்தைசொல்லி
எந்தவிதத்திலேயும் இவன்றனைக்காக்கவேணும்
அல்லவென்றுகோபமிட்டால் அமராதுசெய்திடுவோம்
என்று நினைத்தவனும் என்னசொல்வான் வாள்விஜயன்
திங்களுஞ்சூரியனும் தெற்குவடக்காளுலும்
அழகானதாமரையும் அடியிலேபூத்தாலும்
நறிக்கிபிழிந்துஎன்னை நரகத்திற்போட்டாலும்
நாவாலேசொன்னதெல்லாம் நான்தவறப்போறதில்லை
எந்தவிதத்திலேயும் இடறகற்றிக்காத்திடுவேன்
என்றல்லோயாதரித்தான் இயலானவாள்விஜயன்

அருச்சுனன் கெந்தருவனுக்குப் பயந்தீர்க்க
பெருமாளுக்கு கோபம்வந்து சக்கரத்தை
யனுப்புகிறது.

வருகிறதுசக்கரந்தான் மண்ணும்விண்ணுங்கொள்ளாம
கண்கள்பொறிபறக்க கடுகிவருகுதே [ல்
அருச்சுனராஜரண்டை அங்கேவந்துதெண்டனிட
என்னருகேகாரியமேன் எங்குவந்தீர்சக்கரமே
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்முன்

சாமியனுப்பிவைத்த சக்கரமேதுசொல்லும்
மாயனுக்குப்பகையான மாபாவிகெந்தருவன்
அர்ச்சுனரேஉன்னிடத்தில் வந்தானரும்பாவி
அவனைக்கழுத்தறுக்க அனுப்பினார்மாயவரும்
ஆகையாலனுப்புங்காண் அருச்சுனரேயவன்தலையை
அறுத்தெறிந்துயான்போறேன் அவனையனுப்புமென
தனஞ்செயனுமப்போது சக்கரத்துக்கேதுசொல்வான்
அபயமபயமென்று அழுதுபுலம்பிவந்தான்
அபயக்குரல்கேட்டு ஆதரித்தேனவனை
பாரளந்தாரானவர்க்கு பகையாறென்றறியேன்
அபயமபயமென்றான் ஆதரித்தேனவனை
காக்கிறேனென்றுசொல்லி கைவிடலாகாது
ஆகையால்சக்கரமே ஆயருக்குச்சேதிசொல்லும்
கோடிசரணம்நான் கும்பிட்டேனென்றுசொல்லும்
ஆயிரந்தெண்டலிட்டு அடிபணிந்தேனென்றுசொல்லும்
சக்கரத்தாழ்வாரும் தார்விஜயற்கென்னசொல்லும்
ஆனாற்போய்வாரேனென்று அப்போதிரும்பிவந்து
மாயவரைக்கண்டு வணங்கிநமஸ்கரித்து
ஆதிசிவனருகில் அபயமிட்டுஓடுகையில்
ஆதரிக்கமாட்டோமென்று அவரும்விலக்கிவிட்டார்
அருச்சுனனார்தன்னருகில் போனானபயமிட்டு
வணங்கிநமஸ்கரித்து மாயாவுன்வார்த்தைசொன்னேன்
உனக்குபகையான உண்மையெல்லாம்நானுரைத்தேன்
எத்தனைசொன்னாலும் இரங்காமல்அர்ச்சுனரும்
ஆண்டவனேவுன்னருகே அனுப்பினான்சொல்லுமென்று
இவ்வார்த்தைகேட்கலுமே எம்பெருமாள்கோபமாகி
ஆங்காரக்கோபமுடன் அரிராமரென்னசொல்வார்
ஐவரைக்காப்பதற்கு ஆண்டவனாய்நாமிருந்து
இத்தனைநாள்காத்திருந்தேன் இயலானபஞ்சவரை
எனக்குப்பகையாளி தனக்குப்பகையல்லவோ
ஆதரிக்கஞாயமுண்டோ அறியானோஎன்சமர்த்தை

மறுக்காலொருதரம்நீ வாள்விஜயனருகிற்சென்று
நானுரைத்தவார்த்தையெல்லாம் நல்விஜயனுக்குரைத்
மாயவர்க்குவேண்டாத மாபாவியானவனை [து
விட்டுவிட்டாலல்லாது வேணபகையாகுமென்று
குருகுலவம்மிசத்தார் கூட்டோடொழியுமென்று
கொல்லநினைப்பார்காண் குடிகேடுவருகுமென்று
சொல்லியேவாருமென்று சொன்னாரேமாயவனார்
அப்போதுசக்கரத்து ஆழ்வாருந்தானடந்தார்
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
அருச்சுனராஜனண்டை அங்கேவந்துதெண்டனிட்டு
மாயவனார்சொன்னதொரு வார்த்தையொன்றுந்தப்பாம
காண்டீபனருச்சுனரும் கரியமால்சேதியெல்லாம் [ல்
உண்டானவார்த்தையெல்லாம் ஒளியாமலேயுரைத்தான்
காண்டீபனருச்சுனற்குக் கடுகியேபேதுசொல்வான்
ஏதறிவான்கெந்தருவன் ஏழையானுன்னடியேன்
வாள்விஜயனருச்சுனன்மேல் வன்பகையுந்தனுக்கேன்
ஏதுகுற்றமானாலும் எனக்காய்மனம்பொறுத்து
ஆயிரந்தெண்டம் அடிபணிந்தேனென்றுசொல்லும்
காக்கிறேனென்றுசொல்லி கைவிடஞாயமுண்டோ
நறுக்கிப்பிழிந்துஎன்னை நரகத்திற்போட்டாலும்
கைவிடான்விஜயனென்று கண்ணருக்குநீயுரையும்
ஊழியுள்ளகாலமட்டும் உனைமறவானருச்சுனனும்
வணங்கினானென்றுரையும் மாயருக்குநீர்தாமும்
அனேகங்கோடிநமஸ்காரம் அருச்சுனன்செய்தானென்
தாமோதரன்றனக்குச் சக்கரமேபோய்சொல்லும் [று
சக்கரமேபோய்ச்சொல்லுஞ் சரணஞ்சரணமென்று
சொல்லித்தொழுதானே சுவாமிபெருமானை
சக்கரத்தாழ்வார்க்குத் தனஞ்செயன்விடைகொடுக்க
சக்கரத்தாழ்வாரும் தானுமங்கேபோய்நடந்தார்
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தாண்டி

மாயரருகில்வந்து வணங்கியேதெண்டனிட்டு
வாள்விஜயன்சொன்னதொரு வார்த்தைகள்தானுரைக்க
ஆயரவர்கேட்டு ஆங்காரகோபமதாய்
ஐவர்பஞ்சபாண்டவர்க்கு அனர்த்தம்பிறந்ததென்ன

### சக்கரம் அருச்சுனன் மனமறிந்து பெருமாளுக்குச் சொல்ல பெருமாள் கோபித்து சாத்தகியை அனுப்புகிறது.

கொல்லநினைப்பாரே குடிகேடுவந்திடுமே
வேண்டாங்காண்வாள்விஜயா வீண்பகைதேடாதேயென
அருச்சுனற்குச்சொல்லிநீ அதிவிரைவிலோடியந்த
கெந்தருவன்தன்தலையை இந்தக்ஷணமறுத்து
ஒருக்ஷணப்போதையிலே உத்தரவுகொண்டுவாரும்
என்றவுரைகேட்டு எழுந்துநடந்தாரும்
காடுசெடியுங் கரியமலைதாண்கடந்து
அருச்சுனரைக்கண்டு அடிபணிந்துதெண்டனிட்டார்
மாயனுரைத்ததொரு வார்த்தையொன்றுந்தப்பாமல்
ஒன்றுமொளியாமல் உரைத்தாரேசாத்தகிதான்
அரிராமர்செய்தியெல்லாம் அருச்சுனன்தான்கேட்டு
எத்தனைவார்த்தைக ளிரக்கமாய்ச்சொன்னாலும்
இரங்காமல்மாயவரும் எதிர்க்கவும்ஞாயமுண்டோ
ஆயன்பெருமாளும் அறியாரோவென்சமர்த்தை
பெண்டுகள்பேச்சுகளோ பேசுகிறுரெம்பெருமாள்
கைவலுமையுண்டானல் கடுகிவரச்சொல்லும்
மூலையிலேதாமிருந்து மொழிகிறதுஞாயமுண்டோ
மைதானவெளியிலே வரச்சொல்லும்சண்டைபண்ண
காக்கிறேனென்றவனை கைவிடப்போறேனோ
மாயவருடனாக மயேஸ்வரனார்வந்தாலும்
பெருமாளுடனாகப் பிரமதேவர்வந்தாலும்
எவரெதிர்வந்தாலும் இளைப்பேனென்றுபாராதே
போவென்றுசொன்னான் போர்விஜயன்கோபமதாய்

சாத்தகியாழ்வாரும் தானடந்தார்பொட்டெனவே
ஆயருகில்வந்து அடிபணிந்துதெண்டனிட்டான்
அருச்சுனன்சமர்த்துகளும் ஆண்மைகள்பேசினது
சண்டைக்குமுஸ்தீப்பாய் தான்வரச்சொன்னதுவும்
அவ்வார்த்தைசொல்லுகையில் ஆயரும்கோபமுற்று
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரியாகுதுபார்

அருச்சுனன்மேல் பெருமாள் கோபமாகி சண்டைக்குப்
போக துரியோதிரனை வரவழைத்தது.

கோபம்பெரிதாச்சு கோபாலமாயருக்கு
சாத்தகியைத்தானழைத்து சாமியவரேதுசொல்வார்
துரியோதிரனுக்குச் சேதியுரையுமென்றார்
மாயவர்க்குப்பகையானார் மன்னர்பஞ்சபாண்டவர்கள்
ஐவரைக்கொல்லவென்று ஆயர்பயணமிட்டார்
உன்னுடையசேனைகளும் யுத்தமானராஜர்களும்
சேரத்துணையாகச் செப்பிவரச்சொன்னார்காண்
வாருங்களென்று வரவழையுந்துரியனைத்தான்
இப்போசமயம் இந்தாபயணம்வாங்களென்று
நாகக்கொடிவேந்தன் ராஜாவையழையுமென்றார்
சாத்தகியாழ்வாரும் சரணமிட்டுப்போய்நடந்தார்
அஸ்தினபுரத்துக்கு அடைவுடனேபோய்ச்சேர்ந்து
துரியோதிரனுக்குச் சேதிகள்சொல்லலுற்றார்
ஐவரைக்கொல்லுகைக்கு ஆயர்மனதாகி
அழைத்துவரச்சொன்னார்காண் அரவக்கொடியோனே
வருவீரோவென்றுசொல்லி வாய்மொழிகேட்கலுற்றார்
சாத்தகிசொல்லலுமே சர்ப்பக்கொடியோனும்
துரியோதிரன்கேட்டு சிந்தைமனங்குளிர்ந்து
ஐவரைக்கொல்லுகைக்கு அதிகமனதாகி
நல்லசமயம் நமக்குக்கிடைத்ததென்று

துரியோதிரன் பெருமாளிடம் வருகிறது.

அங்கேநட்டான்சண்டாவை யடியுமென்றான்பேரிகை
இன்றுவெளிக்கூடார மிப்போதுபோடுமென்றான் [யை

கானலுக்கெடுத்தார்கள் கறுப்புநல்லகூடாரம்
வெயிலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
யானையின்மேல்டங்காவும் குதிரையின்மேல்டேராவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைசெவிடுபட
யானையுஞ்சேனையுடன் அரசுமன்னர்பயணமிட்டார்
துரியோதிரன்தம்பிமார்கள் தொண்ணூற்றுஒன்பதுபேர்
கருணன்சகுனியும் காந்தாரிபிள்ளைகளும்
துரோணரசுவத்தாமன் சொற்பெரியகாங்கையனும்
கிருபன்கிருபாசாரி கீர்த்தியுள்ளமன்னர்களும்
பிள்ளையவன்லக்குணனும் பேர்மிகுந்தமந்திரியும்
மற்றுஞ்சிலராஜர்களும் மந்திரிகள்பயணமானார்
அமராதருஞ்சமராதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
எண்ணான்கு ஆயுதங்கள் எடுத்தரையிற்கட்டினார்கள்
நாலுபக்கத்திலுள்ள ராஜாக்கள்சேனையுடன்
கார்மேகம்போல கருத்தானைக்கூட்டம்வரும்
மேகத்துமின்னலைப்போல் வெள்ளானைக்கூட்டம்வரும்
வானத்துமின்னலைப்போல் மணித்தேரசைந்துவர
செவ்வானம்போலே சிவந்தபுரவிகளும்
அச்சுகிருகிரென்ன யானைநெடுந்தேரசைய
வண்டில்கிருகிரென்ன மதயானைகோஷ்டமிட
குதிரைகளைக்குமங்கே கொக்கரிக்கும்பாளையங்கள்
செந்தூளெழும்புகுது தினகரனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புதது
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரிதான்முழங்க
தேர்களசைந்துவரச் சிகரக்கொடிபறக்க
மாயவனூர்பட்டணமே வாரூர்களெல்லோரும்
அங்கேநட்டான்சண்டாளை அங்கிரங்கிபாளையங்கள்
துரியோதிரராஜன் ஸ்ரீகிருஷ்ணரருகில்வந்து

மாயவரைக்கண்டு வணங்கியேதெண்டனிட்டான்
ஏழுலமாண்டசாமி எம்பெருமாளேது சொல்வார்
மாநாகங்கொண்ட மகாராஜா நீர்கேளும்
காலையில்தானெழுந்து கனிவாய்முகங்கழுவி
தினகரனைத்தோத்தரித்து செய்தேன்செபதபங்கள்
ஆகாயவீதியிலே அரும்பாவிகெந்தருவன்
வாசங்கள்தின்றுமெந்தன் வலதுகையில்தானுமிழ்ந்தான்
அவனைக்கழுத்தறுக்க அனுப்பினேன்சக்கரத்தை
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனராஜனவன் ஆதரித்துக்கொண்டானும்
ஆகையாலருச்சுனனை அதமாக்கவேணுமென்று
உந்தனுக்குசேதிசொல்லி உரகதனைவாருமென்றான்
என்வார்த்தைதள்ளாமல் என்மேல்தயவாகிவந்தீர்

ஐவரையுங்கொல்ல திரியோதனனும் அவன் சேனை
களும் எம்பெருமானும் அவர் சேனைகளும்
சண்டைக்கு வருகிறது.

ஐவரைக்கொல்லுகைக்கு அனைவோரும்போவோமென்று
பயணம்பயணமென்று பயணபேரியடியுமென்றார் [ர்
அமரதரும்சமரதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
அத்தண்டராணுவமும் அல்லவரும்பயணமென்றார்
துரோணரசுவத்தாமர் சொல்லரியவீரர்களும்
கிருபன்கிருபாசாரி கீர்த்திபெற்றகர்ணனுமே
எண்ணான்குஆயுதங்கள் எடுத்தரையிற்கட்டினார்கள்
ஏறினார்தேர்மேலே எடுத்தார்நெடுங்குடையை
தேரணியுமாவணியும் சேனைத்திரளுடனே
வாரஜனங்களெல்லாம் மட்டுமிதங்களில்லை
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
வனமாய்வனங்கடந்து வருகுதுபாளையங்கள்
தினகரன்வனந்தனிலே சேர்ந்தார்துரைகளெல்லாம்

அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
முருக்கமகாரிஷிவனத்தில் முடிமன்னர்வந்தார்கள்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
காளமகாரிஷிவனத்தில் கடுகிவந்தாரன்னேரம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
காமதேனுபர்வதத்தில் கடுகிவந்தார்துரைகளெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
கெந்தமாபர்வதமே கிட்டியேவாறார்கள்
ஒற்றனொருவனை ஓடியேசொல்லுமென்றான்
துரியோதிரன்படையும் ஸ்ரீகிருஷ்ணன்சேனைகளும்
வருகிறாரென்றுசொல்லி வாள்விஜயனுக்குரையும்
என்றுசொல்லியருச்சுனற்கு அனுப்பினார் தூதுவனை

அருச்சுனற்கு எம்பெருமாள் சண்டைக்கு வருகிறே
னென்று தூதனிடம் சொல்லியனுப்புதல்.

ஓடினான் தூதுவனும் ஒருநொடியிற்போய்ச்சேர்ந்தான்
அருச்சுனராஜருக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
மாயனும்உரகதனும் வருகிறார்சண்டைபண்ண
எச்சரிக்கையாகவே இருமென்றாரெம்பெருமாள்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தானருச்சுனனும்
தருமருகில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
அண்ணன்தருமருக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
ஆகாயவீதியிலே அழகானகெந்தருவன்
மச்சுரதமேறி வருகிறவேளையிலே
வாசங்கள்தின்று மண்மேலேதுப்பினான்
அவனுமிழ்ந்ததம்பலங்கள் அரிராமர்கையில்விழ
மாயன்பெருமாளும் மகாகோபந்தானுகி
சக்கரத்தைவிட்டார்காண் தலையைத்தரிக்கவென்று
அபயமபயமென்று அலறிப்புலம்பிவந்தான்
அபயக்குரல்கேட்டு ஆதரித்தேனனவனை
ஆதரித்தேனென்றுசொல்லி அமர்செய்யவாறாராம்
ஐவரைக்கொல்லவென்று அரிராமர்வாறாராம்

மாயருடன்சண்டைபண்ண வாரீரோ அண்ணுவே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுரைப்பார் தருமருமே
போருக்குமாயருடன் போகாதேதம்பியென
வெற்றிமதயானே வீமனவனே துசொல்வான்
அஞ்சாதேதம்பியரே அதமாக்கிப்போட்டிடுவேன்
துரியோதிரன்படையும் ஸ்ரீராமர்சேனேகளும்
எல்லோரையுங்கொன்று எமலோகஞ்சேர்த்திடுவேன்

வீமனும் அர்ச்சுனனும் சண்டைக்குப் புறப்படுதல்.

என்றுமதவீமன் எழுந்தானேகோபமுடன்
தருமருந்துரோபதையுந் தம்பிமாரிருவரையும்
அபயமிட்டகெந்தருவன் அவனேயுந்தானழைத்து
உச்சிமலே நடுவே உள்ளேகுகையிருக்கும்
அந்தகுகையிலே அனேவோரும்போயிருங்கள்
வந்ததிரளையெல்லாம் மண்ணுக்கிறையிடுவோம்
எம்பெருமாள்சேனேகளை எமலோகஞ்சேர்த்திடுவோம்
எச்சரிக்கையாகவே இருமென்றுனப்பொழுது
அப்படியேதருமரவர் அதிவிரைவாய்த்தானெழுந்து
உச்சிமலே நடுவே ஒருகுகையிற்போயிருந்தார்
வீமராருச்சுனரும் விரைவாய்த்தானெழுந்து
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
அம்புவில்லுந்தானெடுத்து ஆயத்தப்பட்டாராம்
வடக்குமூலேயிலே மதவீமன்வந்துநின்றுன்
தெற்குமூலேயிலே தேர்விஜயன்வந்துநின்றுன்
வருகுதுபாளேயங்கள் மண்ணுவிண்ணுங்கொள்ளாமல்
ஆனேகுதிரைரதம் அளவிலாச்சேனேகளும்

வருகிறசனங்கள் தனை மாயவனார் தானழைத்து
துரியோதனதியரை சேவகரைவரவழைத்து
உன்னுடையசேனைகளை உகமையுள்ளராஜர்களை
சமரதுசெய்யவந்த சமர்த்துள்ளமன்னர்களை
ஆனைகுதிரைகளும் அரசுமன்னவரும்
மாவணியுந்தேரணியும் மற்றுமுள்ளராணுவமும்
உன்னுடையபாளையத்தை ஒன்றாகவேகூட்டி
வடக்குமுகத்திலே மதவீமன் தன்மேலே [கு
சண்டைபோய்ச்செய்யுமென்று தான்சொன்னார் துரியனுக்
தெற்குமுகத்திலே தேர்விஜயன்தன்னருகே
என்னுடையசேனைக ளெல்லோரும்போயெதிர்த்து
அருச்சுனன்தன்னுடனே அமரதுசெய்திடுவோம்
என்றுஅனுப்பிவைத்தார் இயலானமாயவரும்
தவளசங்கூதினார் சண்டைக்குவாரேனென்று
ஊதினார்சின்னம் உலகளந்தார்பாளையத்தில்
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
செந்தூளெழும்புகுது தினகரனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
வந்துஎதிர்த்தார்கள் வாள்விஜயன்றன்னுடனே
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனும்
தன்னுடையசேனையுடன் தான்வடக்குத்திசையதனில்
வந்துஎதிர்த்தானே மதவீமன்தன்னுடனே
எண்ணெணச்சேனையுடன் எச்சரித்துத்தான்வளைத்தார்
சிங்கநாதந்தானூதி சேனைகளுங்கொக்கரித்தார்
கண்டான்மதவீமன் கண்கொள்ளாச்சேனைகளை
எல்லவரைக்கொல்லவென்று எழுந்தான்மதகரியான்
கோபம்வருகுது கொற்றவனார்வீமனுக்கு
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுது
கண்ணையுருட்டிக் கதும்பினான்சேனைகளை
எட்டினான்கல்மலையை எகிறவிட்டான்பாளையத்தில்

மலைகளைத்தான்பிடிங்கி மதவீமன்வீசுகிறான்
குன்றுகள்சேர்த்தெடுத்துக் கொப்பெனவேசாடுகிறான்
ஆனைகுதிரைகளும் அலறிக்கலங்கிடுமாம்
அச்சுகளுந்தான்முறிந்து அனேகரதம்விழுமாம்
வண்டிமுறிந்துசில மச்சுத்தேர்தானொடியும்
ஜெனங்கள்மடியுது செம்புரவிஓடுகுது
கண்டகண்டமாகுது கடுஞ்சேனையத்தனையும்
அம்மாடியென்றுசொல்லி அலையுதுபாளையங்கள்
செத்தஜனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
ரத்தாறுஓடுகுது ரணங்கள்மிகக்கொப்பளிக்க
ஐயோசிவனேயென்று அலையுதுபாளையங்கள்
பார்க்கமுடியாது பாவியுடஜனங்கள்
சொல்லமுடியாது துரியோதிரன்பாளையங்கள்
இந்தவிதமாக எழில்வீமன்கொல்லுகிறான்
இப்படியாக இவன்சண்டைபண்ணுகையில்
ஆணழகுமன்னன் அருச்சுனன்தன்னுடனே
வந்துஎதிர்த்தாரே மாயன்பெருமாளும்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
மார்பிரளத்தானெடுத்து தோள்பிரளவாங்கிவிட்டான்
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடியாது
சொர்னமழைபோலே சொரிகிறார்பாணமது
சங்கரன்மாரிபோலே சரமேற்சரம்விடுத்தார்
அருச்சுனன்பின்னிடையா னனேகசரம்பொழிந்தான்
ஆகாயந்தன்னளவாய் அப்பாலேபந்தலிட்டு
சூரியனைத்தான்வளைத்தான் சூராதிசூரனவன்
வில்பிடித்தகைதலத்தில் மெத்தச்சிவப்பேறும்
வளைந்தவில்நிமிராமல் மாரிச்சரம்பொழிந்தார்
வாயுவினஸ்திரமும் வருணாஸ்திரமும்விட்டார்
பின்னையும்அஸ்திரங்கள் பிரளயமாய்த்தான்விடுத்தார்
நாலுகடிகைமட்டும் நல்லசண்டைபண்ணுகிறார்கள்
ஒருவர்க்கொருவர் உகந்துபின்வாங்காமல்

சண்டையமர்க்களத்தில் தாக்கிப்பொருதலுற்ருர்
விலக்குவாரில்லை மிகுந்தசரமதனை
மாயன்பெருமாட்கு வருகுதுமெத்தகோபம்
என்றுமில்லாக்கோபம் எழும்புதுமாயருக்கு
விட்டதொருபாணமெல்லாம் மட்டறுத்தான்வாள்விஜய
அருச்சுனரைக்கொல்ல அரிராமர்கோபமதாய் [ன்
சக்கரத்தைத்தானெடுத்தார் சாமிபெருமாளும்
கொல்லநினைவுகொண்டார் கோபாலரருச்சுனரை
மந்திரதூபமிட்டு மாயவனுரேதுசொல்வார்
அர்ச்சுனன்தன்சிரசை அரைநொடியில்வாங்குமென்ருர்
சுழற்றியெடுத்தாரே சுவாமியுஞ்சக்கரத்தை
கண்டானேவாள்விஜயன் காந்தாளமாயெழும்பி
தானுமெடுத்தானே தன்னுடையசக்கரத்தை
சக்கரத்தைமந்திரித்து சாமியைக்கொல்லவென்று
எடுத்தானேசக்கரத்தை இமையோர்கள்தானறிய
சக்கரத்தைமந்திரித்து சாமியைக்கொல்லவென்று
வாவென்றழைக்க வகையறியானருச்சுனனும்

சாமிபெருமாள் சக்கரமெடுக்கத் தனஞ்செயன்
பதில் சக்கரமெடுக்க இருவரும்
சமாதானமாகிறது.

கண்டார்பெருமாளும் கனமோசம்வந்ததென்று
நாமல்லோகற்பித்தோம் நல்விஜயனர்ச்சுனற்கு
சக்கரத்தைவிட்டாக்கால் தானழைக்கவகையறியான்
சக்கரம்வந்துதானுல் தலையைத்தரித்திடுமே
மோசம்வருகுதென்று முகில்வண்ணரேதுசெய்தார்
தன்னுடையசக்கரத்தை சாமியவர்தேரில்வைத்தார்
தேரைவிட்டிறங்கினுர் ஸ்ரீராமர்பொட்டெனவே
கண்டானேஅருச்சுனனும் கடுகயிறங்கினுன்
தேரைவிட்டுத்தானிறங்கி ஸ்ரீராமர்க்கெதிரானுன்
ஒருவர்க்கொருவர் உறவாடிக்கொண்டார்கள்

எம்பெருமாளும் அர்ச்சுனனும் சமாதானமானதை
திரியோதிரன் கண்டு பொருமைப்பட்டுச்
சொல்லாமல் ஓடுகிறது.

கண்டான் திரியோதிரன் கரியமால்மோசமதை
தனஞ்செயனுமாயனுமே தழுவிவிளையாடுவதை
எண்ணுதுமெண்ணினன் எரிநாகங்கொண்டவனும்
மாயன்கெடுத்தானே வஞ்சனைகள்செய்தானே
பொல்லாநினைவுகொண்டு பெருமாளழைத்துவந்தான்
நம்மையேகொல்லவென்று நாரணரழைத்துவந்தார்
அறியாமல்வந்துவிட்டோ மமாதுசெய்வோமென்று
மாயவனை நம்பி வருவது நீதியல்ல
ஐவர்சகாயரென அவனியதிற்கேட்டிருந்தும்
அறிந்துமிருந்து நாம் அநீதமாய்மாளவந்தோம்
யுத்தம்பண்ணவந்திங் குறவாடிபோனரே
கொல்லுகிறேனென் றுவந்து கூடியுறவாடினரே
இனியிருக்கஞாயமல்ல என்றுவழிபிடித்தான்
ஆனையுஞ்சேனையும் அண்டவொண்ணுபாளையமும்
தப்பியிருந்த தளம்பெரியசேனைகளை
கூட்டிநடந்தானே கொத்துப்போர்வீரியனும்
காடுசெடிகடந்து கரியமலைதான்கடந்து
ஆறுஞ்சுனைகடந்து அனேகமலைதான்கடந்து
அத்திநகர்பட்டணத்தை அடுத்தான்திரியனுமே
அந்தச்சமயத்தில் ஆயருமர்ச்சுனரும்
ஒருவர்க்கொருவர் உறவாடிப்போய்நடந்தார்
மலையேறிஉச்சி வாராரிருவருமாய்
தருமருந்துரோபதையும் தம்பிமாரிருவருமாய்
கடுகியெழுந்திருந்து கார்வண்ணரைத்தொழுதார்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்மாயவரை
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
பெருமாள்மனமகிழ்ந்து பிரியமுடன்தான்வாழ்த்தி
அல்லவரைக்கையமர்த்தி அரிராமர்வீற்றிருந்தார்

தருமருடனாக சாமியவர்யேதுசொல்வார்
காலைக்கடன்முடித்துக் கையேந்திசெபதபங்கள்
செய்துகொண்டிருக்கையிலே தேரேறிஅந்தரமாய்
ஆரோவொருகெந்தருவன் அதிகக்கருவமதாய்
போகிறவனென்கையிற் பளிச்சென்று சம்பலத்தை
அப்பினான்சக்கரத்தைத் துணித்துவாவென்றனுப்ப
கிரீடியிடம் அபயமெனக் கெந்தருவனோடிவா
எனக்குப்பகையான இயலானபாதகனை
ஆதரிக்கஞாயமுண்டோ அவர்செய்யக்காரியமேன்
என்னோடமர்பொருத இராஜாவேஞாயமுண்டோ
தக்கபுகழ்பெரிய தருமரவரேதுசொல்வார்
அறியாதார்செய்தபிழை ஆண்டவனேமனம்பொறுத்து
தெரியாதார்செய்தபிழை தேவர்மனம்பொறுத்து
இரவும்பகலுமே எப்போதுமுந்தனைத்தான்
உம்மைத்தொழுதல்லோ உலகாளவென்றிருந்தோம்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
உம்மையேதெய்வமென்று உயிர்கொண்டுலாவுகிறோம்
என்றுவணங்கினார் இயலானதருமரவர்
உள்ளங்குளிர்ந்துமே உலகளந்தாரேதுசொல்வார்
அருச்சுனனைத்தான்பார்த்து அரிராமரேதுசொல்வார்
சென்றதுஉன்சபதம் தேவேந்திரன்மகனே
அபயமிட்டபேர்களைத்தான் ஆதரிக்கவல்லபிரான்
செப்பியதுதான்தவறுன் தேவேந்திரன்மகனுர்
மார்க்கண்டனுக்காக மயேஸ்வரன்சொல்லிவிட்டார்
நிலையறியார்பரமசிவன் நிலையறிந்தான்நாமறியோம்
உன்னிலும்வல்லபிரான் எலகத்திலாருமில்லை
சந்தோஷமாச்சுது தர்மர்பஞ்சபாண்டவரே
இந்தவனம்விட்டு இனியவனம்போயிருங்கள்
எதுவினைவந்தாலும் என்னை நினைத்திடுங்கள்
போய்வாரேனென்று பெருமாளெழுந்திருந்தார்

எம்பெருமாள் விடைபெற்று தன் இருப்பிடம்
செல்லுகிறது.

ஐவரைவாழ்த்தியே அரிராமர்போய்நடந்தார்
காடுஞ்செடியும் கரியமலைதான்தாண்டி
மாயவனார்போனபின்பு வாள்விஜயனேது சொல்வான்
வாருய்நீகெந்தருவா வார்த்தையொன்று நீர்கேளும்
உன்-ஆபத்துதீர்ந்தது ஆண்மையுள்ளகெந்தருவா
உந்தனரண்மனைக்கே உளமகிழ்ந்துபோய்ச்சேரும்
என்றுவிடைகொடுத்தார் எழில்விஜயனருச்சுனனும்
அப்போது கெந்தருவன் அருச்சுனற்குத்தெண்டனிட்டு
நான்செய்தபாவத்தை இராஜாவேதீர்த்துவிட்டீர்

கெந்தருவன் அருச்சுனன்கையில் விடைபெற்றுக்
கொண்டு தன்னிருப்பிடம் போய்ச் சேருகிறது.

ஆபத்தைத்தான்தீர்த்து ஆதரித்தீர்வாள்விஜயா
உனக்கேது,நான்தருவேன் உயிர்க்காத்தராஜாவே
பாராசாரிவெண்புறவி பஞ்சவர்னநற்புரவி
சாகாப்புரவிநான் தாரேன்காண்வாள்விஜயா
உந்தன்ரதத்திற்கு உற்றபுரவியென்றான்
ஆனாலழகுமன்னன் அருச்சுனனேது சொல்வான்
வனவாசந்தீர்ந்துநாங்கள் வந்தபிறகாக
அப்போதுவேணுமென்று லப்புரவிதானனுப்பும்
எந்தன்மேல்தயவுநீ என்றும்மறவாதே
போய்வாருமென்று சொல்லி புண்ணியருங்கூறினார்
மாயனெனும்கெந்தருவன் வணங்கியேதெண்டனிட்டு
போதச்சரணமென்று போய்நடந்தான்கெந்தருவன்
ஏழாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு
இ,ந்தக்கதைதன்னில் இடறுகளுண்டானால்
ஜகத்தினிலுள்ளவர்கள் சரியாகஇக்கதையை
இகழ்ச்சியாயுள்ளதெல்லாம் புகழ்ச்சியாய்தான்திருத்தி
அகத்தினிற்றான்பொருந்தி அன்பாகத்தான்படித்தால்

சுகத்துடன்வாழ்ந்து சுவர்க்கபதிசேர்வார்கள்
இந்தப்படியாக எப்போதும்வாழ்ந்திடுவார்
வாழ்த்திவிடைகொடுத்தார் மாயவனாரப்போது
வாழியென்றுசொல்லி வரமளித்தாரீஸ்வரனார்

ஏழாவது, கெந்தருவபர்வதம் முற்றிற்று.

---

## எட்டாவது, குருபரிஷி வனம்

எட்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னிவைத்தசீமாடு வனவாசம்போனார்கள்
குருபரிஷிவனத்தில் குடித்தனமாய்ப்போனார்கள்
அந்தவனத்திலே ஐவர்குடித்தனமாய்
ஐந்தடுக்குபர்னசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்
பர்னசாலைமேலாகப் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்தவனத்திலே அநேகநாட்சென்றபின்பு

துரோபதை வனசாரிவந்து பாரிஜாதபுஷ்பம் கேட்கிறது.

தோராவடிவழகி துரோபதைநாயகியும்
ஒற்றையொருநாளில் ஒண்டியாய்த்துரோபதையாள்
அந்தவனத்தி னதிசயத்தைப்பார்த்துவர
வரத்திற்பெரியவராம் மகாரிஷியானவராம்
யோகத்திற்பெரியவராம் உத்தகுருபரிஷியாம்
சாமியிலும்பெரியவராம் தவத்தில்மிகுந்தவராம்
அவர்-பூசைபண்ணுந்தீர்த்தம் பொய்கைபோலாகுது
ஓடுஞ்சலத்திலே ஒதுங்கிவரும்பூமலரும்
பாரிசாதபூமலருப் பரிமளமாய்வீசுகுது
ஆற்றிலடித்துக்கொண்டுஅலைந்துவருகுது



வீமன் பாரிஜாதமலர் கொண்டுவந்தது.

கண்டாளே துரோபதையாள் கடுகிமனதுகொண்டாள்
மெத்தாசைப்பட்டாளே வேல்பொருதுங்கண்ணும்
எண்ணுதுமெண்ணுகிற ளெண்ணித்துரோபதையும்
ஆரோடேசொன்னுலே ஆகுமிந்தக்காரியங்கள்
எவரோடேசொன்னுலே எடுத்தளிப்பாரிம்மலரை

துரோபதை வீமனை புஷ்பங் கேட்கிறது.

வெற்றிமதயானை வீமருடன்சொன்னோமானுல்
பரித்துத்தருவார்காண் பரிமளத்தைநாமறிய
என்றுநடந்தாளே இளங்கொடிதுரோபதையும்
பர்ணசாலைமேலாகப் பாஞ்சாலியோடிவந்து
வெற்றிமதயானை வீமனைத்தான்பார்த்து
ஏலப்பசுங்கிளியாள் இளங்கொடியாளேதுசொல்வாள்
ஆண்டவனேஐயாவே அடியேனொருவிண்ணப்பம்
காணுதுகண்டேன்காண் கண்டாசைப்பட்டுவந்தேன்
பாராதுபார்த்துவந்தேன் பார்த்தாசைப்பட்டேனையா
என்மனதுக்கேற்றபடி எனக்குவிடைதாரும்
வெற்றிமதயானை வீமரவரேதுசொல்வார்
பாஞ்சாலன்பெற்றபெண்ணே பச்சைப்பசுங்கிளியே
ஏதுநினைத்துவந்தாய் எனக்கரியச்சொல்லுமென்றூர்
தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
அகிலாண்டகாவேரி ஆறொன்றுதான்வருது
ஆற்றங்கரையில் அங்கொன்றுதான்வருது
பரிமளத்தோடிருந்தது பார்த்துவந்தேன்பாரிஜாதம்

வீமன் பாரிஜாத புட்பங் கொண்டுவரப் போகிறது.

வெற்றிமதயானை வீமரெழுந்திருந்து
இங்கேயிரும்பெண்ணே என்றேயெழுந்திருந்து
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்

தட்டிவரிந்துசட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
தெண்டாயுதமெடுத்து சிலேவீமன்வாரானே
ஆற்றங்கரையோரம் அங்குவீமன்வாரானே
பூமரத்தைத்தேடியே போருனும்வீமனவன்
யோசனைக்குயோசனே உயரமுள்ளபூமரமாம்
இதுவென்னசிறுமரம் இட்சணமேகொண்டுவாரேன்
எழுசுற்றுவேலிகளாம் இருபக்கமாமலேயாம்
மாமலேதன்னிலே வல்லனுமான்காவலதாம்
பூவனத்திற்போகவென்று போகையில்வீமனவன்
வாசற்படியிலே வல்லனுமார்படுத்திருந்தார்
கண்டாரனுமாரும் கரியவீமனைப்பார்த்து

வீமனுக்கும் அனுமாருக்கும் சண்டையாகிப்
பிறகு சமாதானப்படுதல்.

ஆரடாராக்ஷதனே அஞ்சாமற்போகவந்தாய்
இந்தவனத்திலே யேதுக்குபோருயென்ருர்
போகவிடேனென்ருனே போரனுமானப்போது
வெற்றிமதயானை வீமனுந்தான்கேட்டு
கோபம்வருகுது கோலாகலவீமனுக்கு
சாணுண்டுஇக்குரங்கு தடைபடுத்துதென்றுசொல்லி
கையிரண்டும்நீட்டியே கட்டழகன்வீமனவன்
கோடையிடிபோலே குத்தினன்வீமனவன்
அந்தஅடிசத்தம் அந்தவனங்கிடுகிடென்ன
அந்தவனத்திருந்த அநேகமிருகமெல்லாம்
மறுகாலொருவனத்தே மருண்டோடுதேமிருகம்
அனுமாருடரோமங்கள் அயர்ந்துகொடுத்ததுகாண்
கோபம்வருகுது கோபாலதூதுவர்க்கு
என்னையடித்தவனே இட்சணமேகொன்றிடுவேன்
என்றுசொல்லிதானெழுந்து நின்ருனே நல்லனுமான்
அடித்தானேவீமனை அவ்வானத்திடிபோலே
கோடையிடிபோலே குத்தினன்மார்கலங்க
அவ்வடிபட்டவுடன் அங்கேகளைத்தானும்

மண்மேல்விழுந்தானே மல்லாந்தபாவனையாய்
விழிகள்பிதுங்கியே விழுந்தானேமூர்ச்சையாய்
மாண்டவன்போலே மண்மேல்விழுந்தானே
அனேகநெடுநேரம் ஆனபிறகாக
மூர்ச்சைதெளிந்து முடிமன்னன் தானெழுந்தான்
கண்டானே நல்லனுமான் கடுகியவனேதுரைப்பான்
என்னுடையசண்டையிலே எவரும்பிழைத்ததில்லை
இவன்-யாரோதெரியாது ஆங்காரமுள்ளவன்காண்
அடித்தஅடியோடே அவனியில்விழுந்தவன்காண்
தவறியெழுந்தவன்காண் தப்பிப்பிழைத்தானே
என்றுமனதிலெண்ணி இயலனுமானே துரைப்பான்
ஆரடாராக்ஷதனே ஆங்காரமுள்ளவனே
ஆரென்றிருந்தீர் நான் அரிராமர்தூதனல்லோ
லங்கையழித்தவன் நான் ராவணனைக்கொன்றவன் நான்
அஞ்சனைதேவிபெற்ற அனுமந்தன் நானலவோ
என்னுடனெதிர்த்து இனிபிழைக்கப்போறீரோ
என்றவுரைகேட்டு இயலானவீமனவன்
உற்றதுகேட்டு மெத்தப்பயந்தவனும்
அண்ணனென்றறியாமல் அமரதுசெய்தோமே
என்றுபச்சைத்தழையுருவி பாதத்திற்றான்போட்டு
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டான்
ஐங்கால்வலம்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டான்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
கண்டந்தநல்லனுமார் கடுகியேயதுரைப்பார்
ஆரடாதம்பிநீ அறியவுரையுமென்றார்
உன்-ஊரேதுபேரேது உன்னுடையபேரென்ன
ஆருடையபுத்திரன்காண் அறியவுரையுமென்றார்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
என்தகப்பன்வாயுராஜர் என்தாயார்குந்தியம்மாள்
மந்தாரக்குந்தியம்மாள் பெற்றெடுத்தமகாராஜர்
குந்தியம்மாள்பெற்றெடுத்த குலமணிகளைவருண்டு

தருமராஜர்தம்பி தாக்குடையவீமனென்பார்
இவ்வார்த்தைகேட்டு ஏதுசொல்வான் நல்லனுமான்
உத்தமனே நாமிருவர் ஒக்கப்பிறந்ததால்
என்னுடையசண்டைக்கும் எவரும்பிழைத்ததில்லை
தம்பியென்றபாவனையால் தப்பிப்பிழைத்தீரே
மாளாமல்நீபிழைத்தாய் மதவீமனுகையால்
என்று-ஒருவர்க்கொருவர் உறவாடித்தான்பேசி
ஏதுவகையாக இங்குவந்தாய் தம்பியரே
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றார்
வெற்றிமதயானை வீமரவரேதுசொல்வார்
இந்தவனமதனில் வந்தோம்வனவாசம்
பாஞ்சாலன்பெற்றமகள் பஞ்சவர்ணநற்கிளியாள்
பாரிஜாதபூமலரைப் பார்த்தாசைப்பட்டாளாம்
காணாதபூமலரைக் கண்டாசைப்பட்டாளாம்
பாரிஜாதபூமலரைப் பறிக்கவென்று இங்குவந்தேன்
வேண்டிவந்தபூமலரை வேல்வேந்தேதாருமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அநுமந்தனேதுசொல்வான்
குருபாரிஷிவனத்தில் கோடியுண்டுகாவலர்கள்
ஏழுலட்சங்கிங்கிலியர் இவ்வனத்திற்காவலுண்டு
இத்தனைகாவலிலே எப்படிக்குப்போய்வருவாய்
அந்தரிஷியறிந்தால் ஆக்கினைசெய்திடுவான்
கொல்லநினைப்பாரே குடிகேடுவந்திடுமே
ஆருமறியார்கள் அவருடையபுஷ்பவனம்
என்செய்வேன் தம்பியரே எப்படிப்போய்நீவருவாய்
உனை-வால்முனையில்கட்டி நான் வனத்திலேவிட்டிடுவேன்
ஆருமறியாமல் அம்மலரை நீபறித்து
வாலையசக்கிவிட்டால் எடுத்துநான்வந்திடுவேன்

வீமன் அநுமான் வாலின் வழியாகச் சென்று
ராட்சதரை யெல்லாங் கொல்லுகிறது.

என்று-வாலினலேகட்டினன் மதகரியான்வீமனைத்தான்
வாலைக்கிளப்பி வனத்திலேபோகவிட்டான்

இந்தவனப்புதுமை எல்லாமறியவென்று
வாலேயவிழ்த்தானே மதகரியானப்போது
அசக்கிவிட்டானென்று அநுமாரும்வாங்கினர்
வீமனைக்காணமல் மெத்தமனந்தளர்ந்தார்
ஆயாசப்பட்டு அநுமந்தன்தானிருந்தார்
வெற்றிமதயானை வீமனவனேதுசெய்தான்
அந்தவனந்தனிலே அதிசயம்பார்க்கவென்று
சுற்றிவருகிறன் சுந்திரமாயவ்வனத்தே
மல்லிகைமுல்லை மலரோடுசண்பகமும்
பாரிசாதபுஷ்பமங்கே பரிமளம்வீசுகுது
வீசுகின்றபுஷ்பமரம் வேறுடனேதான்பிடுங்கி
படுத்துப்புரண்டானே பரிமளத்தைத்தானறிந்து
அந்தவனமெல்லாம் அதம்பண்ணனப்போது

**பூமரங்களை வீமன் அதம்பண்ண காவலர் கண்டு சண்டைபண்ணி இறந்தவர்போக மற்றவர் ரிஷியாருக்குச் சொல்லல்.**

அந்தவனத்திலே அநேகம்பேர்ராட்சதரும்
எல்லவருந்தான்வந்து எட்டினர்வீமரண்டை
வந்துவளைத்தார்கள் மதகரியான்வீமனுடன்
எட்டினர்சண்டை எழுப்புதுசமரும்அப்போ
ஒருவர்க்கொருவர் யுத்தங்களாகுது
வெற்றிமதயானை வீமன்வெகுண்டெழுந்து
அடிப்பான்கைதனிலே அநேகம்பேர்கீழேவிழ
அனந்தம்பேர்ராட்சதரை அதமாக்கிக்கொன்றுலே
இந்தவிதமாக எண்கோடிராட்சதரை
கொன்றுவதைத்தானே கோடானகோடிகளை
கொன்றவர்தான்போக நின்றதொருராட்சதர்கள்
குருபாரிஷியருகே கொப்பெனவேவோடிவந்தார்
அபயமபயமென்று அடிபணிந்துதெண்டனிட்டார்
ஏதுக்கபயம் என்னகருமமென்றூர்
ஆரோஒருராட்சதன் ஆங்காரமுள்ளவன்காண்

சிங்காரப்பூவனத்தைச் சீரழித்தான்பாவியவன்
மரங்களைத்தான்பிடுங்கி வனமெல்லாம்அதமாக்கி
ஏழுலக்ஷம்ராக்ஷதரை இருதுண்டாய்போட்டுவிட்டான்
இவ்வார்த்தைகேட்டு எரிக்குங்கதிரவன்போல்
காயுங்கதிரவன்போல் கண்சிவந்தார்குருபாரிஷியும்
கோபம்வருகுது கொடுங்காலருத்திரன்போல்
என்னுடையபூவனத்தில் எவரொருவர்வாரதில்லை
தேவர்முனிவர் தீண்டொணுப்பூவனத்தே
ஆரடாதூதுவரே ஆயிரம்பேர்போங்களென்றார்
கைப்பிடியாய்த்தான்பிடித்து கடுகெனவேகொண்டுவாங்க
என்றசத்தங்கேட்டு எழுந்தார்களாயிரம்பேர் [ள்
வாய்வேகமாகவே வனத்திலேபோயிறங்கி
ஆரடாராக்ஷதனே ஆங்காரக்கோபமுடன்
வனத்தையதமாக்கி வந்தவரைக்கொன்றவனே
எங்களுடஐயரும்மை இட்டுவரச்சொன்னரே
குலத்திற்பெரியவர்காண் குருபரமகாரிஷியும் [து
உன்னை-அழைத்துவரச்சொன்னர்காண்ஐயருமிப்போது
கடுகெனவேவாருமென்று கையைப்பிடித்திழுத்தார்
கையோடேகைபிடித்தான் கடியவேகையைவிட்டார்
ஆயிரந்தூதுவரை அரைக்ஷணத்தில்தட்டிவிட்டான்
அத்தண்டபேரையு மவனொருவன்கொன்றுவிட்டான்
நானொருவன்தப்பிவந்தேன் நல்வார்த்தைசேதிசொல்ல
என்றவன்கூறலுமே எழில்குருபரமுனிகேட்டு
கோவைப்பழம்போலே கூர்விழிகள்தான்சிவக்க
சவுரிபழம்போலே தன்னிரண்டுகண்சிவக்க
நெருப்புப்போல்கண்சிவக்க நெறநெறென்றுபல்கடித்து
சுவாசமனலெழும்பச் சுரணையொன்றுந்தோன்றமல்
தானகவந்து சபிக்கமனந்தானகி
ஏறினர்கனகதண்டி எழில்குருபரமுனியவரும்
பாரவனத்திருக்கும் பங்களாதன்னருகே
வருகிறவேளையிலே மாயனிதுவறிந்தார்

புஷ்பவனத்தை யழித்தவனை சபிப்பதற்காக குருபர
முனி வருகிறதை எம்பெருமாளறிந்து அனை
வரையும் சமாதானப் படுத்துதல்.

காவலர்கள்பஞ்சவர்க்குக் கைமோசம்வந்துதே
மோசங்கள்வந்து முடிந்துதேபஞ்சவர்க்கு
பொல்லாதகாலம் பிறந்துதேபஞ்சவர்க்கு
ஆகாதகாலம் ஐவருக்குவந்துதையோ
உள்ளங்கைநெல்லிக்கனி உருகுலைந்துபோகுதையோ
தோளில்செபமாலை தொண்டழிந்துபோகுதையோ
பெட்டியில்ஆபரணம் பெருமைகுலையுதையோ
எழில்தருபரிஷியுடனே எதிர்ப்பாரொருவரில்லை
மரமாக்கிகல்லாக்கி வனத்திலேகொன்றிடுவார்
ஐவரைக்கொன்றிடுவார் அனர்த்தம்வரநாளாச்சே
காத்ததுகாத்தோடே கடைப்போகக்காப்போமென்று
வட்டமாங்கருடனேறி வாராரேமாயவனுர்
ஐவரிருக்கும் ஆரணியம்வந்துவிட்டார்
சாயாம்புமன்னன் தருமருங்கண்டாராம்
கடுகயெழுந்திருந்து கார்வண்ணரைத்தொழுது
சரண்மடைந்தார்கள் தர்மமுடிராஜர்க்கள்
சிங்காதனங்களிட்டார் ஸ்ரீராமர்வீற்றிருக்க
இட்டசிங்காதனத்தில் ஏறியிருந்தாராம்
சாயாம்புமன்னர் தருமரவரேதுரைப்பார்
இன்னேரவேளையிலே எம்பெருமாளெங்குவந்தீர்
அடியாரைத்தேடியே ஆண்டவரேவந்ததென்ன
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றார்
அடியளந்தமாயவனுர் ஆதிமூலமேதுசொல்வார்
நால்வரிருக்கையிலே நல்லதம்பியெங்கேயென்றார்
வெற்றிமதயானை வீமராஜனெங்கேயென்றார்
தருமரறியேனென்றார் தம்பியரைக்காணேனென்றார்
தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
பாரிசாதபூமலரைப் பார்த்தாசைப்பட்டேனையா

பிரியமாய்வேண்டுமென்று பிணங்கினேன்வீமரண்டை
பூபரித்துவாரேனென்று போய்விட்டார்வீமராஜர்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
கைமோசம்வந்ததுகாண் கபடமில்லாத்தருமரே
ஐவர்பஞ்சபாண்டவரே அனர்த்தம்வரலாச்சே
குருபரரிஷிவனத்தில் கொப்பெனவேபோய்புகுந்தான்
மரத்தைபிடிங்கியவன் வனநாசமாக்கிவிட்டான்
ஏழுலட்சம்ராட்சதரை இருதுண்டாய்போட்டுவிட்டான்
அந்தவனத்தை அதமாக்கினபடியால்
கொல்லவருகிறார் கொப்பெனவேமாமுனியும்
தவத்திற்பெரியவர்காண் சகலகலைவல்லவர்காண்
வரத்திற்பெரியவர்காண் வல்லகுருபரரிஷியும்
அதிகசாபந்தானிடுவார் ஐவரைக்கொன்றிடுவார்
என்னசெய்யபோரேனென எம்பெருமாள்கூறுகையில்
அஞ்சிப்பயந்துமல்லோ ஆண்டவர்க்கேதுசொல்வார்
இத்தனைநாள்காத்தீரே இன்றுகையைவிட்டீரே
அரக்குமாமாளிகையில் ஐவரைக்காத்தீரே
அம்பலவாசலிலே அபிமானங்காத்தீரே
ஆபத்தைதீர்க்கவந்த ஆதிமூலம்நீரல்லவோ
உம்மைவிடவேறுதுணை உற்றதுணைதானுமுண்டோ
கார்க்கக்கடனுனக்கு என்றுமவர்கைதொழுதார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
குருபரரிஷியுடன்பேசிக் கொண்டுதான்நானிருப்பேன்
அப்போதுநாலுபேரும் அந்தவழிவந்திடுங்கள்
தருமரேயும்மைநான் தாழ்த்திவணங்குகிறேன்
உன்னைவணங்கினால் உபசாரவார்த்தைசொல்லும்
ஆரென்றுகேட்பாரே அந்தகுருபரமுனியும்
உம்மிலும்வல்லபிரான் உண்மையுள்ளமாமுனியும்
என்றுரைத்தாலே எழுந்துவணங்கிடுவார்
வணங்கிநமஸ்கரிப்பீர் வாழ்த்தியெடுத்தணைப்பீர்
வெற்றிமதயானை வீமனெதிர்வந்தாலும்

அடிபணிந்துதெண்டனிட்டு அவரைவணங்கிநிற்பேன்
அந்தரிஷியாரும் ஆரென்றுதான்கேட்பார்
உன்னிலும்வல்லபிரான் உண்மையுள்ளமகாமுனியும் [ல்
என்றுசொல்லிநானிருப்பே னிவ்விதமாய்செய்யாவிட்டா
அந்தகுருபரமுனியும் அனர்த்தம்பண்ணிபோட்டிடுவார்
ஆகையால்நான்போறேன் ஐயரேபின்புவாரும்
என்றுயெழுந்தாரும் இயலானமாயவரும்
வாரார்பெருமாளும் வனத்தூடுதான்கடந்து
குருபரமுனியெதிரே கொப்பெனவேவருகையிலே
மாயவரைக்காணுகையில் வணங்கினார்குருபரமுனி
ஒருவர்க்கொருவர் உறவாடிப்பேசினார்கள்
மாயன்பெருமாளே வனத்திலேயெங்குவந்தீர்
இந்தவனந்தனிலே யேதுவகையாகவந்தீர்
வந்தவகையதனை வாய்திறந்துசொல்லுமென
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
வனசாரியாகவே வந்தேன்குருபரமுனியே
வந்தயிடத்திலிந்த வனத்திலும்மைக்கண்டேன்காண்
இன்னேரவேளையிலே எங்குவந்தீர்சொல்லுமென
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளவன்காண்
வனத்திலேபோய்புகுந்து மரங்களைத்தான்பிடுங்கி
ஏழுலட்சந்தூதுவரை எல்லவரைக்கொன்றுவிட்டான்
பொல்லாதபாவியை கொல்லவென்றுபோறேன்காண்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரேதுசொல்வார்
உம்முடையவனத்திலே ஒருவர்வரப்போறதில்லை
தெய்வலோகத்தாரும் தீண்டாதபூவனத்தை
அமரர்சித்தர்முனிவராலும் ஆகாதுன்வனமழிக்க
ஐயரேஉன்றன்வனத்தை ஆதமாக்கும்பாலகனை
இட்சணமேகொல்லுகிறே னிட்டுவரச்சொல்லுமென்றார்
இருவருமாகவே யேகமாய்க்கொல்லவென்று
ஆடாதூதுவனே அழைத்துவாராட்சதனை
என்று அவர்பேசுகையில் இயலானதருமரவர்

நகுலனைத்தானனுப்பி நல்வீமர்க்கேதுரைப்பான்
அண்ணாரும்தம்பியரும் ஆதிநாராயணரும்
குருபாரிஷியருகே கூடிப்பேசியேயிருப்பார்
கொல்லவென்று தூதுவரை கூட்டிவரச்சொல்வார்கள்
அப்போது தூதுவர்க ளழைத்தும்மைத்தான்வருவார்
வந்தவுடனும்மை வணங்கிநமஸ்கரிப்பார்
அப்போது நீரண்ணு ஆசீர்வதிப்பீரென
சொல்லிவரச்சொன்னார்காண் துரிதமுடனேயென்று
தர்மரிவையுரைக்கத் தார்வேந்தன் நகுலனுமே
வாயுவேகமாகவே வந்துவிட்டான்வீமனண்டை
அண்ணுமதவீரா அண்ணருங்கிருஷ்ணரும்
இப்படிக்குச்சொல்லச் சொன்னார்களென்னையென்று
வீமனுக்குச்சொல்லி வந்துவிட்டான் நகுலனுமே
வனத்தில்தர்மரிடம் வந்துவிட்டான் நகுலனுமே
தம்பிமார்புடைசூழ தருமர்வருகையிலே
அங்கேவரப்பார்த்து அரிராமர்தானெழுந்து
அடிபணிந்துதெண்டனிட்டு அவரைவணங்கிநிற்க
பார்த்ததார்குருபாரிஷி பயந்தவருமேதுசொல்வார்
எந்தவூர்எந்தநாடு இவர்பேச்சைசொல்லுமென்றார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
ஜெபத்திலும்தபத்திலும் செய்திடுமோர்நிஷ்டையிலும்
அதிகமுடையவர்காண் அழகானதருமரிஷி
ஆதிகைலாசம் அரனாரிடந்தனிலே
உன்னுடையபேர்விளங்க ஓர்மணியடிபடுது
முனிவர்பேராலே மூன்றுமணியடிபடுது
அன்னதானங்களிலே அதிகமுடையவர்காண்
யோகத்திற்பெரியவர்காண் உன்னிலும்வல்லபிரான்
எரெடுத்துப்பார்த்தாலே எரிந்துவிடும்லோகமெல்லாம்
பொய்வசனஞ்சொல்லாதார் புகழானதர்மரிஷி
தர்மரிஷியாரைத் தழுவியணைந்துக்கொண்டு
சிங்காதனத்தில் சீராகவீற்றிருந்தார்

தக்கபுகழுடைய தர்மரிஷியேதுரைப்பார்
சாமிபெருமாளே சன்யாசியானவரே
இருவர்கள்சேர்ந்து இங்குவந்தவாறேது
என்றுதான்சொல்லுகையில் ஏதுசொல்வார்குருபரரிஷி
தர்மரிஷியாரே சாமியேநீர்கேளும்
என்னுடையதோட்டத்தில் எவருமேவந்ததில்லை
அந்தரலோகத்து அமரர்கள்வந்ததில்லை
ஆரோஒருராட்சதன் ஆங்காரமுள்ளவன்காண்
வந்துபுகுந்து வனத்தைப்பாழாக்கினன்
ஏழுலட்சம்ராட்சதரை இருதுண்டாய்போட்டுவிட்டான்
ஆகையாலிங்குவந்தேன் அவனையதமாக்கவென்று
இவ்வார்த்தைதான்கேட்டு யேதுசொல்வார்தர்மரிஷி
உம்முடையதோட்டத்தை அழிப்பாரொருவரில்லை
இங்கேயழையுங்கள் இக்ஷணமேசபித்திடுவேன்
என்றவர்சொல்லுகையில் இட்டுவந்தார்வீமனை
திடுக்கெனவேதானெழுந்து ஸ்ரீராமர்மாயவரும்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்வீமருக்கு
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
கண்டார்குருபரரிஷி கடுகியேயேதுரைப்பார்
அவன்-யாரென்றுதெண்டனிட்டீர் ஆயன்பெருமாளே
அனுலுங்கேளுமையா அரியரிஷியாரே
ஆதிகயிலாசம் அரனாரிடந்தனிலே
உம்முடையபேராலே ஒருமணியடிபடுது
தருமருடபோராலே மூன்றுமணியடிபடுது
அந்தரிஷிபேராலே ஐந்துமணியடிபடுது
யோகத்திற்பெரியவர்காண் உத்தமரிஷியாரும்
ஆதிசிவனிலும் அதிகமுடையவர்காண்
திருமூன்றுவேளையிலே சிவனைமறவாராம்
அவரிருக்குமிடங்களிலே அன்னக்களஞ்சியங்கள்
ஆரோஎவரோ அறியாமல்கொல்லவந்தேன்
இன்று அவர்நினைத்தால் எல்லவரைக்கொன்றிடுவார்

என்றுசொன்னபோதே எழுந்தார்தருமரிஷி
தருமரிஷிஎழுந்திருந்து சாஷ்டாங்கதெண்டனிட்டார்
குருபரமுனியும் கொப்பெனவேதெண்டனிட்டார்
அடியார்கள்செய்ததெல்லாம் அய்யாமனம்பொருந்து
தெரியாமற்செய்ததெல்லாம் தேவர்மனம்பொறுத்து
வனத்தையழித்ததொரு மகிமையைச்சொல்லுமென்றார்
ஆசனம்போட்டார்கள் அமர்ந்துகொலுவிருந்தார்
அப்போதுராமரிஷி அங்கவர்க்குயேதுசொல்வார்
குருபரரிஷிபெருமை குவலயத்திற்சொன்னார்கள்
அந்தப்பேர்சொல்லுகையில் அதிசயப்பட்டிருந்தேன்
பார்க்கப்பிரியமாக பார்தலத்தில்நான்திரிந்தேன்
அந்தவனத்திலே அனந்தங்கோடிராட்சதர்கள்
எந்தனைக்கொல்ல எழுந்தார்கள்தூதுவர்கள்
ஆரென்றுகேளாமல் அல்லவருங்கொல்லவந்தார்
ஆக்ருஷம்வந்ததினால் அல்லவரைக்கொன்றுவிட்டேன்
இதுவேகருமமென்றான் இயலானவீமரிஷி
குருபரமுனியவரும் கொப்பெனவேதெண்டனிட்டு
அடியார்கள்செய்ததெல்லாம் ஐயாமனம்பொறுத்து
பாக்கியம்செய்ததினால் பாதங்கிடைத்ததுகாண்
கருதிதவஞ்செய்தாலுங் காணஅரிதாகும்
பார்த்தபடியாலே பாவந்துலைந்துவிட்டேன்
வருகாததேவர்கள் வந்தபடியாலே
என்னுடையஆச்சிரமம் எல்லாரும்வாங்களையா
பாலடிசலுண்டு பழவர்க்கந்தான்புசித்து
போஜனஞ்செய்துநீங்கள் போவீர்கள்வாங்களென்று
குருபரரிஷியாரும் கொப்பெனவேதெண்டனிட்டு
பட்டுரத்னபாய்போட்டு பாய்மேலேவீற்றிருந்தார்
மாயவருந்தர்மரிஷி மதம்பெரியராமரிஷி
தம்பிமார்நால்வருடன் தாமுங்கொலுவிருந்தார்
ஐவருமொன்றாக இருக்கின்றவேளையிலே
குருபரரிஷியுமங்கே கொப்பெனவேதானெழுந்து

தூதுவரைத்தானழைத்துச் சொல்லுவாரோர்வார்த்தை
ஆயிரக்கலஅரிசி அடிசல்சமையுமென்றார்
காயுங்கனியுங் கடுகச்சமையுமென்றார்
நல்லபொறிக்கறியும் ராஜாக்கள்போஜனமும்
அடிசில்சமைத்தோமென அடிவணங்கிதெண்டனிட்டார்
குருபரமுனிகேட்டு கொப்பெனவேதாமெழுந்து
கடுகசரணமென்று கைக்குச்சலங்கொடுத்தார்
பலாயிலைதைத்துப் படைத்தார்களன்னமதை
சமைத்திட்டசாதங்கறி தானேபுசித்தார்கள்
உபசாரம்பண்ணியவர் உண்ணுங்கள்சாமியென்றார்
அத்தண்டபேரும் அமுதுபுசித்தார்கள்
சந்தனம்புட்பமும் தாம்பூலம்வாங்கிக்கொண்டார்
அத்தண்டபேரும் ஆலிங்கனஞ்செய்துகொண்டார்

பஞ்சவர்களைந்துபேரும் பெருமாளும்
அவரவர்களிடம் செல்லுகிறது.

போய்வாரோமென்றுமே போகநடந்தார்கள்
பர்ணசாலைதன்னருகே பஞ்சவர்கள்வந்தார்கள்
ஏழுலகையாண்டவராம் எம்பெருமாளேதுசொல்வார்
வெற்றிமதயானை வீமன்செய்தகாரியத்தை
நாமிருந்தபடியாலே நாடியுமைக்காக்கவந்தோம்
அல்லாதேயாமானுல் அனைவருமாண்டிடுவீர்
எங்கேயிருந்தாலும் இடறல்லோசெய்திடுவான்
ஆகாதகாரியங்கள் அழும்புகள்செய்யலாமோ
இந்தவனத்தைவிட்டு ஏகுங்களடுத்தவனம்
அந்தவனத்தில் ஐவரும்போயிருங்கள்
ஆண்டுகழிந்தது அவ்வனத்தில்வீற்றிருந்தார்
போய்வாரேமென்று போகலுற்றாரெம்பெருமாள்
எட்டாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு

எட்டாவது, குருபரமுனி வனம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது, ரோமரிஷி வனம்

அந்தவனத்தைவிட்டு அப்புறம்போனார்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
சோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னிவைத்தசீமாடு வனமேகுடியிருப்பாய்
சுபரோமரிஷிவனத்தில் துரிதமுடன்வந்தார்கள்
ஐந்தடுக்குப்பர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
நெஞ்சில்ரோமமாமுனியை நினைத்தார்தருமராஜர்

ஐவரிடத்துக்கு ரோமரிஷிவர தருமர் தனது துன்பத்தை அவரிடத்தில் சொல்ல அவர் அதற்கு வழிமானஞ் சொல்லுகிறது.

ஆசனம்போட்டு அடிபணிந்தார்தருமராஜர்
எந்தவூர்எந்தநாடு எங்கிருந்துஇங்குவந்தீர்
ஊரேதுபேரேது உத்தமனேசொல்லுமென்றார்
வந்தவயணமதை வகையாகச்சொல்லுமென்றார்
அப்போதுதருமலிங்கம் ஆண்டவருக்கேதுரைப்பார்
குருகுலவம்மிசத்தில் குந்திமைந்தரைந்துபேர்கள்
தருமன்நான்வீமனவன் தம்பிதனஞ்செயனும்
நகுலசகாதேவ ராஜர்களைவரையா
தருமாபுரமென்னும் தாரணியையாண்டிருந்தோம்
பங்கும்பகையாளி பாதிநாள்தாயாதி
சென்மப்பகையாளி சேனநாள்தாயாதி
பெரியதந்தைபிள்ளை பேரானதிரியோதிரன்
ஐவரைக்கொல்லவென்று ஆலோசனைதேடி
விருந்துண்ணவாருமென்று விருந்தோலைதானனுப்ப
மெய்யாகவோலையென்று விரைவாகப்போனோமையா



ஸ்ரீ கிருஷ்ணபகவான் மோகினி வுருவெடுத்து
அர்ச்சுனனை தடுத்தல்.

வாரவழிதனிலே வைத்தானே தண்ணீர்பந்தல்
வசநாபித்தண்ணீர்பந்தல் வைத்தானேபாவியவன்
கொல்லநினைத்தானே கொப்பெனவேயெங்களைத்தான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனையும் செய்தான்பெரும்பாவி
வருகிறவழிதனிலே வசிகளை நாட்டினான்
உருக்கூசிசெப்பூசி ஒருகோடி நாட்டினான்
எழுகூசியனேகமொடு இரும்பூசிதான்புதைத்தான்
கோடிமுள்ளுகத்திகளும் குறுக்கேபுதைத்துவைத்தான்
மாண்டுமடிவாரென்று வசிகளை நாட்டினான்
தப்பிப்பிழைத்தோமென்று சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
பொய்குழியைவெட்டியே போட்டுவைத்தார்சிம்மாதனம்
ஆழக்குழியிலே யாட்களையுள்நிறுத்தி
ஆயுதந்தன்னுடனே ஆள்நிறுத்திவைத்தானே
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
எண்ணெயிட்டுக்கொள்ளுமென எங்களுக்குச்சொல்லியவ
ஏழுலட்சமல்லர்களை எங்களிடந்தானனுப்பி [ன்
எண்ணெயிடச்சே எங்களுயிர்வாங்குமென்றான்
அதற்கும்பிழைத்தோமே ஆண்டவனார்புண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
அரப்புகிண்ணங்கைகொடுத்து அபிஷேகமாடுமென்றான்
நீரில்வசிநாட்டி வைத்தானே நிர்மூடன்
பாரவசிகளை பர்வதம்போல்நாட்டினான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பா
உண்ணுகிறசாதத்திலே ஒருக்கால்மருந்தையிட்டான்
குடிக்கிறதண்ணீரில் கொலைக்காரன்நஞ்சையிட்டான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்

பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
சோழிவிளையாடி சொக்கட்டான்சூதாடி
நாடுபறித்து ராச்சியத்தைகொள்ளை கொண்டான்
சீமைத்துரைத்தனமுந் தேசத்தைகொள்ளைகொண்டான்
ஐவரையுங்கெலித்து ஆஸ்தானமுங்கெலித்து
காற்றுநுழையாத கல்லரைக்கிடங்கில்வைத்தான்
ஐவருடதேவியரை அம்பலத்திற்கொண்டுவந்து
தமயனிடபெண்சாதி தாயென்றுயெண்ணமல்
மூலையிலிருந்தபெண்ணை முற்றத்திலிழுத்துவந்து
அம்பலமேற்றியவன் அவமானந்தாழ்வுபண்ணுன்
வாடியென்றும்போடியென்றும் வம்புசிலபேசினுன்
அரசர்சபைநடுவே அம்பலத்துரைகள்முன்னே
சொல்லாதுசொல்லியே துகிலுமுரிந்தானே
பாரவனவாசம் பரதேசம்போனபின்பு
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரிந்தபின்பு
அக்யாதவாசமல்லோ ஆரணியமொருவருஷம் [ன்
வேஷம்விட்டுவேஷமாறி வீற்றிருங்களென்றுசொன்ன
பதிமூன்றுவருஷஞ்சென்று பட்டணத்தில்வந்தாக்கால்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுதாரேனென்றுன்
ஆகையாலாண்டவரே ஆரணியம்வந்துவிட்டோம்
வருஷமொன்பதுபிறக்க வந்தோமிவ்வனந்தனிலே
உங்கள்வனந்தனிலே ஒருவருஷம்வனவாசம்
உம்மைவருந்தினேன் உண்மையுள்ளரிஷியாரே
இந்தவனந்தனிலே இருக்கசெலவருளும்
என்றல்லோதருமாவர் இறங்கியேதெண்டனிட்டார்
தவத்திற்பெரியவர்காண் சந்நியாசியானவரும்
உற்றுற்றுக்கேட்டாரே உரோமரிஷியாரும்
ஆயாசப்பட்டுமவர் அறவேமனஞ்சலித்து
இத்தனைவஞ்சனைகள் இடறுசெய்தபாவியவன்
கொல்லநினைத்தானே கொடும்பாவிதிரியோதிரன்
நாடுகொடுப்பதில்லை ராச்சியந்தருவதில்லை

சீமைகொடுப்பதில்லை சிங்காதனம்வருவதில்லை
ஐவர்தனிலேயொருவன் அரன்பதிபோனீரானால்
ஆதிசிவன்கையில் அஸ்திரப்பேறுபெற்றால்
மாற்றானைக்கொன்றிடலாம் வையகத்தையாண்டிடலாம்
அல்லாதேயாமானால் அரசுனக்குகிட்டாது
என்றதுசொல்லுகையில் யேதுசொல்வார்தருமராயர்
ஐவரிலேயொருவர் அவ்விதியையடையவென்றால்
ஆயர்சொல்லல்லாது ஆகாதொருக்காலும்
மாயன்சொல்லல்லாது ஆகாதொருக்காலும்
அவ்வார்த்தைதான்கேட்டு அரியரிஷியேதுசொல்வார்
மாயன்பெருமாளை வரவழையுமிங்கேயென்றார்

தருமர் எம்பெருமாளை நினைத்து தோத்திரம் பண்ணுகிறது.

சாயாம்புமன்னவனார் தருமரவரேதுசொல்வார்
அடியளந்தமாயவரே ஆண்டவரேவாருமென்றார்
ஏழுலகையாண்டவரே எம்பெருமாள்வாருமென்றார்
மச்சவடிவுகொண்டு மறுகடலில்பள்ளிகொண்டாய்
ஆலிலையிற்பள்ளிகொண்ட ஆண்டவரேவாருமென்றார்
தருமர்வருந்துகையில் சாமியவரறிந்து

தருமர் தோத்திரம் பண்ணினதை பெருமாளறிந்து தருமரிடம் வருதல்.

ஏழுலகையாண்டவனார் எம்பெருமாள்வாறாராம்
வட்டமாங்கருடனேறி மாயவனார்வந்துவிட்டார்
ஆயரைக்காணுகையில் ஐவருந்தானெழுந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
தேடிதும்பைமலரெடுத்து சிங்காதனம்போட்டார்கள்
சிங்காதனத்தின்மேல் ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
என்னையழைத்ததுயேதுகருமமென்றார்
மனதிலிருக்கின்ற மர்மமுறையுமென்றார்
சாயாம்புமன்னவனார் தருமரவரேதுசொல்வார்
மற்றொன்றுமில்லையையா மாயவரேநீர்கேளும்

இந்தவனத்திலே யிருக்கிறரோமரிஷி
மாமுனியைத்தெரிசித்து வணங்கியடிபணிந்தோம்
ஆரென்றென்னைக்கேட்டார் அரிதானமாமுனியும்
வந்தகருமங்களை வார்த்தையெல்லாம்நானுரைத்தேன்
துரியோதிரன்செய்த சேதியெல்லாம்நானுரைத்தேன்
அத்தனையுங்கேட்டு ஆயாசப்பட்டவர்காண்
துரியோதிரன்றன்னைச் செயிக்கவேவேணுமென்று
ஐவரிலேயொருவனையும் அரன்பதிபோகவென்றார்
பஞ்சவரிலொருவனையும் பரமன்பதிபோகவென்றார்
ஆதிசிவன்கையாலே அஸ்திரம்பெற்றுவந்தால்
மாற்றானைவென்றிடலாம் வையகத்தையாண்டிடலாம்
போங்களெனவுரைத்தார் புனிதமகாமுனியும்
ஆகையாலும்மை அழையுமென்றாரந்தரிஷி
மயங்குகின்றவேளையிலே வந்தீரேமாயவரே
இனிநடக்குங்காரியங்கள் எம்பெருமாள்சொல்லுமென
ஆயன்பெருமாளும் அவருமங்கேதுசொல்வார்
வாரும்பெரியவரே வனம்வாழ்தபோதனரே
ஐவரிடவார்த்தை அதிகாரமெந்தனுக்கேன்
பஞ்சவர்களுக்குப் பாட்டனிருக்கிறார்காண்
அவரையுமிங்கே அழைத்தாற்றெரியுமென்றார்
வேதவியாசரை வேண்டியழையுமென்றார்

ஐவரும் வியாசபகவானை நினைத்து வணங்க
வியாசர் வருதல்.

ஐவர்பஞ்சபாண்டவர்கள் அங்கெனவேதான்வணங்கி
வேண்டிநமஸ்கரித்து வியாசரைக்கைதொழுது
வாருமென்றுதானினைக்க வந்தார்வியாசரிஷி
சடையுஞ்சடையழகும் தம்பிரான்போலவாரும்
ஐவரிருக்குமந்த அடவியில்வந்தாரே
ஏழுலகையாண்டவனூர் எதிர்கொண்டார்வியாசருக்கு
ஐவரெழுந்திருந்து அடிபணிந்தாரிருவருக்கும்
ஆயரும்வியாசருமே ஆலிங்கனம்பண்ணிக்கொண்டார்

ஆசனத்துமேலாக அனைவோரும்வீற்றிருந்தார்
வேதவியாசருமே வேந்தரைப்பார்த்துரைப்பார்
என்னகருமமாக என்னையழைத்தீர்கள்
மனதிலிருக்கின்ற மர்மத்தைசொல்லுமென்றார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுரைப்பார்
பரமபதம்நோக்கி பாரதவஞ்செய்யவென்று
பாசுபதம்பேறுபெற்ற பாரதத்தைவெல்லவென்று
ஆரைநாம்போகசொல்வோம் அரன்பாதம்காணுதற்கு
தருமரைப்போகவிட்டால் சாமிபாதந்தானறியார்
வெற்றிமதயானை வீமனாலாகாது
நகுலசகாதேவ ராஜராலாகாது
அர்ச்சுனரைபோகவிட்டால் அரனாரைகாணவல்லான்
பரமசிவனருகில் பாசுபதம்பேறுபெற்று
வேணவரம்வாங்கி விஜயன்வரவல்லவன்காண்
என்றுமவர்யோசனையால் எழில்விஜயனைப்பார்த்து
பார்த்தீபா அருச்சுனரே பரமன்பதிநோக்கி
ஆதிசிவன்பதிக்கு அர்ச்சுனாபோறீரோ
கைலாசபதியிலே கர்த்தாவைநீகண்டு
அதிகவரம்பெற்று அர்ச்சுனரேவாருமென
காண்டீபரர்ச்சுனருங் கடுங்காலையேதுசொல்வார்
அடியேனையனுப்பிவைத்தா லவசியம்போய்வாரேன்
அப்போபெருமாளும் அருளாளரேதுசொல்வார்
கைலாசம்போனாலே கட்டழகாசொல்வேன்கேள்
ஏகும்வழிதனிலே இருப்பார்கள்வேணபெண்கள்
மின்னல்ரம்பையூர்வசியும் மேனகைதிலோர்த்தமையும்
அழகில்மிகுந்தபெண்கள் அனேகம்பேர்தானிருப்பார்
கண்டால்விடுவதில்லை கடுகியேமோகங்கொள்வார்
பார்த்தாசைப்பட்டாலே பார்த்தீபாவிடுவதில்லை
கண்மூன்றுடையவரைக் காணஅரிதாகும்
அல்லாதேயாமானல் அர்ச்சுனவுந்தனுக்கு
போரவழியிலே பெண்கள்தொடர்ந்தாலும்

தங்கைதமக்கையென்று தள்ளிவிட்டுப்போங்காணும்
பார்த்தாசைப்பட்டாக்கால் பரமசிவன்பாதம்
எத்தனைகாலம் இருந்துதவம்பண்ணுலும்
பாரத்தவஞ்செய்தாலும் பரமசிவன்காட்சிதாரார்
பயபக்தியாயிருந்தால் பரமசிவன்வந்தருள்வார்
அந்திபகலும் அதிராத்திரிவேளையிலும்
நினைவுமறவாதே சிவனை நிலைநிறுத்தும்
மோனத்துடனறிவை மூட்டிதவஞ்செய்தாலே
சிவனுர்மனமகிழ்ந்து சேனவரந்தருவார்
முப்பத்துமுக்கோடி முனிவரெல்லாங்கூத்தாட
நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகள் நடம்புரிய
பார்வதிசமேதராய் பரமசிவன்வந்திடுவார்
கோறும்வரங்களெல்லாம் கொடுப்பார்பரமசிவன்
அப்படிக்குப்போகவுன்னு லாகுமோவாள்விஜயா
மாயருரைகேட்டு வாள்விஜயனேதுசொல்வான்
ஆதிசிவனை நான் அரைநாழிமறந்திருக்கேன்
நேசமாய்ப்பெண்களென்மே லாசைமிகக்கொண்டாலும்
வாரவழிமறித்து வார்த்தைகள்பேசினுலும்
தாயென்பேன் தங்கையென்பேன் சாமியுநீயுமென்பேன்
கர்த்தாவைக்கண்டுநான் கடுகிவரம்வாங்கிவாரேன்
போகச்செலவருளும் போய்வாரேன்சாமியென்றுன்
அதுவுமேயல்லாம லாண்டவனேயெந்தனுக்கு
போரவழிதனிலே புதுமைநடந்தாலும்
சிவனுர்பதியிலே செய்யுந்தவமழிக்க
மழுவேந்துஞ்சிவனுரும் வஞ்சனைகள்செய்தாலும்
எதுவினைவந்தாலும் எந்தனுக்குத்துணைவாரும்
மகாதேவரைக்கண்டு வாங்கிவாரேன்வரங்களென்றுன்
அப்போதுமாயவரும் அவ்வார்த்தைக்கேதுசொல்வார்
போரவழியிலே பொற்கொடியாளேலகன்னி
ஆதிசிவனைநோக்கி அருந்தபசுசெய்பவள்காண்
அம்பலமான்போலே அழகில்மிகுந்தவள்காண்

அருச்சுனரேயுனையணைய அதிகவரம்பெற்றவர்காண்
உன்னைக்கலியாணம்பண்ண உகந்துயிருக்கிறாள்காண்
அவள்-வந்துவழிமறிப்பாள் வாள்விஜயமன்னவரே
மாதரைக்கண்டுநீ வார்த்தையொன்றுஞ்சொல்லாதே
தாயென்றுந்தங்கையென்றும் தார்வேந்தாசொல்லாதே
வரும்போதுபெண்ணேயுனை மாலையிட்டுக்கொள்வேனே
காயாம்புமேனியனே கண்டங்கருப்பழகா
தக்கதுசொல்லிப்போம் சாமியுடபதிக்கு
அதிகவரம்பேறுபெற்று அர்ச்சுனரேவரும்போது
ஏலகன்னிமாதரசை இளங்கொடியைமாலையிட்டு
வரும்போதுமாலையிட்டு வந்துவிடுமருச்சுனரே
மற்றொருவினைவந்தால் வந்துநான்காத்திடுவேன்
போய்வாருமென்றுசொல்லி பெருமாள்சிலவுதந்தார்

அர்ச்சுனன் சிவனைக்காணப் போவதற்கு
சோடித்தல்.

சூலபாணிரூபம்போற் சோடித்தானருச்சுனனும்
எந்தெந்தமுஸ்தீபு இளவிஜயன்தான்தரிப்பான்
ஐந்துசடைகொஞ்ச அழகுசடைமார்புரள
குத்துசடையங்கே குலுங்க அருச்சுனற்கு
உள்ளமெல்லாம்லிங்கம் உடம்பெல்லாம்வெண்ணீறு
ஆவியெல்லாம்லிங்கம் அங்கமெல்லாம்வெண்ணீறு
காவிகாம்பரமுங் கட்டினரைதனிலே
அன்றுரித்தமான்தோலும் அழகானபுலித்தோலும்
கன்றுபுலித்தோலும் கயிலாஸமான்தோலும்
காதிலேகுண்டலமுங் கையிற்கமண்டலமும்
ஏகவேஷ்டிதானணிந்தான் இயலான அருச்சுனனும்
பிரமமுடித்தாழ்வடங்கள் பெரியருத்திராட்சமணி
பஞ்சமணித்தாழ்வடமாம் பலவிதமாலைகளாம்
நாகமணிக்கங்கணமாம் லாடமிகச்சங்கிலியாம்
வேலாயுதஞ்சூலாயுதம் வெண்புலித்தோலாசனமாம்
அரைச்சுத்திகிண்கிணியாம் அழகுமயில்தாழ்வடமாம்

குருயோகபுத்தகமாம் கரையோடுகமண்டலமாம்
கஞ்சாகுடுக்கைகளாம் கௌதமர்சோளிகளாம்
சங்குசெயகண்டிகை தானணிந்தாரருச்சுனரும்
கணுக்கால்சிலம்புகளாம் காலில்மிதியடியாம்
அஷ்டாபரணமெல்லாம் அருச்சுனன்தான்தரித்தான்
வியாசருமாயவரும் மிக்கவரமொன்றுதந்தார்
ஒருவன்சிவனேயென்ன உலகச்சிவனேயென்னும்
ஐவருக்குளுந்தனுக்கு அனுக்கிரகந்தந்தோமென்றார்
போய்வாருமருச்சுனரே பொன்னுலகந்தான்தேடி

அர்ச்சுனன் ஈஸ்வரரைக் காணப்போகிறது.

அந்தச்சமயத்தில் அர்ச்சுனனுந்தானெழுந்து
எல்லாரையும்பணிந்து எழுந்தானருச்சுனனும்
போய்வாரேனென்றுசொல்லி போனானருச்சுனனும்
அருச்சுனன்போனபின்பு அங்குவியாசருமே
எல்லாரையும்வாழ்த்தி யிருவருமேபோய்நடந்தார்
மாயன்பெருமானும் வாழ்கருடன்மேலேறி
ஐவரைவாழ்த்தியே அரிராமர்போய்நடந்தார்
வில்வேந்தரருச்சுனரும் விரைவாய்வனந்தாண்டி
காடுசெடிதாண்டி கடுகியேவாருனே
அரனையவன்காணவென்று அதிதுரிதமாகவாருன்
சிவசிவாவென்றுசொல்லி சீக்கிரமாய்வாருனே

எம்பெருமாள் பெண்வேஷமாய் வருகிறது.

அருச்சுனன்நினைவறிய அரிராமரேதுசெய்வார்
மோககன்னிபெண்போல முடிமன்னர்வடிவுகொண்டார்
சின்னஞ்சிறியபெண்ணாய் ஸ்ரீராமர்வடிவெடுத்தார்
மின்னலொளிபோல மேகவண்ணர்வடிவெடுத்தார்
அல்லார்தலைமயிரும் ஐந்துமுழம்ஆறுமுழம்
ஆரணங்குகூந்தலது அயுபத்துநான்குமுழம்
காசாம்பழத்திலும் கருத்தகருப்பழகும்
ஈச்சம்பழத்திலும் இருண்டகருப்பழகும்

வாரிக்குழல்முடித்து மான்சவுரியுட்சொருகி
கொண்டைக்குக்குப்பியிட்டு கொலுசுமுத்துத்தொங்கவிட்
கம்மல்ஜிமிக்கிகளும் காதிலேயிட்டாளாம் [டு
கழுத்திலணிந்தாளாம் கனகமணித்தாழ்வடமும்
நல்லதொருபொன்காரை நடுக்கழுத்திலேதரித்தாள்
ஒற்றைச்சரடுகளாம் ஒருபுறமாம்பொன்சரிகை
இரட்டைச்சரடுகளாம் இராஜாங்கப்பொன்தாலி
முத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
அரைக்கிசைந்தஒட்டியாணம் ஆடைமேற்றரித்தாளாம்
காலுக்குத்தண்டைகளாம் கனத்தகொலுசுகளாம்
காலாழிபீலிகளும் கல்லணையும்புல்லணையும்
அழகுபணிகளெல்லாம் அலங்காரம்பண்ணினர்
கதம்பமுஞ்சந்தனமுங் கஸ்தூரிமணங்கள்வர
அன்னம்போலேநடந்து ஆண்டவனுர்வாராரே
அருச்சுனன்போனதொரு அடவியிலேவந்துவிட்டார்
அர்ச்சுனரைத்தான்பார்த்து ஆண்டவரேதுசொல்வார்
ஐயாபெரியவரே அறிவுள்ளசங்கமரே
தீரப்படித்தவரே தெளிவுள்ளசங்கமரே
புதிதாய்தவசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
எங்கிருந்துபோதீர்காண் இயலானசங்கமரே
கோடிசரணமையா கும்பிட்டேன்சுவாமியென்றூர்
உன்னழகும்பாவனேயும் உலகத்தில்கண்டறியேன்
உம்மைக்கண்டபோதே உருகுதேதேகமெல்லாம்
காமவிகாரத்தாற் களை தாங்கிப்போறேனேயா
மோகவிகாரத்தால் மூர்ச்சைபட்டுப்போறேனேயா
காமக்களையைத்தான் கலிதீர்க்கலாகாதோ
மோகவிகாரமதை மூர்ச்சையைத்தீருமையா
மன்மதனெய்தகணே மார்புருகிப்போகுதையா
சித்தசன்தொட்டகணே சிறுமார்புருகுதையா [தோ
அரைநாழியென்னுடனே அணைந்திருந்துபோகொணு
ஒருநாழியென்னுடனே உளமகிழ்ந்துபோகொணுதோ

மார்பைப்பார்தோளைப்பார் வண்ணவல்தனத்தைப்பார்
என்னழகும்பாவனையும் ஏறெடுத்துப்பாருமையா
என்னைப்போல்பெண்கள் எங்கேகிடைப்பார்கள்
தேடக்கிடையாது தேசத்திற்கிட்டாது
காணக்கிடையாது கலியுகத்திற்கிட்டாது
மார்போடேமார்பணைத்து மகாவிடாய்தீருமையா
தோளோடேதோளணைத்து சுகத்தைமெள்ளதாருமையா
பஞ்சணைமெத்தையிலே கொஞ்சிவிளையாடுமையா
குங்குமமெத்தையிலே கூடிவிளையாடுமையா
வாருமையாசங்கமரே என்றுவழிமறித்தாள்

அருச்சுனன் மோகினியைப் பார்த்து சொல்லுகிறது.

ஏறெடுத்துப்பார்த்தானே எழிலான அருச்சுனனும்
எண்ணுதுமெண்ணுகிறன் இளவிஜயனப்போது
மாயவனுர்சொன்னதொரு வார்த்தையெல்லாமெய்யாச்சு
என்றல்லோவாள்விஜயன் எதுரைப்பான்கன்னியற்கு
ஆதிகைலாசம் அரன்பதியேபோறேனம்மா
கர்த்தாவைக்காணவென்று கைலாசம்போறேனம்மா
வம்புகளைச்சொல்லாதே வழிதனைமறிக்காதே
பெற்றுவளர்த்ததொரு பேர்பெரியதாயலவோ
கூடப்பிறந்தவள்நீ கூட்டுப்பாலுண்டவள்காண்
தங்கைதமக்கையுநீ தாயாருநீயலவோ
தூரநில்லுமாச்சியரே தோதகங்கள்பண்ணாதே
இடையநில்லுமாச்சியரே தோதகங்கள்பண்ணாதே
என்றுநடந்தானே ஏறெடுத்துப்பாராமல்
மற்றுமந்தகன்னியரும் வார்த்தைகளேதுசொல்வாள்
சேரவென்றுவந்தேனே செல்லுமெனசொல்லலாமோ
பெண்சாதியென்றுவந்தால் பெற்றதாயென்னலாமோ
ஆத்தாளென்றென்னலாமோயடுத்துமுறைவந்தாக்கால்
தாயென்றுற்றுன்போமோ தனிமுறைதந்தாக்கால்
ஆண்டிக்குமுறையுமில்லை அரிவாளுக்குறையுமில்லை
எருதுக்குப்பேச்சுமில்லை இடையனிக்குமுறையுமில்லை

அரை நாழிபோகம் அமர்ந்திருந்தால்போகுமையா
மார்போடேமார்பணைந்து மருவிமுத்தந்தாருமென்றுள்
இன்னப்பழமிருக்க சேனதூரம்போவானேன்
கானலிலும்வெயில்களிலும் காட்டுவழிபோவானேன்
கட்டிலுண்டுமெத்தையுண்டு கால்பிடிக்கதாதியுண்டு
சோழிசதுரங்கம் சொக்கட்டானுடலாம்வா
தின்ன நல்லபாக்குமுண்டு செலவழிக்கரொக்கமுண்டு
வாருமையாசங்கமரே மனைக்குநாம்போயிருப்போம்
தானுகவந்தபெண்ணை தள்ளிவிட்டுப்போகலாமோ
போனுற்பலனுமில்லை பித்தனைக்காணரிது
விளையாடிப்போனுலே வித்தகரைக்கண்டிடலாம்
தனமிரண்டைக்காட்டியேதான் மறித்தாளேமோககன்னி
இவளுடையவார்த்தைகளை இளவிஜயன்தான்கேட்டு
கோபம்வருகுது கொல்லமனந்துணிந்தான்
வில்லெடுத்துகைபிடித்து வில்நாரிபூட்டிவிட்டு
அம்புறாத்தூணியிலே அலகம்பைத்தானெடுத்து
கொல்லநினைத்தானே கோதைமறைந்தாளே

அருச்சுனன் பாணமெடுக்க பெண்மறைந்து
பெருமாள் வருதல்.

கோபாலகிருஷ்ணரவர் கொப்பெனவேமாயவனுர்
கண்டானேவாள்விஜயன் கர்த்தனுடமாயையென்று
இளவிஜயன் அர்ச்சுனனு மினியவனம்போகையிலே
மாயன்பெருமாளும் வாராரேயந்தவழி
வெட்டமாங்கருடனேறி வாராரேயந்தவழி
கண்டானே அர்ச்சுனனும் கடுகியவன்தெண்டனிட்டான்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
இன்னேரமெங்கிருந்தீர் இயானவள்விஜயா
காலையந்த அர்ச்சுனனும் கடுகியேயேதுசொல்வான்
மாயவரேசொன்னதுநீர் வனத்திலேமெய்யாச்சு
ஆரோஒருதெய்வகன்னி அநேகநேரமெனைமறித்தாள்

வந்துவழிமறித்து வார்த்தைகளாடினளே
சொல்லாதுஞ்சொல்லியே தோதகங்கள்பண்ணுளே
என்றுசொல்லிஅர்ச்சுனனும் ஏறெடுத்துப்பார்த்தானே
கன்னிஇளமையுமே கழுத்திலேகரிமணியும்
கண்டானேவாள்விஜயன் கடுகிநகைத்தானே
அனைத்துங்கொலைத்தீரே ஆயன்பெருமாளே
மையைக்கொலைக்க மறந்தீரோமாயவரே
மணியையவிழ்க்க மறந்தீரோமாயவரே
பொட்டைக்கலைக்க மறந்தீரோபுண்ணியரே
ஆபரணந்தான்கழற்ற மறந்தீரோ அச்சுதரே
என்னகோலம்வந்தாலும் ஏற்குமையாஉந்தனுக்கு
அப்போதுமாயவரும் அருளாளரேதுசொல்வார்
ஆயன்பெருமாளும் அங்கெனவேயேதுசொல்வார்
மைத்துனஉந்தனுட மனவலுமையென்னசொல்வேன்
அருச்சுனஉந்தனுட ஆண்மையுமென்னசொல்வேன்
வாள்விஜயாஉந்தனுட மனதறியவந்தேன்காண்
கர்த்தாவைக்காணவல்லாய் கடுகிவரம்வாங்கவல்லாய்
பரமனைக்காணவல்லாய் இனியவரம்வாங்கவல்லாய்
ஈஸ்வரனைக்காணவல்லாய் இனியவரம்வாங்கவல்லாய்
போய்வாருமென்றுசொல்லி பெருமாளனுப்பினர்
ஆணழகுமன்னன் அருச்சுனராஜதுரை
விடைபெற்றுக்கொண்டானே வேந்தனருச்சுனனும்
அருச்சுனன்போனபின்பு அரிராமரேதுசெய்தார்
வட்டமாங்கருடனேறி வந்துவிட்டாரெம்பெருமாள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
சில்லென்றுபூத்ததொரு செடியும்வனந்தாண்டி
துவாரகாபுரிதனக்கு சுவாமியும்போய்ச்சேர்ந்தார்

ஒன்பதாவது, ரோமரிஷிவனம் முற்றிற்று.

## பத்தாவது, பேரண்ட வனம்

பத்தாம்வருடம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னிவைத்தசீமாடு வனவாசம்போறார்கள்
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோறார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
பேரண்டவனத்திலேதான் பிரியமாய்ப்பஞ்சவர்கள்
வந்தார்குடித்தனமாய் வனத்திலேவாசம்பண்ண
ஐந்தடுக்குபர்னசாலை ஆணழகருண்டுபண்ணார்
ஏழடுக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
பூதநாதனைத்தேடி போரானேவாள்விஜயன்
அரகராவென்றுசொல்லி அடித்தானேசெயகண்டிகை
ஓம்சிவாவென்றுசொல்லி ஒலித்தானேசங்குதனை
ஒருவன்அரனேயென்ன உலகம்அரனேயென்னும்
ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
இருண்டவனத்திலே இருக்கிறபேரண்டன்
அனேகதூரம்போயிருந்தா னுகாரந்தேடிவர

### பேரண்டச்சி அர்ச்சுனன்மேல் மோகித்தல்.

பேரண்டராட்சதன்றன் பெண்சாதியானவளும்
தன்னந்தனியவளாய் தானிருந்தாள்மண்டபத்தில்
அரகராயென்றசத்தம் ஆரணங்குதான்கேட்டு
கொத்தளம்போல்முக்கழகும் மத்தளம்போல்புட்டங்களு
ளுன்மூஞ்சிகுரங்குதலை ஓணன்முதுகழகாம் [ம்
செம்பட்டமயிரழகாம் சிங்காரப்பல்லழகாம்
பனைமரம்போற்பல்லழகாம் பர்வதம்போற்கண்ணழகாம்

கழுத்தைசுற்றிகண்டமாலை இடுப்பைசுற்றியரைகடுவன்
துடையைச்சுற்றிஒட்டுப்புண் தோளைசுற்றிபெருஞ்சிரங்கு
நின்றாளேயாமாகில் நிலத்தில்விழும்இரண்டுதனம்
இன்னமுஞ்சொல்லுகிறேன் இரண்டுதனத்தழகை
கப்பலின்மேல்வாரதொரு கொப்பரைத்தேங்காய்போல்
தோணிமேல்வாரதொரு சொரக்காய்போல்தானிருக்கும்
பல்லிலேபடிந்திருக்கும் பாசிபடர்த்தாமரைப்போல்
சீழுஞ்செலநீரும் தேகமெல்லாம்நாற்றம்வரும்
காயமதிற்படிந்தழுக்கு கற்றாழைநாற்றம்வரும்
அருகேவந்துநின்றாலே அசங்கிதநாற்றம்வரும்
மரவுரியைத்தான்உடுத்தி வாராளேபேரண்டச்சி
ஆண்டிபெரியவர்தன் அருகில்வந்தாள்ராட்சசியும்
பண்டாரம்பெரியவனைப் பார்த்தாசைப்பட்டாளாம்
வாயைத்திறந்துமவள் வார்த்தைகளேதுசொல்வாள்
நில்லுமையாசங்கமரே நெடுந்தூரம்போகாதே
உன்னுசைபட்டதல்லால் உலகில்வேறாசையில்லை
மார்பைப்பார்தோளைப்பார் மருவிவிளையாடவேபார் [ம்
அரைநாழியென்னுடனே அமர்ந்திருந்துபோங்காணு
வருவீர்வருவீரென்று வழிபார்த்துகாத்திருந்தேன்
மன்மதபாணமது மார்புருகிப்போகுதையா
மோகவிகாரமதை மூர்ச்சையைத்தீருமையா
என்னைப்போல்பெண்ணுமக்கு எங்கேகிடைப்பார்கள்
தேடப்புறப்பட்டாலும் தேசத்திற்கிட்டாது
மார்போடேமார்பணைந்து மருவிவிடாய்தீருமையா
தோளோடேதோளணைந்து சுகங்கள்தெளியுமிப்போ
பஞ்சணைமெத்தையிலே கொஞ்சியிருப்போமென்றாள்
ஏறெடுத்துப்பாரானே என்னென்றுங்கேளானே
அரகரா அரனேயென்று ஆண்டியுந்தானடந்தான்
காமவிகாரத்துடன் கடுகியந்தராட்சசியும்
பேரண்டராட்சசியும் பின்னேதுவார்த்தைசொல்வாள்
கண்டாசைபட்டுவந்தேன் கண்ணெடுத்துப்பார்க்கவில்லை



அர்ச்சுனன்மீது காதல்கொண்ட அரக்கியின் கணவனைக்கொன்று
தெய்வப்பெண்கள் வேண்டுகோளால் மீண்டும் அவனை,யெழுப்பல்.

என்னென்றுகேட்கவில்லை ஏறமுகம்பார்க்கவில்லை
என்னை-பாருமல்போனீரோ பாதகனுகையாலே

பேரண்டச்சி அர்ச்சுனனுடன் சபதங் கூறுதல்.

என்புருஷன்வந்தபின்பு இட்டுன்னைவரவழைத்து
என்னெண்ணப்பிரகாரம் இருந்துமருவிடுவேன்
என்றுசபதமிட்டு இயலானராட்சசியும்
காமவிகாரக் களையுடன்தானடந்தாள்
மோகவிகார மூர்ச்சையுடன்தான்போனுள்
வளையலைத்தானுடைத்து மார்பெல்லாந்தான்கிழித்தாள்
முகத்திலறைந்துகொண்டு மோதிபுலம்புகிருள்

பேரண்டச்சி யழுதகுரல்கேட்டு பேரண்டன் வருதல்.

அழுதகுரல்சத்தம் அரிந்தானேபேரண்டனும்
ஏதுக்கழுகிருள் என்னுடையதேவியரும்
வயிறுபசியாகி வாய்விட்டழுதாளோ
என்று-ஐம்பதுயானை அவன்கையில்தானெடுத்து
சினந்துஎறிந்தானே தேவியருகில்விழ
பின்னும்புலம்புகிருள் பேரண்டராட்சசியும்
ஏதுக்கழுகிருள் இளங்கொடியாளென்தேவி
இத்தனை நாளில்லாம லின்றுபுலம்புவதேன்
அறிந்துவருவோமென்று ஆங்காரமுள்ளவனும்
ஏதுக்கழுகிருய் என்னுடையதேவியரே

பேரண்டச்சி தன்புருஷன் தன் வரலாறுகூறிச்
சண்டைக்குப் போகச்சொல்ல பேரண்டன்
சண்டைக்குப் போகிறது.

பேரண்டராட்சசியாள் பிரியமுடனேதுசொல்வாள்
மாலையிட்ட நாள்முதலாய் மனதுகுறைவந்ததில்லை
நான்-பெண்பிறந்தபாவமது போதுமையாஎந்தனுக்கு
என்பாவிதலையிலே பத்கெழுத்தைஎழுதிவிட்டான்
செல்வத்தலையிலே செப்போடெழுதினது
அல்லல்படவோ அமைத்துவிட்டார்பிரமதேவர்

ஐயையோபெண்பிறப்பு ஆகாதுயென்னசெய்வேன்
நான்-புத்தியில்லாவரசியல்லோ பேரண்டராக்ஷதனே
வாரவழிதனிலே வைத்தீர்சமுசாரம்
என்னைத்தனியேவிட்டு இனிபோகஞாயமுண்டோ
உன்தேவியாயிருந்தும் ஊருக்குப்பெண்டாவேனோ
சுந்தரப்பெண் நானல்லோ சொரூபமுடையவள்காண்
அழகில்மிகுந்தவளை ஆரோஒருவனவன்
பத்தினியாளென்றுமே பாராமலிங்கொருவன்
உத்தமியாளென்றுசொல்லி உணராமலிங்கொருவன்
ஆண்டிபெரியவன்காண் அரண்மனையில்வந்தார்காண்
வந்தபெரியவரை வணங்கியேதெண்டனிட்டேன்
தன்-கஞ்சாகுடுக்கைக்கு தண்ணீர்கொண்டுவாருமென்றார்
தண்ணீர்நான்கொடுத்தேன் சரணங்கள்நான்செய்தேன்
நெருப்பெடுத்துவாவென்றார் நெருப்பைகொடுத்தேனே
அள்ளியேநீறுதந்தா ரணிந்துகொண்டேன்நெற்றியில்
வாடிநீபோடியென்றான் வலதுதுடையேறுமென்றான்
கையைப்பிடித்திழுத்து கடுகிமருவுமென்றான்
பொல்லாத்தனங்கள்செய்துபோய்நடந்தான்சங்கமனும்
அவனை-கைப்பிடியாகவே கடுகியேகொண்டுவாரும்
அல்லாதேயாமானல் அநீதமாய்மாண்டிடுவேன்
பேரண்டச்சிஅழுகையிலே பேரண்டன்தானெழுந்து
எழுந்தானேராட்சதனும் என்றுமில்லாக்கோபமுடன்
ஆலமரம்பிடுங்கி தோளிலேவைத்தவனும்
கோபித்துக்கண்சிவந்து கொப்பெனவேயோடிவந்தான்
நில்லுநில்லுசங்கமரே நெடுந்தூரம்போகாதே
ஆரடாபண்டாரம் அறிவுகெட்டசங்கமரே
என்னுடையபெண்சாதியை எந்தனிருகண்மணியை
அழகில்மிகுந்தபெண்ணை ஆகடியஞ்செய்ததென்ன
வழியிலேவீடுகட்டி வனத்திற்குடியிருந்தால்
பிச்சையெடுக்கிறவன் பெண்டோபிடிக்கிறவன்
அரைநாழிக்கொள்ளையிலே அவசியங்கொன்றிடுவேன்

பேரண்டனுக்கும் அருச்சுனனுக்கும் சண்டை.

இக்ஷணப்போதையிலே எமபுரஞ்சேர்த்திடுவேன்
என்றேஉருமினன் இயலானராக்ஷதனும்
ஆனலழகுமன்னன் அருச்சுனனே தசொல்வான்
வாடாநீராக்ஷதனே வார்த்தையொன்று நீர்கேளாய்
ஆதிசிவன்பாதம் அரன்பாதங்காணவென்று
பாரத்தபசுபண்ண பரமர்பதிபோகையிலே
வாரவழியிலே வழிமறித்தானுன்தேவி
கண்டாசைப்பட்டேனென கடுகிமையல்திருமென்றாள்
பொல்லாதவள்சேர்ந்து போங்களென்றானுன்தேவி
நான்வாயைத்திறக்கவில்லை வண்ணமுகம்பார்க்கவில்லை
என்னென்றுகேட்கவில்லை ஏரெடுத்துப்பார்க்கவில்லை
வீணவார்த்தையிது மேல்போட்டுவாருதே
அனியாயச்சண்டையிது அமரதுசெய்யாதே
என்னோடெதிர்த்தாலே இருதுண்டாய்போட்டிடுவேன்
பெண்சாதிவார்த்தையினல் பிராணனொழிக்காதே
மாளுவதுதர்மமல்ல மன்னுநடவுமென்றான்
எத்தனைசொன்னாலும் இரங்காமல்ராக்ஷதனும்
எதிர்த்தானமர்ப்போரு இருண்டவனம்நடுங்க
கண்டானருச்சுனனுங் கண்கள்சிவப்பேற
கோபம்பெரிதாகி கொல்லமனந்துணிந்தான்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
காதுமட்டாய்தானிழுத்துக் கைக்கணையைவாங்கினன்
பேரண்டராக்ஷதன்றன் பிராணனைப்போக்கவென்று
அலகப்பைதானெடுத்து அஸ்திரத்தைப்பூட்டினன்
மந்திரஉபதேசஞ்செய்து மார்புரளவாங்கினன்
மேலிட்டுராக்ஷதன்மேல் விழுந்தது அஸ்திரந்தான்

அர்ச்சுனன் பாணத்தால் பேரண்டன் தலைவிழ
பேரண்டச்சி புலம்பல்.

பேரண்டன்தன்தலையை பிடரிவிட்டுத்தானறுத்து
அறுத்ததலைகீழேவிழா தாகாயமாயெழும்ப

மற்றொருகணை தொடுத்தான் வாள்விஜயனருச்சுனனும்
அறுத்ததலையுமல்லோ அவன்தேவிவாசலிலே [ஜயன்
கொண்டுபோய்போடுமென்றான் கொப்பெனவேவாள்வி
தள்ளிப்போய்விட்டதுவே சண்டாளன்தன் தலையை
அவன்மாண்டபிற்பாடு அருச்சுனன்தானடந்தான்
அந்தசமயத்தில் அடைவானபேரண்டச்சி
தலையைப்பார்த்துப்பேரண்டச்சி தன்புருடன் தலையென
கண்ணீரைச்சோரவிட்டுக் கதரிப்புலம்புகிறாள் [வே
விழுந்தாளெழுந்தாள் மண்மேலேபுரண்டழுதாள்
மாரடித்துத்தோளடித்து மண்தூத்தியேயழுதாள்
கோவென்றசப்தமுடன் குமுறிப்புலப்புகிறாள்
மலையேபருவதமே மண்மேலேசாய்ந்தீரோ
மேகமலையே நீ விண்ணுலகம்சேர்ந்தீரோ
நீமடியுங்காரியங்கள் நிர்ணயத்தைநானறியேன்
வச்சிரத்தூணே நீர் மண்ணோடுளுத்தீரோ
கல்லான தூணைக் கரையானெரித்ததுவோ
இரும்பான தூணே நீ இன்றுவிழுந்தாயோ
எங்கேயோவானம் இடிந்ததுயென்றிருந்தேன்
தப்பாமல்வானந் தலையிலிடிந்ததையோ
தெருவிலேகையைவிட்டுத் தினகரனைசாட்சியென்றாள்
சந்தியிலேகையைவிட்டுச் சந்திரனைசாட்சியென்றாள்
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகங்காணுதையோ
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
மலையேபருவதமே மாண்டுமடிந்தீரோ
செம்மலையேபருவதமே செத்துமடிந்தீரோ
செத்துமடிந்தீரோ சிவலோகஞ்சேர்ந்தீரோ
மாண்டுமடிந்தீரோ வைகுந்தஞ்சேர்ந்தீரோ
நீமடியுங்காரியத்தை நிண்ணயங்கள்தானறியேன்
சந்தனமிருபுஜத்தைச் சரியவெட்டிப்போட்டாரோ
குங்குமமிருபுஜத்தைக் குளிரவெட்டிப்போட்டாரோ

கொண்டைபரிகொடுத்த கோழியைப்போலானேனே
செட்டைப்பரிகொடுத்த செம்பருந்துபோலானேன்
உன்னைப்பரிகொடுத்து ஊதாரிபோலானேனே
அடிவானத்திடிபோலே அழுதுபுலம்புகிருள்
பேரண்டராட்சசியாள் பிரண்டுபிரண்டழுதாள்

## பேரண்டச்சி அழுகிறதுகேட்டு தெய்வ கன்னிகள் வருதல்.

அந்தச்சமயத்திலே அழகானதெய்வகன்னி
எழுபேர்சத்தகன்னி இளங்கொடிமாதர்களும்
தீர்த்தங்களாடவென்று தெய்வகன்னிவாருர்கள்
அழுதகுரல்கேட்டு ஆயாசப்பட்டார்கள்
ஒருவர்க்கொருவர் ஒற்றுமையாய்ப்பேசுகிருர்
ஆரோதெரியாது அழுதுபுலம்புகிருள்
இத்தனை நாள்வரையில் இவ்வோசைகேட்டதில்லை
அழுதகுரல்கேட்டு அப்புறம்போகொணுது
அழுதவிடத்திலே யாவரும்போவோமென்று
புலம்புமிடத்திலே பொட்டெனவேவந்தார்கள்
ஆரடிமங்கையரே அழுதுபுலம்புவதேன்
பேரண்டராட்சசியும் பிரண்டழுதுசொல்லலுற்ருள்
ஆரைக்கழுத்தி அரைக்கழுத்தியானேனே
கோரைக்கழுத்தி குறைக்கழுத்தியானேனே
மஞ்சளிழந்தேன் மணமிழந்தேன்பூவிழந்தேன்
தாலிச்சரடிழந்து தலைவிரிக்கநாளாச்சே
ஏதென்றுநானுரைப்பேன் என்னுடையஅக்கமாரே
ஆரோவொருபண்டாரம் அரன்பதிக்குப்போருன்காண்
வாடியென்றுபோடியென்று வம்பாகபேசினனே
சொல்லாதுஞ்சொல்லியே சேர்த்துஅணையவந்தான்
புருஷனுடனுரைத்தேன் போய்க்கேட்டார்சங்கமனை
என்-கணவனைக்கொன்றுவிட்டு கடிகியேபோனுர்காண்
மங்கிலியப்பிட்சை வரங்கொடுத்துப்போங்களம்மா

என்றவுரைகேட்டு இயலானகன்னியர்கள்
ஆயாசப்பட்டுமல்லோ அதிகமனஞ்சலித்து

தெய்வகன்னியர் அருச்சுனனைக்கண்டு
இரக்கஞ் சொல்லல்.

சங்கமரைத்தேடி நடந்தார்கள்தையலர்கள்
ஐயாபெரியவரே அரிவைப்படைத்தவரே
திரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
புதிதாய்தபசுபண்ணி புத்திமெத்தகற்றவரே
நில்லும்நில்லும்சங்கமரே நெடுந்தூரம்போகாதே
போரவழிதனிலே பொல்லாங்குசெய்யலாமோ
சிவவதைபண்ணி சிவன்பதியேபோகலாமோ
ஆதிசிவன்வாழும் அரன்பதிக்குப்போனாலும்
கோரும்வரத்தைக் கொடுப்பாரோபரமசிவன்
வீணையாசங்கமரே இப்படிக்குச்செய்யலாமோ
ஆகாதகாரியங்கள் அழிவுதேடிப்போகலாமோ
என்றுமறித்தார்கள் இளங்கொடிமார்கன்னியர்கள்
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமேது சொல்வான்
சிவனார்பதிக்குநான் தெரிசிக்கப்போறேனென்னை
அவள்-வந்துவழிமறித்து வார்த்தைகள்பேசினளே
சொல்லாதுஞ்சொல்லியே சேர்ந்துஅணையுமென்றுள்
அவள்புருஷன்வந்தென்னை அநீதமாய்கொல்லவந்தான்
எத்தனைசொன்னாலும் இரங்காமற்கொல்லவந்தான்
ஆயுதத்தாலே அறுத்தேனவன்தலையை
என்மேலேகுற்றமுண்டோ ஏனேதடுக்கிறீர்
இருவர்விசேஷமெல்லா மெதிராகக்கேட்டிடுவோம்
வாருமையாவென்றுசொல்லி வரவழைத்தார்சங்கமரை
பேரண்டராக்ஷசியாள் பிரண்டுமழுமிடத்தே
அருச்சுனராஜாவை அழைத்துவந்துவிட்டார்கள்
தெய்வலோககன்னியர்கள்தேன்மொழிமாரேது சொல்வார்
இருவரிடவார்த்தைதன்னை எல்லாமிவர்கேட்டு [ர்
ஐயாபெரியவரே அரிவைப்படைத்தவரே

புதிதாய்தபசுபண்ணி புத்திமெத்தகற்றவரே
பெண்ணின்பிழையைப் பொறுத்தருளும்புண்ணியனே
அடியார்கள்செய்தபிழை ஆண்டவாநீபொறுத்து
மங்கிலியப்பிட்சைதந்து மகாதேவர்பதிபோனல்
ஆதிசிவனர் அதிகவரமருள்வார்
எங்களைப்பற்றியே இவனையெழுப்பிவிடும்
என்றுவணங்கியே இறங்கியேதெண்டனிட்டார்
அருச்சுனராஜாவும் அதிகமனமகிழ்ந்து

## தெய்வகன்னியர் அருச்சுனனைகேட்க அருச்சுனன் மகிழ்ந்து தேவேந்திரனுக்கு ஓலை எழுதி அனுப்புதல்.

சேமக்குருத்தோலை சிக்கெனவேதான்வாரி
வாரியவோலையிலே வக்கணைகள்வைத்தெழுதி
என்ளவென்றுவோலை எழுதுகிறனர்ச்சுனனும்
அமராபதியாளும் அங்கபிரானென்தகப்பா
தெய்வலோகமாளும் தேவேந்திராயென்தகப்பா
மந்தாரக்குந்திபெற்ற வாள்விஜயனருச்சுனனும்
ஆதிசிவன்பாதம் அடியேனுங்காணவென்று
வாறவழிதனிலே வதைத்தெரிந்தேன்பேரண்டனை
அமரதுசெய்தான்காண் அறுத்தேனவன்தலையை
பேரண்டன்தன்னுயிரை பிரமலோகத்திருந்தாலும்
இங்கேயிருந்து எமலோகம்போனலும்
அவனுடையதன்னுயிரை அனுப்பிவையுமென்தகப்பா
எங்களைப்பற்றியே இலட்சணமனுப்பிவையும்
அல்லாதேயானல் அமராபுரம்வருவேன்
தேவேந்திரன்பதியை சிதறவேகொள்ளைகொள்வேன்
ஆடுகொள்ளைமாடுகொள்ளை அழகானவீடுகொள்ளை
ஐயாவும்பட்டணத்தை அனைத்துமேகொள்ளைகொள்வே [ன்
என்றுமெழுதினன் இயலானவோலையிலே
ஓலைச்சுருள்மடித்து உகந்துசெந்திரிக்கையிட்டு
வல்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து

அந்தச்சுருளோலை அம்புவாயில்கொடுத்து
ஐந்துமணியசக்கி அம்பேநீபாயுமென்று
மந்திரதூபமிட்டு வாங்கிவிட்டானஸ்திரத்தை
மார்புரளத்தானெடுத்து தோள்புரளவாங்கிவிட்டான்
வருகுதுஅஸ்திரந்தான் வானுலகந்தான்தேடி
தேவேந்திரனுடைய தேசுமாணிக்கம்பத்திலே
வாள்விஜயனஸ்திரத்தால் மணியசைத்தாடிற்று
மணிக்கூண்டருகேவந்து வாங்கினான் அஸ்திரத்தை

அருச்சுனர் ஓலையைத் தேவேந்திரன் பார்த்து
எமனிடத்தில் சென்று கெண்டபேரண்டன்
உயிரை வாங்கி அனுப்புதல்.

செந்திரிக்கைஓலைச்சுருள் தேவேந்திரன்விரித்து
எழுதியவாசகத்தை இந்திரனும்தான்படித்தான்
அதிலிருக்கும்லட்சணத்தை யாவுமறிந்துகொண்டான்
திடுக்கெனவேதானெழுந்து தேவேந்திரன்வருவான்
எமபுரந்தேடி எமனருகிற்போய்ச்சேர்ந்தான்
கண்டானேஎமனும் கடுகியெழுந்திருந்து
எதிர்கொண்டழைத்துமே இட்டுவந்தான்மாளிகையில்
ஏதுகருமமாய் இங்குவந்தீர்ராஜாவே
அத்திமரம்பூத்ததுபோ லதிசயமாய்த்தோணுதுகாண்
என்றபொழுதேயவ ரேதுசொல்வாரிந்திரரும்
எல்லாருயிர்வாங்கும் எமதர்மாநீர்கேளும்
பொல்லாதபாவியவன் புகலும்பேரண்டனுயிர்
இங்குவந்ததுண்டானால் எந்தனுக்காய்தயவுபண்ணும்
என்றுஉபசாரணை இரக்கமாய்த்தானுரைத்தார்
செக்கிலேபோட்டு திருப்புகிறான்னேரம்
எண்ணெயும்புண்ணுக்கா யேற்படுத்தும்போதையிலே
பேரண்டன்தன்னுயிரை பொட்டெனவேதான்கொடுத்தான்
மாபாதகனுயிரை மைச்சிமிளிலேயடக்கி
அம்புவாய்தனிலடக்கி அனுப்பினாரிந்திரனும்
வாய்வேகமாகவே வந்தது அர்ச்சுனன்முன்

அர்ச்சுனன் பேரண்டனுக்கு உயிரளித்தல்.

மைச்சிமிளித்தான் கிறந்து வல்லுயிரைமாற்றினன்
வெண்ணீறுதான்போட்டு வேறுபட்டதலையெடுத்து
அறுத்ததலையெடுத்து அணைத்துதண்ணீர்தெளித்தான்
தட்டியெழுப்பினன் தன்னுடையபொற்பிரம்பால்
தூங்கிவிழித்தவன்போல் திடுக்கிட்டெழுந்திருந்தான்
ஆரடாபண்டாரம் அறிவுகெட்டசங்கமனே
என்றுஎழுந்தானே இயலானபேரண்டனும்
ஏழுபேர்கன்னியர்கள் இளங்கொடிமாரேதுசொல்வார்
ஆங்காரராட்சதனே ஐயரைச்சரணம்பண்ணும்
அபசாரமுன்மேலே ஐயரைச்சரணம்பண்ணும்
உந்தனுயிர்கொடுத்த உம்பர்பிரானுக்குடா
சாஷ்டாங்கமாக சரணம்பண்ணுமையருக்கு
என்றுசொன்னபோது இரங்கியேதெண்டனிட்டான்
சரணஞ்சரணமென்று சரணமிட்டான்பேரண்டனும்
இறந்துவிட்டஜீவனை எழுப்பிவிட்டாண்டவனே
உமக்கேதுதரப்போறேன் இயலானசங்கமரே
ஆபத்துவேளையில் அழைத்தால்வருகிறேன்
உந்தனுக்குதவியாக ஒத்தாசைபண்ணுகிறேன்
என்றுஉபசரித்தான் இயலானராட்சதனும் ...ன்
அனைவரையுங்கையமர்த்தி அர்ச்சுனனும்போய்நடந்தா
அரகரா அரனேயென்று அரன்மேலேதியானமானான்
சிவசிவாசிவனேயென்று சிவன்மேலேதியானமானான்
ஒருவன் அரனேயென்ன உலகம்அரனேயென்னும்
ஒருவன்சிவனேயென்றால் உலகம்சிவனேயென்னும்
அடித்தானேசெயகண்டிகை தொனித்தானேசங்கதனை
ஏலகன்னிதன்வனத்தில் எழில்விஜயன்போகலுற்றான்

ஏலகன்னி அர்ச்சுனனைப் பார்த்து
அழைத்தல்.

அரகராவென்றசத்தம் அறிந்தாளேஏலகன்னி
ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே

வாரவராக்காணும் மயிலணையேபாருமென்றாள்
திக்கெனவேதானெழுந்து தெருவீதிவந்தார்கள்
வருகிறசங்கமனே மாதர்கள்தானறிந்து
ஓட்டம்நடையுமாய் ஓடிவந்தார்தாதியர்கள்
என்தாயேஏலகன்னி எவரோதெரியாது
ஆதிசிவன்போலே அழகுபடைத்தவர்காண்
ஒருக்காலும்வந்ததில்லை உச்சிதமாய்வாரூர்காண்
என்றசத்தந்தான்கேட்டு எழுந்தாளேஏலகன்னி
தண்டையசையவே தார்குழலாள்தானடந்தாள்
அர்ச்சுனரைக்கண்டு அதிகமையலானாள்
கண்டாசைப்பட்டாளே கட்டழகியேலகன்னி
வடிவழகுமொப்பனையும் வாள்விஜயன்சீரழகும்
உற்றுற்றுப்பார்த்துமவள் உள்ளமுறுகுகிறாள்
காமவிகாரத்திலே கட்டழகியேதுசொல்வாள்
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
தீரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
புதிதாய்தபசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
வருவீர்வருவீரென்று வழிபார்த்துநானிருந்தேன்
எப்போவருவீரென்று இந்தவனங்காத்திருந்தேன்
உன்னாசைப்பட்டிருந்தேன் உலகில்வேறாசையில்லை
காமவிகாரத்தாலே களைப்பட்டுப்போரேனையா
மன்மதனெய்தகணை மார்புருகிப்போகுதையா
சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதையா
அதிகவிகாரங்கொண்டேன் ஐயாபெரியவரே
மார்பைப்பார்தோளைப்பார் வண்ணமுகம்நீர்பாரும்
என்னிலுமழகுடையாள் எங்குங்கிடையாது
தேடக்கிடையாது தேசத்திற்கிட்டாது
காணக்கிடையாது கருத்தினுற்கிட்டாது
மார்போடுமார்பணைந்து மகாவிடாய்தீருமையா
தோளோடுதோளணிந்துசுகத்தைமெள்ளதெளியுமையா
கட்டிலுண்டுமெத்தையுண்டு கால்பிடிக்கத்தாதியுண்டு

பொன்னும்பொருளுமுண்டு பொக்கிஷங்கள்மெத்தவுண்டு
தின்னநல்லபாக்குமுண்டு செலவழிக்கரொக்கமுண்டு
ஆடவென்றுஊஞ்சலுண்டு அமர்ந்திருக்கமேடையுண்டு
பத்தியுலாவுதற்குப் பர்ணசாலைமெத்தவுண்டு
மருவிவிளையாடி மன்மதரேவீற்றிருப்போம் [ள்
வாருமையாவென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டா
ஏறெடுத்துப்பாருனும் இளவிஜயனருச்சுனனும்
ஏலகன்னிமாதுமவள் இளங்கொடியாளேதுசொல்வாள்
என்காணுமருச்சுனரே எந்தன்முகம்பார்க்கொணுதோ
முத்தானவாய்திறந்து உத்தாரஞ்சொல்லொணுதோ
வாயைத்திறந்தாலே வச்சிரமுதிர்ந்திடுமோ
வச்சிரமுதிர்ந்தாலே வாரியெடுக்கேனோ
தாளைத்திறந்தாலே தங்கமுதிர்ந்திடுமோ
தங்கமுதிர்ந்தாலே தடவியெடுக்கேனோ
என்னுடன்பேசினால் ஏதுகுறையுமுண்டோ
கல்லுங்கரையுமோ கட்டைதுளிர்த்திடுமோ
இரும்புகரையுமே இரங்கலையோவுன்மனது
மார்பைப்பார்தோளைப்பார் வண்ணமுகத்தைப்பார்
முகத்தோடுமுகமணைத்தால் மூர்ச்சைதெளிந்திருப்பேன்
மார்போடுமார்பணைந்தால் மகாவிடாய்தீர்ந்திருப்பேன்
தோளோடுதோளணைந்து சுகங்களைத்தாருமையா
வாருமென்றுசொல்லி மறித்தாளேஏலகன்னி
வாயைத்திறவானும் வண்ணமுகம்பாரானும்
என்னென்றுகேளானும் ஏறமுகம்பாரானும்
சிவனைமறவாமல் சிவன்மேலேதியானமானன்
அரனைமறவாமல் அரன்மேலேதியானமானன்

ஏலகன்னி அருச்சுனனைக் கோடுகிழித்து
ஆணையிட்டு நிறுத்தல்.

ஏலகன்னிமாது இளங்கொடியாள்கோபமானுள்
ஏழுகோடுகீழ்கிழித்து இங்கேநீர்நில்லுமென்றுள்
உன்-குருவின்மேலாணைகாணுங் கோடுவிட்டுப்போகாதே

ஐவர்மேலாணைகண்டாய் அடிவிட்டுப்போகாதே
தம்பிதமையன்மார் தார்மேலே ஆணையிட்டாள்
ஆணையிட்டுஏலகன்னி அரண்மனைக்குப்போய்சேர்ந்தாள்
மாளிகைவாசலுக்குள் மண்டபத்தில்வீற்றிருந்தாள்
அவள்-வருவதற்குள்ளாக வாள்விஜயனேதுசெய்தான்
எண்ணுதுமெண்ணியே ஏதேதுதானினைப்பான்
ஆரைநினைத்தானே அளவற்றசிந்தையிலே
எவரைநினைத்தானே எண்ணமுற்றசிந்தையிலே
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகமெல்லாம் வேற்றுமுகமாகுதையா
எவரைநினைத்தாலே இந்தவேளைகாத்திடுவார்
ஆபத்தைக்காப்பதற்கு ஆராலேஆகுமென்று

கோட்டில்நிற்கும் அர்ச்சுனன் காளியைத்
தோத்திரம் பண்ணல்.

அந்தவனக்கன்னியரை அர்ச்சுனன் தானினைந்தான்
சூலிகபாலியம்மா சுந்தரரேதுர்க்கையரே
சண்டிப்பிடாரியம்மா சங்கரியேஏகவல்லி
மண்ணுபிடாரியம்மா வழக்காடுந்துர்க்கையரே
ஆபத்துவேளையிலே ஆதரிக்கவேணுமம்மா

அர்ச்சுனன் காளியை நினைக்க காளிவந்து
வரலாறு வினவல்.

என்றுநினைத்தானே இயலானகாளியரை
வாள்விஜயன்தான்வருந்த மாகாளிதான்வருவாள்
டேகையொருகையில் டமாரமொருகையில்
வாளுமொருகையில் வளைதடியொருகையில்
அம்புவில்லுங்கைபிடித்து ஆயத்தமாகவந்தாள்
ஆராதம்பிநீ அடவியிலேயெனைநினைத்தாய்
ஊரேதுபேரேது உன்னுடையவண்மையென்ன
என்றவள்கேட்கையிலே இரங்கிசரணமிட்டான்

ஆரென்றுகேட்டாயே ஆச்சியரேசொல்லுகிறேன்கேள்
பாண்டுமகாராஜன்பெற்ற பஞ்சவர்களிலொருண்டு
குந்திமாதேவிபெற்ற குலமணிகளிலொருண்டு
ஐவர்பஞ்சபாண்டவரில் அருச்சுனராஜனென்பார்
மாயவனார்மைத்துனன் வாள்விஜயனென்பாரும்
ஆதிகைலாசம் அரன்பதியேபோறேனம்மா
பரமனைநோக்கியே பாரதவஞ்செய்யநான்
போரவழிதனிலே பொற்கொடியாளேலகன்னி
கலியாணம்பண்ணவென்று கடிகியெனைமறித்தாள்
கோடுகிழித்துஎன்னைக் குறுக்கேதடுத்தாளே [ள்
ஆணையிட்டெனைமறித்து அரண்மனைக்குப்போய்விட்டா
மறுபடிவருவேனென்று மாளிகைக்குப்போய்விட்டாள்
ஆகையாலென்தாயே அபயமிட்டுனையழைத்தேன்
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வாள்ஈஸ்வரியும்

காளியம்மன் அர்ச்சுனனை ஆணைவிடுவித் தனுப்புதல்.

அஞ்சாதேயென்மகனே ஆணையிட்டேன்தோஷமில்லை
மூக்காலுந்தோஷமில்லை முத்திரையைநீகழற்றி
நீதரித்தமுத்திரையை நிலந்தனிலேவைத்துவிடும்
இந்தவனங்கடந்து என்னைநினைத்தாக்கால்
உந்தனுடமுத்திரை உனக்கேதயவுசெய்வேன் [ன்
என்றுசொல்லகாளியம்மாள் ஈந்துவிட்டான்வாள்விஜய
தரித்திருந்தமுத்திரையைத் தாயாரின்கைகொடுத்தான்

காளி அர்ச்சுனன்போல் நிற்பதை ஏலகன்னி கண்டு தான் அலங்காரம் பண்ணிக் கொள்ளல்.

வாள்விஜயன்போனபின்பு மாகாளியென்னசெய்தாள்
அர்ச்சுனனைப்போலாக அங்கேவடிவுகொண்டாள்
காவிகாசாம்பரமும் கட்டிடஅரைதனிலே
ஐந்துசடைகொஞ்ச அழகுசடைமார்புரள

வாள்விஜயன்போல மறைப்பிலேநின்றுளாம்
இப்படிக்குக்காளி யிருக்கின்றவேளையிலே
ஏலகன்னிமாது இளங்கொடியாளேது சொல்வாள்
மஞ்சள்குளித்தாள் மையெழுதிப்பொட்டுமிட்டாள்
வாரிமுடித்தாளாம் வான்சவுரியுட்சொருகி
கொண்டைக்கழகாக கொண்டைமயிர்தான்முடித்தாள்
சந்திரபிறைசூர்யபிறை தலையிலணிந்தாளாம்
ஆண்மயிலும்பெண்மயிலும் அழகாகத்தான்முடித்தாள்
முத்தாலேசுட்டியும் முன்னாலேதொங்கவிட்டாள்
காதுக்கும்பொன்னோலை கைக்குவளையலிட்டாள்
செண்பகப்பூநாசியிலே சேர்ந்தணிந்தாள்மூக்குத்தி
தோள்வந்திகைவந்தி தொடுத்தாள்ரவிக்கைதனை
கண்டசரமாம் கல்பதக்கமோதிரமாம்
கொத்துச்சரப்பளியாம் கொத்துமுத்துதாழ்வடமாம்
முத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
சன்னல்பின்னல்தாழ்வடமாம் தாயத்துபேரொளியாம்
கடகஞ்சரிபவளங் கைநிறையப்பொன்வளையல்
தண்டைகொலுசுடனே சலங்கையும்பாடகமும்
காலாழிபீலி கல்லணையாம்புல்லணையாம்
அரைக்கிசைந்தஒட்டியாணம் அலங்காரம்பண்ணுளாம்
பொன்னிழைத்தபட்டாடை பாவாடைதான்தரித்தாள்
சாந்துசவ்வாதுடனே சந்தனமும்பூசினுள்
மருவுமருக்கொழுந்து மல்லிகைப்பூமுடித்தாள்
வாசனைபரிமளிக்க வாராளேஏலகன்னி
ஆரடிதாதி அலங்காரத்தோழிகளே
எடுத்துவாகனகதண்டி இட்சணமேபோகவேணும்
தாதிமாரோடிவந்து தண்டிகைகொண்டுவந்தார்
ஏறினுள்தண்டிகையை எடுத்தார்நெடுங்குடையை
சங்கமர்தானிருக்கும் தாவுதேடிவாராளாம்
பல்லக்கைவிட்டிறங்கிப் பாதஞ்சரணமென்றுள் [ருள்
ஆணைவிட்டேன்தோஷமில்லை ஆண்டவனேவாருமென்

ஏறினார்பல்லக்கில் இயலானசங்கமரும்
ஏலகன்னிதானும் ஏறினாள்பல்லக்கில்
மாளிகைவாசலிலே வந்துஇறங்கினாராம்
ஆசனத்தின்மேலே அமர்ந்தாளேஏலகன்னி

ஏலகன்னி அர்ச்சுனனுக்கு விருந்திடச்
சமையல் பண்ணல்.

இளங்கொடிமாதரை ஏலகன்னிதானழைத்து
அடிசல்சமையுமென்றாள் அரண்மனையிலெல்லவர்க்கும்
சக்கரைப்பால்போஜனங்கள் சமையுங்கள்மாதர்களே
பஞ்சணைமெத்தையும் பள்ளியறைஜோடியுங்கள்
இவ்வார்த்தைசொல்ல எழுந்தார்கள்தோழியர்கள்
நித்தமுறைசெய்யும் சித்தினித்தாதியர்கள்
இந்தமுறையெங்களது என்றுயெழுந்தார்கள்
அடுப்புமெழுகுவார் ஆட்சதைக்காப்பிடுவார்
வெங்கலப்பானையிலே வெந்நீருலைசாய்ப்பார்
பால்சம்பாவரிசி பதிங்கலந்தான்களைந்து
கொதிப்பாற்றியேயிறக்கி கொப்பெனவேதான்சமைத்தா[ர்
வாழைக்காய்கொய்வார் வழுதலங்காய்காம்பறிவார்
ஈழப்பலாக்காயை இளமுள்ளுபோக்கிடுவார்
கொத்தவரக்காயதனைக் கூட்டியறிந்திடுவார்
செம்பொனவரைக்காய் சேரவறிந்திடுவார்
பாவக்காய்தானறிவார் பரங்கிக்காய்தானறிவார்
இளசுசுரக்காய் இளந்தமர்த்தைதானறிவார்
தேங்காய்த்திரிகிடுவார் மாங்காயறிந்திடுவார்
பாம்புப்புடலங்காய் பாதரிப்பீர்க்கங்காய்
பிஞ்சுமுருங்கக்காய் பேரானகொத்தவரை
சுண்டக்காய்வண்டக்காய சுத்தமுள்ளமுள்ளங்கி
வள்ளிக்கிழங்குகளும் வாழைத்தண்டுகீரையுடன்
சிறுகிழங்குசிறுவள்ளி சிறப்பானசேமத்தண்டு
கருணைகாராக்கருணை காராதஆள்வள்ளியும்
அரைக்கீரைசிறுகீரை அத்திமுருங்கக்கீரை

முன்னை முசுட்டை மூக்குரட்டைகீரையுடன்
காரைபிரண்டையும் கடற்கீரையுள்ளதுவும்
பிடுங்கினரிளங்கீரை பேருனகொத்தமல்லி
கடலைஉளுந்துபச்சை காராமணிபருப்பு
அவரை துவரையோடு அநேகஞ்சிறுபருப்பும்
கொள்ளுடனேயெள்ளுகளுங் கோதுமையுங்கலந்து
பத்துவகைத்தப்பளமும் பாங்கானகூட்டமுது
பத்துவகைப்பச்சடியும் பாங்கானகீரையுடன்
புளிக்கீரை துவர்க்கீரை பிரட்டினகீரையுடன்
ஆயிரத்தெட்டுவகை அறிக்கறிபொறிக்கறியும்
ஐந்நூறுவகைக்குழம்பும் அடைவுடனேதான்சமைத்து
காரமும்உப்பும் கலந்தஅறுசுவையும்
புத்துருக்குநெய்த்துளியைப் போதவேதான்வார்த்து
வடகப்பொடிபோட்டு மணிச்சீரகம்போட்டு
சீரகமும்வெந்தயமும் சீராகத்தான்போட்டு
கருவேப்பிலையும் கறிக்குத்திட்டமாய்போட்டு
சையுஞ்சையுமென்று தனித்தனியேதான்மணக்க
மணங்கள்கமகமென்ன மாதர்க்குப்புரையேர
தாளித்திறக்கினர் தாதியவர்கையாலே
செம்பொன்பிரியணைமேல் சேரஅடுக்கினர்கள்
ஊறுக்காய்சேர்ந்த உகமைகளைச்சொல்கிறேன்கேள்
இஞ்சியெலுமிச்சை இயலானதமர்த்தையும்
நாரத்தைகிச்சிலியும் நல்லகடுக்காயுடனே
மூங்கில்குருத்துகளும் முற்றுவள்ளிக்கிழங்கு
அகத்திக்காய்மாவுலிங்கம் அழகானதூதுவேளை
வில்வக்காய்சுக்கங்காய் விளாம்பிஞ்சிபச்சடியும்
சுண்டக்காய்களாக்காயும் சுருக்காகமுள்கருணை
மாங்காய்முதலான மற்றுமுள்ளஊறுகாயும்
வத்தல்வகைசேர்ந்த வகைமானங்கேளுங்கள்
ஆதண்டங்காயும் அரிதானசுக்கங்காயும்
பாவக்காய்கோவக்காய் பச்சைமிளகாயும்

சுக்கங்காய் தூதுவேளை சுருக்காகபாவற்காயும்
அறுசுவைவர்க்கமுடன் அறுபதுஊறுகாயும்
பழவகைகள் தான்சேர்ந்த பலவகையைத்தான்கேளும்
மாம்பழம்வாழைப்பழம் மலையின்பலாப்பழமும்
செவ்வாழைப்பழம் சேர்ந்தரஸ்தாளியும்
மாதளைக்கிச்சிலியும் மாவெட்டுமாம்பழமும்
அன்னுசியருநெல்லி அழகுகொய்யாப்பழமும்
தமர்த்தம்பழங்களும் தலைவிரித்தமாதளையும்
மற்றுமுண்டானபழம் வகையெல்லாஞ்சேர்த்தார்கள்

ஏலகன்னிக்கு தாதியர்கள் பள்ளியறை
சோடித்தல்.

அதிலேயொருதாதி ஆரணங்குதானெழுந்து
பள்ளியறைதான் திறந்து பைங்கிளியாள்சுத்திபண்ணி
சாந்தால்தரைமெழுகி சந்தனத்தால்கோலமிட்டு
குங்குமத்தாலே குளிரச்சுவர்பூசி
கல்மூன்றுடைய கனவயிரக்கட்டிலிட்டு
மெத்தைமடித்திட்டு மேலேயணைகோலி
காம்பறிந்தமல்லிகையைக் கட்டிலின்மேலேசொரிந்து
கண்ணுடிசல்லிகட்டி கவரிமான்சுங்குவிட்டு
மாவிலைதோரணமும் மல்லிகைமாலைகட்டி
எங்குமலங்கரித்து ஏந்திழைமாரோடிவந்து
ஏலகன்னிமுன்னுலே இளங்கொடிமார்தெண்டனிட்டார்
அடிசல்சமைத்ததென்று ஆரணங்குதெண்டனிட்டார்
கெண்டியில்தீர்த்தம் கொண்டுவந்துமுன்னேவைத்தார்
ஏலகன்னிசங்கமரும் எழுந்தாரிருவருமாய்
கைபூசிக்கொண்டு கடுகியேவந்தமர்ந்தார்
வாழையிலைபோட்டு வரிசையுடன் நீர்தெளித்து
இட்டாரேபோசனங்கள் இருவருக்கழகாக
பச்சென்றபழவகையும் பச்சடியும்பாவித்தார்
பொறித்தபொறிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
காராவின்நெய்வார்த்து கடிகிப்புசியுமென்றார்

சிமிட்டிமுழிப்பளவில் செகமாதாகாளியம்மை
வைத்தவொருசாதமெல்லாம் மாயையாயுண்டுவிட்டாள்
மற்றுமொருக்காலே வட்டித்தார்போஜனங்கள்
மறுபடியும்போஜனத்தை மாயையாலுண்டுவிட்டாள்
ஆயிரம்பேருக்கு சமைத்தஅடிசிலெல்லாம்
ஐயரொருவருக்கு அன்புடனேவட்டியென்றாள்
கடுகளவுநாழிகையில் காளியம்மையுண்டுவிட்டாள்
இன்னஞ்சோறில்லையே என்பசியாறுகைக்கு
வயிறுபசியாற்றமல் மாலையிட்டுக்கொள்வேனே
மேதினியிலெப்படிக்கு விவாகமதுசெய்வேன்காண்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏலகன்னியேதுசொல்வாள்
ஏரியோஉன்வயிறு இயலானசங்கமரே
மடுமோகுளமோவுன் வயிறுகுஞ்சங்கமரே
பெண்டுபிள்ளையில்லாமல் பிழைத்தீரோவூர்திரிந்து
இன்றையதினத்திலே போஜனமிட்டாச்சு
நாளையதினத்திலே நன்றாய்ப்புசித்திடுவீர்
வாருமென்றுசொல்லியே வருந்தியேநீர்கொடுத்தாள்
வாய்பூசிக்கைபூசி மாளிகைக்குப்போய்நடந்தார்
பள்ளியறைவீட்டிலே பஞ்சணையில்வந்தார்கள்
சங்கமர்மனமகிழ தம்புருதான்தொனித்தாள்
கின்னரவாத்தியங்கள் கோஷ்டமுடன்தான்படித்தாள்
காதாரக்கேட்டுமே காளியம்மைதான்மகிழ்ந்தாள்

ஏலகன்னி காமவிகாரத்தால் அர்ச்சுனனென்று
அணையப்போக காளி தான் அர்ச்சுனன்
அல்லவென்று சொல்லல்.

காமம்பொறுக்காமல் கடுகியேஏலகன்னி
மார்பில்விழுந்து மருவியணையவந்தாள்
காளியென்றுதானறிந்து கைவிட்டாளேலகன்னி
என்னைக்கெடுத்தீரோ என்பாவங்கொண்டீரோ
ஆணையிட்டுவந்தேனே அடிவைக்கஞாயமுண்டோ
அர்ச்சுனராஜாவை அங்கெனவேபோய்மறித்தாள்

நில்லுநில்லுஞ்சங்கமரே நெடுந்தூரம்போகாதே
ஆணையிட்டுவந்தேனே அடிவைக்கஞாயமுண்டோ
என்னைக்கலியாணஞ்செய்து கடுகநடவுமென்றுள்
ஆனாலழகுமன்னன் அர்ச்சுனனேதுசொல்வான்
ஆதிகைலாசம் அரன்பதிக்குப்போறேனே
சிவனார்தன்கையாலே சேனவரம்பெற்று
வரும்போதுஏலக்கன்னி மாலையிட்டுக்கொள்ளுகிறேன்
என்னைமறிக்காதே ஏலகன்னிநாயகமே
போகசெலவுதாராய் போய்வாரேன்பெண்மயிலே
ஆணையிட்டாலல்லாது அடியேன்செலவுகொடேன்
என்றதுகேட்டுமே ஏதுசொல்வான்வாள்விஜயன்
ஆணையிட்டுத்தந்தானே ஆரணங்கைவிவாகஞ்செய்ய
மாதாசெலவுதர வாள்விஜயன்போய்நடந்தான்
அந்தவனங்கடந்து அப்புறம்போகலுற்றான்
பத்தாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு

பத்தாவது, பேரண்டவனம் முற்றிற்று.

---

## பதினோராவது, சபாமிருக வனம்

அந்தவனத்தைவிட்டு ஐவர்பஞ்சபாண்டவர்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மண்ணிவைத்தசீமாடு வனமேகுடியிருப்பாய்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
சபாமிருகந்தானிருக்கும் தனிவனத்திற்போனார்கள்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அங்கேகுடித்தனமாய் ஐவர்கள்தானிருந்தார்
இப்படியாகச் சிலநாளிருக்கையிலே
சபாமிருகவனந்தனிலே தனஞ்செயனுமப்போது



சிவபெருமானின் நந்தவனங்காத்திருந்த பிராமணன் பார்வதியின் நந்த
வன காவற்பெண்ணை இச்சித்ததாலுண்டான சாபம் விமோசனமானது

வெள்ளானைவனந்தனிலே வில்விஜயன்வாருனும்
உலகமதிர்ந்திடவே உத்தமனும்வாருனும்
ஒருவனரனேயென்ன உலகமரனேயென்னும்
ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
அரகராவென்றுசொல்லி அடித்தானேஜெயகண்டிகை
சிவசிவாவென்றுசொல்லி தொனித்தானேசங்குதனை
சங்குதொனிகேட்டு சயாமிருகந்தானெழுந்து
வால்கிளப்பிகும்மாளமிட்டு வருகுதுவெள்ளானை
தன்னிழலையேபார்த்து தானோடுமந்தயானை
கொம்பினால்மலையையது குத்திக்கிளப்பிவிடும்
அருச்சுனரைக்கொல்லவென்று ஆனைவருகையிலே

**அருச்சுனன் யானையைக் கொல்லுகிறது.**

கண்டானேவாள்விஜயன் கண்கொள்ளாக்கோபமுடன்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
அர்த்தசந்திரபாணமெடுத் தஸ்திரத்தையுச்சரித்தான்
மதயானையைக்கொல்லவென்று மார்புரளவாங்கினான்
அருச்சுனன்விட்டதொரு அர்த்தசந்திரபாணமது
மதயானைத்தன்னையே வகுந்ததுயிருபிளவாய்
வீரிட்டுவிழுந்ததே வில்விஜயன்தன்கையால்

**அருச்சுனன் கையினால் விழுந்தயானை**
**ஒரு பிராமணனாக வந்தது.**

ஆனைமடிந்திடவே அதிலொருபிராமணன்தான்
பஞ்சாங்கப்பிராமணனாய் பார்ப்பான்வெளியானான்
கண்டானேஅருச்சுனனும் கடுகிபிராமணனை
வாரும்பிராமணரே மதயானைமுழுங்கிற்றோ
ஆனாற்கேள்சங்கமரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்
தெய்வலோகந்தனிலே சிவனுடையபூங்காவனம்
ஐயர்பூங்காவனத்தில் அதிகாரமென்னதுகாண்
அம்மைப்பூங்காவனத்தில் அலங்காரப்பெண்களுண்டு
அம்மைவனத்தார்கள் ஐயர்வனம்போகொணுது

ஐயர்வனத்தார்கள் அம்மைவனம்போகொணுது
ஒற்றைஒருநாளில் உச்சிதத்தைப்பார்ப்போமென்று
அம்மைவனங்களிலே அதிகாலைபோகையிலே
ஆயிரம்பெண்களிலே அதிலேயொருகாதி
கண்ணுக்கினியபெண்ணை கண்டாசைப்பட்டேனே
பார்த்தாசைப்பட்டேனே பைங்கிளியைகைபிடித்தேன்
என்னைத்திமிறிவிட்டு ஈஸ்பரியாள்பக்கஞ்சென்ருள்
ஈஸ்பரியாள்தன்னுடனே இச்சேதியுரைத்தார்காண்
அம்மையதுகேட்டு ஆதிசிவன்பக்கஞ்சென்ருள்
உமையவளதுகேட்க உப்பர்பிரான்பக்கம்வந்து
ஐயரேஉன்வனத்தில் அதிகாரஞ்செய்கிறவன்
எந்தன்வனக்கன்னியரை இவன்பிடிக்கஞாயமுண்டோ
என்னுமிகச்சொல்லுகையில் ஈஸ்பரனுர்தான்கேட்டு
என்னையரவழைத்து ஈய்ந்தார்பெருஞ்சாபம்
என்னுடையசாபமது எப்போதுலையுமென்றேன்
ஆதிகைலாசம் அர்ச்சுனன்வருகிருன்
அர்ச்சுனரைகொல்லவே ஆங்காரமாய்ப்போகையிலே
அர்ச்சுனன்கோபமுற்று அம்பாலேகொன்றிடுவான்
என்றதுபோல்நீரும் என்சாபம்போக்கிவிட்டீர்
வாருமென்றிருவருமாய் வனத்திலேபோருர்கள்
போகபிராமணரும் புதுமையொன்றுசொல்லலுற்ருன்

### அருச்சுனற்குப் பிராமணன் குயவன் வரலாறு கூறுதல்.

ஆனாற்கேள்சங்கமரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்
செப்பும்மொழிதவருன் திருநீலகண்டரவர்
கோடுகுடவாதார் குயவன்குயத்தியரும்
இப்படியாக இவரிருக்கும்நாளையிலே
மகாராஜாவாசலிலே மங்களகாரியத்தால்
கோவுங்குயமுட்டி கொண்டுவாவென்றுரைத்தார்
அக்ஷணம்நீலகண்டன் அனேகமுட்டிசொப்பனிட்டு

பொன்போலிழைத்துமே போட்டான் பெருஞ்சூளை
சூளைகலந்து சுட்டசிறுமுட்டிகட்டி
மகாராஜன்வாசலிலே வைத்தானேகொண்டுவந்து
மகாராஜன்தான்பார்த்து மகிழ்ச்சியாய்துயவருக்கு
சொர்ணமணிமுத்தும் துகிலாடையுமெடுத்து
நீரில்லாப்பூஷணத்தை நீலகண்டனுக்கருளி
போய்வாருமென்றுமே போகச்சொலவருள
வெகுமானம்பெற்றுமவன் வீதிவருகையிலே
அந்திகாலமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான்
காற்றுமழையுங் கடிகிவருகுது
தேவதாசிவீதி தெருத்திண்ணையோரத்தில்
வந்துயிறங்கினன் வான்மழைபோகளவும்
அந்தச்சமயத்தி லவ்வீட்டுதாசியவள்
போஜனமுண்டுமே பொற்கலத்தைத்தான்கழுவி
ஜன்னல்கதவையவள் தான்திறந்துஊற்றினள்
மண்ணுடையான் தலைமேலே வந்துவிழுந்தது
சம்போசிவசங்கரனே ஜலந்தெளித்தாரென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குதாசியவள்
அஞ்சிப்பயந்துமே யாரென்றுகேட்கலுற்றாள்
மண்ணுடையான் நான்காணும் வந்தேனிதுவழியாய்
வான்மழைக்குமாதரசே வந்துஒதுங்கினேன்
ஆரோதெரியாது அள்ளிஜலந்தெளித்தார்
என்றதுகேட்டுமே ஏலப்பசுங்கிளியாள்
மெத்தப்பயந்துமவள் வீட்டோரங்கொண்டுசென்று
அபிஷேகமாட்டிவைத்தாள் ஆனந்தமார்பனுக்கு
ஈரமுலர்த்தி இழைசேர்ந்தபட்டுடுத்தி
ஆபரணமிட்டு அலங்காரம்பண்ணினள்
போசனமிட்டுமவள் புட்பமுந்தான்கொடுத்தாள்
சந்தனமுந்தாம்பூலம் தான்கொடுத்தாள்தையலரும்
அன்றையராத்திரி அங்கிருந்துகுயவனவன்
மற்றுநாட்காலையிலே வந்தானேவாழ்மனைக்கு

குயவன் மனையாளுக்கும் குயவனுக்கும் தர்க்கம்.

குயவனிடதேவி கொம்பனையாள்கண்டாளாம்
கண்டுபுருஷனைக் கண்ணீரைத்தானுகுத்தாள்
கோவென்றசத்தமுடன் குமுறியழுதாளாம்
ஆறேடேபோகம் அமர்ந்திருந்தீர்மன்னவரே
என்னை விட்டுப்பிரிவதற்கு என்னமனம்வருமோ
வேசியர்கள்வீட்டிலே விளையாடிவந்தீரோ
உன்னுடனேபேசேனே உன்முகத்தைப்பாரேனே
பெற்றதகப்பனைப்போல் பிரியமுடன்பார்த்திருப்பேன்
குருக்களுடமைகளை கொள்ளைகொண்டுபோனவர்கள்
தாயில்லாபிள்ளைகளை தலையிலடித்தவர்கள்
சிசுவதைபண்ணவர்கள் ஜீவவதைசெய்தவர்கள்
பெரும்பாவிசேருகிற பெருநரகில்சேர்ந்திடுவார்
என்றுசபதமிட்டாள் இளங்கொடியாளக்குயத்தி
இவ்வார்த்தைகேட்டுமவன் எரிபறந்துநீலகண்டன்
கண்கள்சிவந்துமே காந்தாளப்பட்டானும்
மெய்யானவார்த்தைதனை விளம்பினேன்மெல்லியற்கு
பொல்லாதவார்த்தையினல் புலம்புகிறாளேது செய்வேன்
என்றுமனஞ்சலித்து ஏதுசொல்வான் நீலகண்டன்
இன்றுமுதலாக இனிநெடுநாள்வரைக்கும்
உன்னுடனேபேசினல் உனக்குத்தகப்பனென்றான்
அவ்வார்த்தைதள்ளினுலனேகபாவஞ்சொல்லுகிறேன்
அபயமென்றுவந்தவனை அநியாயம்பண்ணபாவி
பெரும்பாவிசேருகிற பெருநரகம்சேர்ந்திடுவேன்
என்றுசபதமிட்டான் இயலானநீலகண்டன்
அப்படியாக அனேககாலந்தானிருந்தார்

ஆதிசிவனும் பார்வதியும் பண்டாரவேஷமாக வந்து
இருவரையும் ஒருமைப்படுத்தி மோட்சமீதல்.

ஆதிசிவனுக்கும் ஆதிபரமேஸ்வரிக்கும்
பொறுக்கமுடியவில்லை பொல்லாச்சபதமிது

இருவரையும்பேசிவைக்க ஈஸ்பரனார்வந்தாராம்
மெத்தப்பெரியவராய் மேல்நாட்டுச்சங்கமராய்
ஆண்டிப்பெரியவராய் ஆண்டவன்வடிவெடுத்தார்
அம்மையுமையாளும் ஆண்டிச்சிவடிவெடுத்தாள்
விநாயகன்வீரபத்ரன் வேல்பொருதுங்கந்தனுமே
அன்பரிக்கமான்தோலும் அழகானபுலித்தோலும்
கன்றுபுலித்தோலும் கைலாசமான்தோலும்
சடையுஞ்சடைமுடியும் தம்பிரானைப்போலாக
நீலகண்டனுக்காக நினைத்தார்திருவோடு
கதிரோனைப்பத்திரமாய் கடுகெனவேவகைபிடித்து
வாரூர்பரமசிவன் வனமாய்வனங்கடந்து
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
நீலகண்டன்வாசலுக்கு நிமலரும்வந்துவிட்டார்
ஆரடாபக்தா நீ அறிவுள்ளபுண்ணியனே
என்பிள்ளைபெண்சாதி இங்கிவர்களெல்லோரும்
பசியோடே நாங்கள்வந்தோம் பசியாற்றிநீரனுப்பும்
பிள்ளைபசியாற்றில் புண்ணியங்கள்வேணதுண்டு
குழந்தைபசியாற்றில் குமாரனைப்பெற்றிடுவாய்
உந்தனுறவின்முறையார் உன்னுடையபெண்சாதி
வாழ்ந்துசுகமாவீர் மகாதேவர்புண்ணியத்தால்
என்றல்லோசங்கமரும் ஈய்ந்துவிட்டார்வெண்ணீறு
வாங்கியணிந்துகொண்டு வணங்கியேதெண்டனிட்டான்
நல்லதுசங்கமரே நான்செய்தபாக்கியத்தால்
வந்தீர்களிப்போநான் வாழ்ந்துசுகமானேன்
பத்துநாழிகைப்பொழுதில் பசியாறநீங்கள்வந்தால்
போசனமுண்பீர்காண் போய்வாருஞ்சங்கமரே
என்றதுகேட்டுமவரேது சொல்வார்சங்கமரும்

ஈஸ்பரர் நீலகண்டன் மனம்சோதித்தல்.

நான்-போசனம்பண்ணுகிற பொன்றுணதிருவோடு [ம்
இங்கேவைத்துநான்போறேன் எடுத்துமறவாமல்வையு
ஊர்திரிந்துநான்வாறேன் உன்வசத்திருக்கட்டுமென்றார்

என்-பாட்டனூர் நாளையிலே பண்ணின திருவோடு
பாத்திரம்போய்விட்டால் பழிவந்துநேருமென்றூர்
என்றதுகேட்டு ஏதுசொல்வான் நீலகண்டன்
ஆனல்கேள்சங்கமரே ஐயா பெரியவரே
என்னுடையதேவியுடன் இவ்வார்த்தைநீருரைத்து
சாதங்கறிவகைகள் சமைக்கவேசொல்லுமையா
பாவற்பந்தலின்மேல் பாத்திரத்தைவைத்துவையும்
அரண்மனைக்குள் நுழைந்து ஆச்சியரைதானழைத்து
மண்ணுடையான்வார்த்தைதனை மாதருடனுரைத்தார்
பந்தலின்மேலாகப் பாத்திரங்கள்வைத்தபின்
பாத்திரத்தைப்பார்த்திரென்று பண்டாரந்தானடந்தார்
செப்பிநடந்தாரே திருநீலகண்டன்வாழும்
அத்தெருவுதான்கடந்து அடுத்ததெருவீதிவந்தார்
ஆத்திநிழலருகில் ஆதிசிவன்வந்தமர்ந்தார்
அந்தச்சமயத்தில் ஆதித்தன்போய்மறைந்தார்
சுக்கலாதேவியவன் சூரியன்தான்மறைந்தான்
குயவனுடதேவியரும் குடிவாழ்க்கைசெய்திருந்தாள்
அனேகநெடும்பொழுது ஆனபிறகாக
மண்ணுடையான்தானெழுந்து வாசலிலேவந்துநின்று
பாவற்பந்தலைப்பார்த்து பாத்திரத்தைக்காணேமென்று
தேவியெதிரில்வந்து திகைத்தாற்போல்நின்றுவிட்டான்
கைகட்டி நீலகண்டன் கண்காட்டிகேட்கிறுன்
ஆரணங்குமாதுகன்னி யறியேனென்றுசாடைபண்ணுள்
மனதுசஞ்சலமாக மண்ணெடுத்துப்பண்ணுகிறுன்
பன்னிருதானெடுத்து பாத்திரம்பண்ணினுன்
கடுகியேசூளேபோட்டு கவிழ்த்துவைத்தான்பந்தலிலே
ஐவரும்அம்மையுமாய் ஆதிசிவன்வாருராம்
திருநீலன்மாளிகையில் சிவசிவாவென்றுவந்தார்
கடிகியேநீலகண்டன் கைக்குச்சலங்கொடுத்தான்
கைப்பூசிக்கொண்டு கடுகியேயுள்நுழைந்தார்
பாத்திரங்கொண்டுவந்தார் பண்டாரம்பார்த்துவிட்டார்

என்னுடையபாத்திரம் எங்கேயென்றார்சங்கமரும்
வைத்துநீர்போனபின்பு மாயமாய்ப்போச்சுதையா
ஆகையாலாண்டவனே அட்சணமேசெய்துவைத்தேன்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்சங்கமரும்
என்-பாட்டனார்நாளையிலேபண்ணிவைத்தபாத்திரத்தை
ஏமாத்திமோசம்பண்ணி இல்லையென்றுசொல்லலாமோ
மகாராஜனிடம்வாரும் வழக்கையுஞ்சொல்வோமென
மடிபிடித்துசங்கமரும் வாராரேதாணிழுத்து
முடிமன்னன்தன்சபைக்கு முன்பாகவந்துசொன்னார்
பசியென்றுசோறுகேட்டேன் பகலைக்குவாருமென்றார்
வச்சிரத்தாலிழைத்த மாணிக்கபாத்திரத்தை
இவர்கையில்நான்கொடுத்துஇஷ்டரிடம்போயிருந்தேன்
வந்தபின்கேட்டாலே மாபாவிகாணேமென்றான்
ஆகையினாலேதான் அழைத்துவந்தேனும்மிடத்தில்
அதிதிபரதேசி யாருமில்லையெந்தனுக்கு
ஆண்டியுடமையென்று அவரிடத்தில்நீர்கேட்டு
வாங்கியேதாருமென்றார் மகாராஜராஜாவே
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வான்மகாராஜன்
ஆரடா நீலகண்டா அறிவுகெட்டபாதகனே
பரதேசியுடமையை நீ பறிக்கிறதுதருமமோடா
குயவன்குயத்தியரைக் கொப்பெனவேகட்டுமென்றார்
வெள்ளிப்பிரம்பாலே வீசியடியுமென்றார்
மாறியடியுமென்றார் வந்தகுயவனைத்தான்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தார்தலையாரி
எருக்கமலராலே எட்டியடித்தாரே
உள்ளம்நடுங்கமேனி உதிரம்வடியுதங்கே
அப்போதுமகாராஜரிடம் ஆண்டியவரேதுசொல்வார்
இன்னஞ்சிலராஜரண்டை இட்டுயான்போறேனையா
கட்டவிழ்த்துவிட்டிடென்றார் கடுகிநீலகண்டனைத்தான்
அரண்மனையைத்தாண்டி அப்புறம்போகையிலே
ஆதிசிவனாரும் அங்கேமனமகிழ்ந்து

ஈசன்ரிஷபத்திலே ஈஸ்பரிசிங்கத்திலே
பேழைவயிற்றோனும் பெருச்சாளிவாகனத்தில்
கந்தர்மயில்மேலே கடுகியேவந்துநின்றார்
தங்களுடவாகனத்தில் சாமிகளுமேறிவந்தார்
வந்தாரெதிராக மண்ணுடையான்வந்துநின்றான்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
குயவன்குயத்தியுட குறைகளைத்தீர்த்தாரும்
காக்ஷிகொடுத்து கைலாசம்போனாரும்
நீலகண்டன்பேறுபெற்ற நிலமாகுமிவ்வனந்தான்
என்றதுகேட்டு ஏதுசொல்வானர்ச்சுனனும்
புண்ணியவனத்திலே போய்ஸ்நானம்பண்ணிவந்தால்
என்பாவந்தீரவே ஈஸ்வரனார்வரமளிப்பார்
என்று-பொய்கைதனிலே பொட்டெனஸ்நானம்செய்து
சிவனைநினைந்து திருநீற்றுக்காப்பணிந்து
அரனைநினைந்து அள்ளியிட்டான்வெண்ணீறு
பஞ்சாட்சரமணிந்து பகவானைப்பூசைசெய்து
அரகராஅரனேயென்ன அடித்தானேசெயகண்டிகை
ஓம்நமசிவாயவென்று ஒலித்தானேசங்குதனை
ஒருவன்சிவனேயென்றால் உலகஞ்சிவனேயென்னும்
அரகராவென்றுசொல்லி அந்தவனந்தாண்டினான்
மற்றுமொருவனத்தில் வாராரிருவருமாய்
இந்தவனம்ஆருடைய தென்றானிளவிஜயன்

சபாமிருகவனங் கடந்து ஊர்க்குருவிவனம் வருதல்.

ஊர்க்குருவிபேறுபெற்ற வனமென்றானுத்தமனும்
வாயில்லாச்சீவன் மரமேறும்பட்சிகள்தான்
எந்தவிதமாய்த்தான் ஈஸ்பரனைக்கண்டதுகாண்
எந்தஅதிசயத்தை ஆண்டவனேசொல்லுமென்றார்

பிராமணன் அர்ச்சுனனுக்கு ஊர்க்குருவி
வரலாறு கூறுதல்.

அப்போபிராமணனும் அர்ச்சுனற்குஏதுசொல்வான்
ஊர்க்குருவிபட்சியிதி லுண்டானும்பெண்ணுமாக

இந்தவனமதனி லிருந்துவாழுமந்நாள்
பிள்ளைகள்பெற்றிருக்கப் பெருத்தவனந்தனிலே
போவார்வருவார்குஞ்சைப் போடுத்துக்கொள்ளுவார்
இறைதேடிவருவதற்குள் எடுத்துக்கொண்டுபோவார்கள்
கூண்டினிடமாகக் குருவிவந்துபார்த்தவுடன்
அழுதுபுலம்பியே ஆயாசப்பட்டிருக்கும்
மறுகாலொருதாமும் மைந்தனுண்டாயிருக்கும்
பெண்குருவியானது புருஷனுக்கேதுசொல்லும்
என்புருஷாஎன்கணவா என்வார்த்தைநீர்கேளும்
நான்பெற்றபிள்ளையெல்லாம் நமனுக்கிரைகொடுத்தேன்
போவார்வருவாரெந்தன் பிள்ளையைக்கொண்டுபோனார்
இப்போதுபிள்ளைபெற்றால் எவராகிலும்யெடுப்பார்
ஆசைகள்தோணுது ஆணழகாயென்னசொல்வேன்
எங்கேநான்பெற்றெடுப்பேன் எனக்கறியசொல்லுமென
ஆணுற்கேள்பெண்மயிலே ஆரணங்கேயொருவார்த்தை
இந்தவனந்தனிலே இங்கேகுளிகுளித்தால்
நமக்குஅன்னங்கிடையாது அன்னமேநீர்கேளும்
சமுத்திரக்கரையோரம் தாவுண்டுபிள்ளைபெற
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்லும்பெண்குருவி
அலைபெருகிதண்ணீர்வந்து அடித்துகொண்டுபோய்விடு
இப்போதும்பிள்ளைபெற்று ஏமாந்துபோவேனோ [மே
என்றதுகேட்டு ஏதுசொல்லும் ஆண்குருவி
இவ்விடத்தில்பிள்ளைபெற்றால் ஏதுகுற்றம்வந்தாலும்
சமுத்திராஜருடன் சண்டைகள்செய்திடுவேன்
யுத்தங்கள்செய்திடுவேன் உன்பிள்ளைவாங்கிடுவேன்
என்று-தலையிலிடித்துமே சத்தியங்கள்செய்திடுமாம்
சபதங்கள்பண்ணினதை சமுத்திராஜன்கேட்டு
இது-எவ்வளவுஊர்க்குருவி என்னுடன்சண்டைபண்ண
சொல்லாதவார்த்தையைச் சொல்லுதிசிட்டினங்கள்
ஆண்மையைப்பார்ப்போமென் றவ்வருணன்ருனிருந்தா
அப்போதசிட்டினத்தில் அழகானபெண்குருவி [ன்

செத்தையைத்தான் பொறுக்கி சிறுவீடுகட்டிடுமாம்
இருமுட்டையிட்டு இருந்து அடைகாக்க
பின்னுமடைகாத்துப் பெற்றதொருகுஞ்சுகளை
கொப்பெனவேதான்பறந்து குழந்தைக்கிரைதேடும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
தாயுந்தகப்பனுந் தானில்லாவேளையிலே
சமுத்திரராஜனவன் தண்ணீர்பெருகிவந்து
குழந்தையிரண்டையும் கொப்பெனவேகொண்டேகி
பாதாளந்தன்னிலே பத்திரம்பண்ணினாராம்
பட்சிசமர்த்துகளைப் பார்ப்போமென்றுதானிருந்தார்
அந்தச்சமயத்தில் அழகானபெண்குருவி
குழந்தைக்கிரைதேடி கொண்டுவந்துபார்க்கையிலே
மக்களைக்காணுமல் மருகிப்புலம்புகுது
மார்பிலேயுந்தோளிலேயும் வண்ணமுகத்திலேயும்
அறைந்துபுலம்புகுது ஐயோமகனேயென்று
மக்களைப்பறிகொடுத்து மண்மேலேதங்குவேனே
மைந்தனைப்பறிகொடுத்து வயிற்றிலறைந்துசொல்லும்
பாவிகெடுத்தாயெந்தன் பாலகரைக்கொல்லவென்று
என்றும்பகையாளி ஏற்பட்டாயெந்தனுக்கு
புதல்வனைப்பறிகொடுத்து புலம்புதுபெண்குருவி
ஐயையோதெய்வமென்று அலையுதுபெண்குருவி
அந்தச்சமயத்தி லாண்குருவியேதுசொல்லும்
மனதுசலியாதே மக்களைவாங்கித்தாரேன்
சமுத்திரராஜருடன் சண்டைமிகச்செய்து
புதல்வரைவாங்கித்தாரேன் புலம்பாதேபெண்மயிலே
என்றுயெழுந்தது இயலானஆண்குருவி
மூக்கினுர்பனைகிழித்து முனையாலெழுதுகுது
என்னவென்றுவோலை எழுதுதுசிட்டினந்தான்
காக்காய்குருவி கழுகுகள்பருந்துகளாம்
மாடப்புருவாம் மயிலுங்குயிலினமாம்
காடைக்குருவிகளாம் கவுதாரிடேகைகளாம்

அன்னமயிலாழ்வாரும் ஆனமயிலினமும்
கூளிகழுகுமுதற் கோட்டானுமாந்தைகளும்
ஓலைகண்ட நாழிகைக்கு ஓடியேவாங்களென்று
சமுத்திரராஜருடன் சண்டைபண்ணபோகவேணும்
என்னுடயினத்தார்க ளெல்லோரும்வாங்களென்று
வருந்தியெழுதியே வாயசத்தைதானழைத்து
ஓலையைக்கைகொடுத்து உண்மைசிலதுசொல்லி
தெய்வலோகத்தாருக்கும் சேதிசொல்லிவாருமென
வாயுவேகமாகவே வருகுதுவாயசந்தான்
அவனியிலுள்ளவர்க்கும் அந்தரமுள்ளவர்க்கும்
செப்பித்திரும்புகையில் திருமாலருகிருக்கும்
ஆயருடவாகனம் ஆழ்வாரெழுந்திருந்து
மாயனைத்தெண்டனிட்டு வணங்கியேயேதுசொல்லும்
தன்குலராசனுக்கும் சமுத்திரராசனுக்கும்
யுத்தங்களாகிறதாம் உலகளந்தபெருமாளே
என்னைவரவழைத்தார் யானுப்போய்ச்சேரவேணும்
சாஷ்டாங்கதெண்டனிட்டு சாமிக்குரைத்துதப்போ
குலுங்கநகைத்துக் கொட்பெனவேவிடைகொடுத்தார்
பிரமருடவாகனம் பேடன்னத்தோரினமும்
கந்தருடவாகனம் கானமயிலினமும்
மன்மதவாகனம் வர்ணக்கிளியினமும்
சனியனுடவாகனம் சமர்த்தானவாயசமும்
அவரவர்தேவரண்டை அடிபணிந்துதெண்டனிட்டு
சமுத்திரராஜருடன் சண்டைசெய்யப்போரோமென்றார்
அமரதுநடக்குமென்று ஆளோலையனுப்பினது
ஆளகையாலாண்டவனும் அடியேனும்போகவேணும்
எங்களுக்குச்செலவருளும் என்றுபணிந்தது
அத்தண்டதேவர்களும் ஆச்சரியப்பட்டார்கள்
சமுத்திரராஜருடன் சண்டைகளெப்படியோ
இப்புதுமைபார்ப்போமென்று இயலானதேவரெல்லாம்
நாமும்வருகிறோம் நடவுங்கள்முன்னேயென்றார்

தெய்வலோகப்பட்சி திரும்புதுபூமியிலே
தனித்தனிபட்சியெல்லாம் சமுத்திரகரையோரம்
தன்குலத்துராசருக்குச் சரணமிடும் பக்ஷியெல்லாம்
அப்போதுசிட்டினந்தான் அனைவருக்குமேதுசொல்லும்
சமுத்திரக்கரையோரம் தாவுதேடிபிள்ளைபெற்றால்
அலைபெருகிதண்ணீர்வந்து அடித்துக்கொண்டுபோனது
என்னுடையபிள்ளைதனை எடுத்துக்கொண்டுபோனது
ஆகையாலுங்களையும் அவசியம்நானழைத்தேன்
வாருமென்றபோதையிலே வந்தீர்கள்தயவுசெய்து
சமுத்திராராஜருடன் சண்டைகள்செய்திடுங்கள்
என்னுடையபிள்ளையை எவ்விதமும்வாங்கிடுங்கள்
உகந்துஅனைவோர்க்கும் உபசாரஞ்செய்கையிலே
அத்தண்டபக்ஷிகட்கும் அதிககோபமுண்டாகி
காக்காயொருவரிசை கழுகுவொருவரிசை
அன்னமொருவரிசை ஆழ்வாரொருவரிசை
பருந்துமொருவரிசை பச்சைக்கிளியொருவரிசை
மயிலுமொருவரிசை வல்லூரொருவரிசை
குயிலுமொருவரிசை குருவியொருவரிசை
காடையொருவரிசை கவுதாரியொருவரிசை
புல்புல்லொருவரிசை புறக்களொருவரிசை
உள்ளானொருவரிசை கோட்டானொருவரிசை
நாரையொருவரிசை நாகணவாயொருவரிசை
கொக்குவொருவரிசை கோட்டானொருவரிசை
அந்தச்சமயத்தில் அநேகவிதபக்ஷியெல்லாம்
அந்தப்புறங்களிலே அவ்வகுப்பார்சேர்ந்திருப்பார்
அப்போதமரர்களும் அயிராவதத்தோனும்
முப்பத்துமுக்கோடி தேவர்முனிவர்களும்
ஆகாயமார்க்கத்தில் அந்தரமாய்நின்றுகொண்டு
பக்ஷிகள்நின்றிருக்கும் பாவனையைப்பார்த்தார்கள்
எழும்பியேஅந்தரமாய் எட்டிப்பறக்கிறதும்
தானகவேபறந்து தண்ணீரில்தான்குதித்து

இருபக்கம்ரெக்கையிலே எடுத்துஜலங்கொண்டுவந்து
பாரெல்லாம்நீர்தளும்ப பறந்துதெளிக்கிறது
அரைநாழிக்கொள்ளையிலே அடியோடேவற்றிவிட
சமுத்திரமானதெல்லாம் தண்ணீர்வரண்டுவிட
சமுத்திராஜன் சகிக்கமுடியாமல்
தேவர்கள்தன்னுடனே செப்பிமுறையமிட்டான்
அத்தண்டபேரும் அனைவோரும்வந்திறங்கி
சிட்டினத்தைத்தானழைத்து செப்புவார்தேவரெல்லாம்
உன்-தனையனைவாங்கித்தாரோம் சமுத்திரநீருண்டுபண்
எப்போதும்போலநீர் ஏற்படுத்தும்சமுத்திரத்தை [ ணும்
என்றுசொல்லப்பக்ஷியின மெல்லாமொருமித்து
மயிலையருகழைத்து வார்த்தைகளை துசொல்லும்
கந்தருக்குச்சொன்னீரானல் கைவேலாலுண்டுசெய்வார்
என்றுசொல்லிமயிலினங்க ளெல்லாமொருமித்து
வேலவனார்தன்பாதத்தில் விழுந்துமுறையமிட்டு
ஆண்டவனேயென்சாமி அடியேனால்முடியாது
நீர்நினைத்தாலிக்ஷணமே நீரும்பெருகிவிடும்
அடியேனைப்பற்றியே அலைகடலையுண்டுபண்ணும்
என்றுபணிந்து இறங்கியேதொழுதுநிற்க
கந்தர்மனமகிழ்ந்து கடிகியேவில்வளைத்து
வில்லெடுத்துநாரிபூட்டி வேலெடுத்துமந்திரித்து
அலைகடலில்நீரையெல்லாம் அம்பிலொருமுத்தாக
பூமியதிரவே போய்பாயும்வேலிதுதான்
மண்ணிலுள்ளநீரையெல்லாம் வழித்தொருமுத்தாக
முத்தால்வளர்ந்து முனிந்துகடல்பெருக
சந்தோஷப்பட்டானே சமுத்திராஜனவன்
குருவியுடபிள்ளையைக் கொண்டுவந்துதந்தாரும்
ஆதிசிவனாரும் அதிகவரந்தந்தாரும்
முப்பத்துமுக்கோடி முனிவர்கள்தேவரெல்லாம்
சுகமாகச்செல்வத் துடனேயிருப்பீரென்று
வாழ்த்திவிடைகொடுத்து மகாதேவர்போய்நடந்தார்

ஊர்க்குருவிபேறுபெற்ற ஓங்கும்வனமிதுதான்
என்றதுகேட்டு எழில்விஜயராஜாவும்
உற்றுற்றுக்கேட்டு உள்ளமிகமகிழ்ந்தார்
அந்தச்சமயம் அருச்சுனராஜரிடம்
போகவிடைதாருமெனப் புகன்றான்பிராமணனும் [ன்
போய்வாருமென்றுசொல்லி போகலுற்றான்போர்விஜய

பதினோராவது, சபாமிருக வனம்
முற்றிற்று.

## பன்னிரண்டாவது, காளபயிரவ வனம்

பன்னிரண்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
அந்தவனத்தைவிட்டு அப்புறம்போனார்கள்
காளபயிரவ வனத்திலேகாவலர்கள்
அங்கேகுடித்தனமாய் ஐவர்குடியிருந்தார்
காண்டாவனமெரித்த காளையருச்சுனனும்
காளபயிரவ கானகத்தில்வந்தமர்ந்தான்
அங்கேதவமுனிகள் அநேகம்பேரப்பொழுது
சாமியென்றுரைத்தோமே தவசுதலைந்துதையா
சிவனென்றுவந்தோங்காண் செய்ததவம்வீணாச்சு
என்றுமனங்கலங்கி எப்போதும்போலிருந்தார்
அந்தரிஷிகளண்டை அருச்சுனன் தவஞ்செய்தான்
அங்கிருக்கும்ரிஷிகளே அனேகம்பெரியவர்கள்
இத்தனைகாலமட்டும் இருந்துதவம்பண்ணினோம்
இருந்துதவம்பண்ணி ஈஸ்பரனும்வந்ததில்லை
ஆதிசிவனாரை ஆண்டவரைக்காணவில்லை
பரமசிவனாரை பார்க்கஅரிதாகும்
கைலாசவாசலிலே கடுகதவம்பண்ணினாலே

பரமசிவனாரும் பாக்கியந்தந்திடுவார்
சுகமாகவாழ்ந்திடுவீர் துரிதமாயேகுமென
இவ்வார்த்தைதான்கேட்டு இயலானவாள்விஜயன்
எல்லோர்க்கும்சரணமிட்டு எழில்விஜயன்போய்நடந்தா [ன்
கடுகிநடந்தானே கைலாசபருவதத்தில்
பொய்கையில்ஸ்நானம்பண்ணி பூசைதவமுடித்து
காளபயிரவனைக் கருதித்தியானம்பண்ண
எழுபதடிக்கம்பம் எழில்விஜயன் நாட்டினான்
எழுபதடிக்கம்பத்தின்மே லேழுயிளநீரைவைத்தான்
ஏழுயிளநீர்மேல் ஏழுவிளாம்பழத்தைவைத்தான் [ன்
ஏழுவிளாம்பழத்தின்மேல் எலுமிச்சங்கனியைவைத்தா
எலுமிச்சங்கனிமேலே ஏழுகொட்டைபாக்குவைத்தான்
ஏழுகொட்டைப்பாக்குமேல் ஏழுகுண்டுமணியைவைத்தா [ன்
ஏழுகுண்டுமணியின்மேல் ஏழுகடுகுவைத்தான்
ஏழுகடுகதன்மேல் ஏழுசெப்பூசிவைத்தான்
ஏழுசெப்பூசியின்மேல் ஏழுசெவ்வலரிவைத்தான்
ஏழுசெவ்வலரியின்மேல் ஏறினான்தேர்விஜயன்
ஒருகாலேதானூன்றி ஒருகால்முழங்காலில்வைத்தான்
கண்ணிரண்டுமூடியே கர்த்தன்மேல்தியானமானான்
அரகரா அரனேயென்று அடித்தானேசெயகண்டிகை
ஓம்நமசிவாயவென்று ஒலித்தானேசங்குதனை
ஒருவன்சிவனேயென்றால் உலகம்சிவனேயென்னும்
அருந்தவம்பண்ணுகிறான் அருச்சுனராஜதுரை
அகோரதபசுபண்ணுன் ஆண்டவனைக்காணவென்று
ஆதிசிவனார்க்கு அருச்சுனன்செய்ததவம்
பொறுக்கமுடியவில்லை போர்விஜயன்செய்ததவம்
ஆதிசிவனார்க்கு அக்கினியாய்வீசுகுது
காலனைக்காலாலுதைத்த கைலாசநாதரவர்
கோபம்பெரிதாகி கொப்பெனவேயேதுசொல்வார்
ஆடாதூதுவனே அழையுங்கள்மாயவரை
எமன்பிரமாவை இங்கேயழையுமென்றார்

விண்ணுட்டுத்தேவனை விரைந்தோடியழையுமென்ருர்
விக்கினவிநாயகனை வேலவனையழையுமென்ருர்
ஓடியழைத்து ஒருநொடியில்வாங்களென்ருர்
அவ்வார்த்தைதான்கேட்டு அதிவிரைவாய்ஓடிவந்தான்
வைகுந்தம்ஓடிவந்து மாயவரைத்தெண்டனிட்டு
ஆதிசிவனுர் அழைத்துவரச்சொன்னுரென்ருர்
அமராபதியாளும் ஆயிரங்கண்ணனுக்கும்
எமபுரமாளும் எமதர்மராஜனுக்கும்
பிர்மலோகந்தன்னிற் பிர்மதேவனனைவற்கும்
வதிஷ்டரும்வால்மீகர் மகாதவமுடையவற்கும்
அத்தண்டதேவர்முதல் அனைவருக்குஞ்சொல்லினுன்
சிவனுர்வரவழைத்தார் சீக்கிரம்வாருமென்ருன்
அவ்வார்த்தைதான்கேட்டு அவரவர்கள்பயணமானுர்
வாழ்கருடனேறியங்கு வந்துவிட்டார்மாயவனுர்
மத்தகஜமேறியங்கு வந்துவிட்டாரிந்திரனுர்
எமன்கிடாவிலேறி ஈசரருகில்வந்தான்
அன்றுபிரமாவும் அன்னத்தின்மீதில்வந்தார்
கானமயிலேறிக் கந்தரும்வந்துவிட்டார்
மூஷிகவாகனத்தில் முன்ேனுனும்வந்துவிட்டார்
முப்பத்துமுக்கோடி முனிவரும்வந்துவிட்டார்
ஆதிசிவன்பக்கலிலே அனைவரும்வந்துவிட்டார்
வந்துபணிந்தார்கள் மகாதேவன்பக்கலிலே
அத்தியுரித்தவனுர் ஆதிசிவனேதுசொல்வார்
மாயன்பெருமாளே வார்த்தையொன்றுகேட்டீரோ
ஆரோதெரியாது ஆதிகைலாசம்வந்தான்
எவனோதெரியாது இங்கேதவம்பண்ணுகிருன்
கைலாயந்தனிலேதான் கடுகிவாரஞாயமுண்டோ
கைலைக்குஅப்பாலே கானகந்தன்னிலேதான்
கருதிதவம்பண்ணுக்கால் காட்சிவரம்தந்திடுவேன்
இங்கேதவம்புரிய ஏற்குமோசொல்லுமென்ருர்
இவன்-ஆரோதெரியாது ஆண்மையாய்வந்துவிட்டான்

என்-தலைமாட்டில்நின்று சத்தங்கள்போடுகிறான்
ஆரோதெரியாது அறிந்துவந்துசொல்லுமென்றார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
பாண்டுமகாராஜன்பெற்ற பஞ்சவர்களிலொருவனுண்டு
குந்திமாதேவிபெற்ற குலமணிகளிலொருவனுண்டு
நாவிலேநட்சத்திரம் நயனவிழிப்பார்வையுள்ளோன்
மீசைமுழுக்கழகன் விழியிற்கருப்பழகன்
தோளில்துளசிமாலை தொப்புளிலமிர்தகலசம்
பல்லில்பரசவீணை பாதத்தில்செந்தாமரை
பஞ்சவரிலிவனொருவன் பார்த்தீபனென்றார்காண்
இடதுகால்பொம்மைவிருது வலதுகால்வீரதண்டை
சலவிருதுகுலவிருது சமர்த்துகள்படைத்தவன்காண்
சிவபூஜைகுருபூஜை சிவன்பாதம்மறவான்காண்
என்னதவம்வேண்டி யிங்குவந்தானென்றறியேன்
என்றதுதான்கேட்டு யேதுசொல்வாரீஸ்பரரும்
தருமர்தம்பியானாலும் சமர்த்துடையோனானாலும்
கைலாயந்தனிலே கடிகிவரஞாயமுண்டோ
இவன்-இந்தவிதமாயிருந்து ஏதுதவம்பண்ணாலும்
வருந்தியிருந்தாலும் வரமருளப்போறேனோ
தவசைக்கெடுத்திடுவேன் தருமர்தம்பிஅர்ச்சுனரை
என்றுமகாதேவர் எரிபறந்துகண்சிவந்து
வாயுராஜன்தன்னையே வாவென்றழைத்தாராம்
அருச்சுனன்செய்யுமந்த அருந்தவசுக்கம்பமதை
தவசுநிலைக்கம்பத்தை சமுத்திரத்திற்போடுயென்றார்
அரைநாழிக்கொள்ளையிலே அதமாக்கிவாருமென்றார்
என்றதுதான்கேட்டு எழுந்தானேவாயுராஜன்
ஆயன்பெருமாளும் அவ்வார்த்தைதானறிந்தார்
கைமோசம்வந்ததென்று கரியமாலப்போது
அருச்சுனராஜனுக்கு அனர்த்தம்வரநாளாச்சே
காக்கவேணுமென்று கரியமாலோடிவந்தார்
மாயையாய்வந்தாரே வாள்விஜயன்முன்னாலே

காண்டீபா அர்ச்சுனரே கைமோசம்வந்துதடா
ஆதிபரமசிவன் அதிககோபங்கொண்டாரே
வாயுராஜன்தன்னையிப்போ அனுப்பினார்மகாதேவர்
தவசுநிலைக்கம்பமதை சமுத்திரத்திற்போடவாறான்
வாயுராஜனுக்கு வலுவாயிருப்பாயா
என்றதுகேட்டு எழில்விசயனேதுசொல்வான்
உம்மையேநம்பியே உம்பர்புரம்வந்தேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
உள்ளங்கைநெல்லிப்பழம் உருகுலைந்துபோகாதோ
தோளில்செபமாலை தொண்டழிந்துபோகாதோ
பெட்டியிலேபூஷணம் பெருமைகுலையாதோ
கார்க்ககடனுனக்கு கரியமாலெம்பெருமாள்
அண்ணருந்தம்பியரும் அனுப்பினாருன்னை நம்பி
ஆரைநம்பியிங்குவந்தேன் ஆதிகைலாசம்
என்னமாயிருந்தாலும் ஈஸ்பரனேரெந்தனுக்கு
வந்தவினைமாற்றி வரமருளச்செய்யுமையா
என்றுவணங்கினான் இயலானவாள்விஜயன்
சிந்தைமனங்குளிர்ந்து ஸ்ரீராமரேதுசொல்வார்
தர்மர் அர்ச்சுனன்றன் தவசுநிலைக்கம்பமது
வாயுராஜன்வந்து வலுமையாயசக்கினாலும்
ஆதிசிவன்வந்து அசைக்கிவலித்தாலும்
தேவாதிதேவரொன்றாய்ச் சேர்ந்துஅசக்கினாலும்
அருச்சுனன்தவசுநிலை அசையாமலிருக்கவென்றார்
மாயவனார்வரங்கொடுத்து வந்துவிட்டார்கைலையிலே
ஆறுமறியாமல் ஆதிசிவனருகில்வந்தார்
அந்தச்சமயத்தில் ஆங்காரவாயுராஜன்
மண்ணுவிண்ணுந்தானதிர வாரானேவாயுராஜன்
தெற்கேயிருந்து திசைவடக்குமுகம்நோக்கி
இறைந்துவந்துமோதினார் இளவிசயன்தவசடியை
அப்புறத்துக்கிப்புறந்தான் அசையாமல்தானிருக்கும்

மறுகாலொருதரமும் வந்து அறைந்தாலும்
சாயாமல்நின்றது தவசுநிலைக்கம்பமது
தன்னாலேயாகாமல் சங்கரிக்கமுடியாமல்
திரும்பியேவாயுராஜன் சிவனுக்குச்சேதிசொல்ல
அருச்சுனரைப்பார்த்து அதிகப்பிரியமுமாய்
என்னிலும்வல்லபிரான் என்றுமனமகிழ்ந்து
அர்ச்சுனஉந்தனுக்கு அஸ்திரந்தாரேனென்றான்
வாயுவாஸ்திரத்தை வாள்விசயன்கைகொடுத்தான்
வாங்கிநமஸ்கரித்து வாள்விசயனேதுசொல்வான்
எவரனுப்பவந்தீர்காண் என்தவசைநீரழிக்க
என்றதுகேட்டு ஏதுசொல்வான்வாயுராஜன்
ஆதிசிவனழைத்து அனுப்பினார்உன்னிடத்தில்
தவசுநிலைக்கம்பத்தை சமுத்திரத்திற்போடுமென்றார்
ஆகையாலிங்குவந்தேன் அசக்கினேன்கம்பத்தை
என்னால்முடியவில்லை இளவிசயாவுனைசெயிக்க
ஆதிசிவன் ந்திடுவார் அதிகவரந்தந்திடுவார்
என்றுநடக்கையிலே ஏதுசொல்வான்வாள்விசயன்
உம்பர்பிரானுக்கு ஒருவார்த்தைசொல்லுமையா
என்னவென்றுசொன்னானெழில்விசயனர்ச்சுனனும்
கிருபைவைத்துபாசுபதம் கிரீடிக்குத்தாருமையா
வேண்டும்வரங்கள்தனை விமலரேதாருமையா
கேட்டவரங்கள்தனை கிருபைவைத்துத்தாருமையா
வரங்கள்தந்தாலொழிய மலையைவிட்டுப்போவதில்லை
தவசுநிலையைவிட்டுத் தனஞ்செயனும்போவதில்லை
ஆண்டவனேஐயாவே அசட்டையாநீரிருந்தால்
மண்டைபிளப்பேனென்று வாமதேவருக்குநீருரையும்
தலையையுடைப்பேனென்று சங்கரற்குநீருரையு
என்றுவிஜயனெடுத்துரைத்தானப்போது
வாழ்த்திவிடைபெற்று வருகிறான்வாயுராஜன்
ஆதிசிவனுற்கு அடிபணிந்துதெண்டனிட்டு
மான்மழுதரித்ததேவா மலர்ப்பாதம்சரணமையா

அர்ச்சுனன்தபசழிக்க ஆராலுமுடியாது
உம்பர்பிரானே உம்மாலுமாகாது
காட்சிதராவிடிலோ காண்டீபத்தாலடிப்பேனென்றான்
வரங்கள்கொடாவிடிலோ மண்டைபிளப்பேனென்றார்
என்றதுகேட்டு ஈஸ்பரனார்கோபமானார்
கேட்டீரோமாயவரே கர்வத்துடன்சொன்னது
மண்டையுடைக்கவும் வரம்வாங்கும்வல்லவனோ
காண்டீபத்தாலடித்து கடிகிவரம்வாங்குவானோ
தலையையுடைப்பேனென்ற தனஞ்செயனையிப்போதே
மண்டை தனையுடைத்து வல்லுயிரைவாங்கிடுவேன்
என்றுபரமசிவன் எறிபரந்துகண்சிவந்து
ஆரடா இடிபகவான் அதிவிரைவாய்வாருமென்றார்
எழிடியுங்கூடியொரு பேரியாயிடித்து
அர்ச்சுனன்றலையை அறுபதுசுக்கலாக்கி
கொன்றுஅதமாக்கிக் கொப்பெனவேவாருமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆங்காரயிடிபகவான்
அஷ்டகிரிபர்வதங்கள் அதிர்ந்துநடுக்கமுற
எழுந்தானிடிபகவான் ஏழுலகந்தானதிர
அந்தச்சமயத்தில் அரிராமர்ஓடிவந்தார்
அர்ச்சுனபார்த்தீபா ஆதிசிவன்கோபமானார்
இடிபகவான்தன்னை ஈஸ்பரனாரனுப்பினார்
தலையையுடைக்கவென்று தான்வாரானிடிபகவான்
தப்பித்துக்கொள்ளுமென்று சாமியவர்போய்விட்டார்
அந்தச்சமயத்தில் ஆங்காரயிடிபகவான்
தெய்வலோகந்தானதிர தேவர்க்கிடுகிடென்ன
பாதாளஆதிசேஷன் பயந்துகிடுகிடென்ன
கெற்பங்கிடுகிடென்ன கிளிகள்சமரிக்கொள்ள
அஷ்டகிரிபர்வதங்கள் அமிர்ந்துகிடுகிடென்ன
எட்டுத்திசைநடுங்க ஏழுலகந்தத்தளிக்க
எழிடியுங்கூடியொரு பேரிடியாய்த்தானிடித்து
அருச்சுனற்குநேராக ஆகாயமீதிருந்து

உறுதியாய்ப்பலங்கூட்டி உச்சியிலேதானிடித்தான்
வரட்டும்யிடிபகவான் என்றல்லோவாள்விஜயன்
இடிபகவான்வருகையிலேஎழில்விஜயனென்னசெய்தான்
சஞ்சரித்துத்தானிருந்து ஒருபக்கம்இடிக்கிடவே
கண்முழிபிதுங்குது கண்ணீருந்தான்வடிய
இளப்புந்தவிப்புமா யிருக்குதிடிதேவருக்கு
மெச்சினேன்மருமகனே விட்டுவிடுமென்னையென்றார்
என்யகளைமின்னொளியை ஈய்ந்திடுவேனுந்தனுக்கு
இப்பொழுதுந்தனுக்கு இடியாஸ்திரந்தாரேனென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனேதுசொல்வான்
இனிமேல்கலியுகத்தில் எங்கேயிடித்தாலும்
அருச்சுனனென்றுசொன்னால் அப்பால்நீபோரீரோ
என்பேருசொன்னுக்கா லேழூகாதம்போரீரோ
அவசியம்போரேனென்று ஆணையிட்டானிடிபகவான்
எவரனுப்பவந்தீர்காண் என்னையிடித்துக்கொல்ல
என்றதுகேட்டு ஏதுசொல்வானிடிபகவான்
ஆதிசிவனார் அனுப்பினாருன்னிடத்தில்
ஆங்காரத்துடன்வந்து அகப்பட்டேனுன்றன்கையில்
சத்தியவானென்தலையை தப்பிவிட்டாய்மகாராஜர்
உன்-புண்ணியத்தினாலே பிழைத்துமேநான்போறேன்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனனேதுசொல்வான்
ஆதிசிவனாற்கு அடிபணிந்தேனென்றுசொல்லும்
ஏதுவருத்தங்கள் என்னயிடர்செய்தாலும்
அர்ச்சுனன்வரத்துக்கு அழிவுவரப்போறதில்லே
ஈஸ்வரரேஉன்கையில் எந்தவிதமானாலும்
வரம்வாங்கவல்லபிரான் வாள்விஜயனென்றுசொல்லும்
இடிபகவானுக்குரைத்து எழில்விஜயன்தானனுப்ப
அரனைமறவானும் அரன்மேலேதியானமானான்
சிவனைமறவானும் சிவன்மேலேதியானமானான்
அந்தச்சமயத்தில் ஆதிசிவனாரிடத்தில்
வந்தானிடிபகவான் வணங்கியேநமஸ்கரித்தான்

ஆண்டவனேஐயாவே அடியேனொருவிண்ணப்பம்
உன்வார்த்தைக்கேட்டுப்போய் உயிரிழக்கநாளாச்சே
ஏழிடியுங்கூடியொரு பேரிடியாய்தானிடிந்தே
இறங்கிதலைசாய்ந்து என்னையேபிடித்துக்கொண்டான்
சத்தியவானர்ச்சுனனும் தப்பவிட்டானென்தலையை
ஏதுநீர்செய்தாலும் இளைத்துவிடானர்ச்சுனனும்
வரம்வாங்கிப்போகவல்லான் வாள்விஜயனர்ச்சுனனும்
அவனை-சித்தமதில்நினைக்கத் தேகம்நடுங்குதையா
பின்னும்நினைவுகொண்டால் பிராணன்பதைக்குதையா
என்றுசொல்லயிடிபகவான் ஈசனதற்குரைப்பார்
அத்தனைக்கும்வல்லவனோ ஆண்பிள்ளையர்ச்சுனனோ
அரைநாழிக்கொள்ளையிலே அதமாக்கிபோடுகிறேன்
அநேகமானசெல்லுகளை ஆண்டவனுருண்டுபண்ணூர்
செல்லுகளே நீங்களும்போய் சீக்கிரம்விஜயனுடன்
சரீரமாதியந்தமெங்குஞ் சல்லடைக்கண்களாகத்
துளைத்துவிட்டுவாருமென்று சொன்னூர்பரசுபாணி
வருகுதுசெல்லதுதான் வாள்விஜயன்தன்னருகே
அந்தச்சமயத்தில் அரிராமரோடிவந்து
அர்ச்சுனாவாள்விஜயா அனேகமோசம்வருகுதடா
ஆண்டவன்கோபமதாய் அநேகஞ்செல்லனுப்பிவைத்த
என்றதுசொல்லியே எம்பெருமாளேகிவிட்டார் [தான்
அந்தச்சமயத்தில் அநேகமானசெல்லுவர
சுரேந்திரன்மைந்தனையுஞ் சூழ்ந்ததுசெல்லுகள்தான்
கண்டானே அர்ச்சுனனும் காண்டீபம்தான்வளைத்தான்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
அக்கினிஅஸ்திரத்தை அருச்சுனனுச்சரித்து
மார்புரளவாங்கினான் வளரவிட்டானக்கினியை
அருச்சுனன்தவசுநிலை கம்பத்தருகாக
அக்கினிவருகுது அண்டமுடியாது
செல்லுகளண்டாமல் செந்தணலாய்ப்பத்துகுது

பார்த்துப்பயந்து பறந்தது செல்லுகள்
சங்கரன்தன்னருகே சரணமிட்டுயே தசொல்லும்
ஐயாவேஈஸ்வரரே ஆண்டவரே நீர்கேளும்
அருச்சுனன்தன்னருகே அக்கினிவளருகுது
ஆற்றமுடியாமல் ஐயாவேவந்துவிட்டோம்
ஆதிசிவன்கேட்டு அதிககோபமுண்டாகி
அத்தனைக்கும்வல்லவனே அர்ச்சுனராஜனுந்தான்
என்றுபரமசிவன் எரிபறந்துகோபமுடன்
வருணபகவானை வாருமென்றுதானழைத்து
யானையுடகால்பெருமன் யானைமழைபெய்யுமென
கட்டளையிட்டுக் கடுகியேபோமென்றார்
ஆதிசிவன்வார்த்தை அவ்வருணன் தவறாமல்
சமுத்திரத்தின் நீரையுண்டு தான்வருகுதுமேகங்களும்
கார்மேகமேழுங் கருத்துயெழும்பியது
ஆனைக்கால்போலவே அவ்வருணன்மழைபொழிய
அந்தச்சமயத்தில் ஆயருமோடிவந்தார்
அருச்சுனவாள்விஜயா ஆண்டவனார்கோபமதாய்
வருணபகவானை மழைபொழியயனுப்பினார்
எச்சரிக்கையாகவே இருமென்றுதானடந்தார்
அந்தச்சமயத்தில் ஆயருமோடிவந்தார்
மேகமெழும்பி மின்னல்வருகையிலே
கண்டானேவாள்விஜயன் கனமோசம்வருகுதென்று
வில்வளைத்து நாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
சங்கரமாரிபோலே சரமேற்சரம்பொழிந்தான்
அம்பினால்மூடுபந்தல் அருச்சுனன்போட்டுவிட்டான்
வான்மழைபொழியாமல் வாள்சரத்தால்பந்தலிட்டான்
வருணபகவானும்வந்துமழைபொழிந்தான்
வெள்ளமாய்த்தான்பெருக வேணமழைபொழிந்தான்
அருச்சுனன்வளர்த்தின அக்கினிக்குச்சேதமில்லை
வருணபகவானும் மனதுமிகக்குளிர்ந்து
சந்தோஷப்பட்டானும் தார்விஜயனர்ச்சுனன்மேல்

என்னிலும்வல்லபிரான் என்றுமனமகிழ்ந்து
வருணாஸ்திரத்தை வாள்விஜயன்கைகொடுத்தான்
வாங்கியேவாள்விஜயன் வருணனுக்கேதுசொல்வான்
ஆரனுப்பநீர்வந்தீர் அமரதுசெய்யவென்று
என்றதுகேட்டு ஏதுசொல்வான்வருணராஜன்
ஆதிசிவனார் அனுப்பினார்வந்தேனென்றான்
எழில்விஜயாஉனைஜெயிக்கயென்றால்முடியாது
ஈசனார்தன்தமக்கு இவ்வார்த்தைசொல்லப்போறேன்
ஆனால்வருணனேநீர் அரனார்க்கெடுத்துரையும்
கோடிசரணமும் கும்பிட்டேனென்றுசொல்லும்
அகச்சாடல்செய்வதேனோ அருச்சுனன்மேல்கோபமே
கடிகியேவந்தெனக்கு காட்சிதரச்சொல்லுமையா [னோ
போய்வாருமென்று பொட்டெனவேசரணமிட்டான்
வாயுவேகமாகவே வருணராஜன்வந்துவிட்டான்
ஆதிசிவனுக்கு அடிவணங்கித்தெண்டனிட்டான்
அருச்சுனன்தனைஜெயிக்க ஆராலுமுடியாது
உம்பர்பிரானே உம்மாலேமுடியாது
அத்தனைக்கும்வல்லபிரானாகையாலிங்குவந்தான்
கோரினவரத்தைநீர் கொடுத்தனுப்புமீஸ்வரரே
என்றதுகேட்டு ஈஸ்பரனார்கோபமானார்
வாள்விஜயன்தன்னுடைய மனமுடுக்கழிக்கிறேன்பார்
கழுகுகளுங்கூளிகளும் கடிகியேஉண்டுபண்ணார்
அர்ச்சுனன்மாங்கிஷத்தை யடங்கலுமுண்ணுமென்றார்
கவ்விப்பிடிங்கியே கடுகியேயுண்ணுமென்றார்
இமையோர்பிரானாரும் இன்னமேதுண்டுபண்ணார்
கருவண்டுசெவ்வண்டு கணக்கில்லாதுண்டுபண்ணார்
கொட்டுகின்றகுளவியை கோடியவருண்டுபண்ணார்
சுரேந்திரன்மகனுடலைத் துளையாய்துளையுமென்றார்
அரைக்ஷண நாழிகையில் அருச்சுனரைகொல்லுமென
மகாதேவர்சிலவருள வருகுதுசேனைகள்தான்
குளவிகளும்கூளிகளும் கூட்டமாய்வருகுதங்கே

கனமோசம்வருகுதென்று கரியமால்தானறிந்து
அருச்சுனராஜரண்டை அரிராமரோடிவந்தார்
காண்டீபா அர்ச்சுனரே கழுகுகள்வருகுதடா
குளவிகளும்கழுகுகளும் கூளிகளும்வண்டுகளும்
அனேகம்வருகுது அங்கந்துளைபடுத்த
எச்சரிக்கையாகவே இருங்காணும் அர்ச்சுனரே
என்றதுகேட்டு இந்திரன்மகனே துரைப்பான்
அடியேனாலேதாகும் ஐயாபெருமாளே
உன்வலிமையாலே உம்பர்புரம்வந்தேனே
எந்தவிதத்திலேயும் ஈடேறப்பாருமையா
வணங்கிச்சரணம்பண்ணான் மாயன்பெருமாளை
தரணியளந்தவரும் சந்தோஷப்பட்டாரும்
கழுகுகளுங்கூளிகளுங் கவ்விச்சதைகொண்டாலும்
அருச்சுனன்தேகத்துக்கு அழிவில்லாதேயிருக்க
என்றுவரமளித்து எம்பெருமாள்போய்நடந்தார்
வந்துபிடிங்கிற்று வாள்விஜயன்தேகமெல்லாம்
சல்லடைக்கண்போலே சமமாய்த்துளைப்படுத்தும்
எப்போதும்போலே ஏற்படுந்தேகமெல்லாம்
கைகள்நகம்பேர்ந்து கடித்தபல்லும்கூர்மழுங்கி
மூக்குகள்தானொடிந்து முண்டங்களாயோடுகுது
ஆதிசிவனருகில் அடிபணிந்துதெண்டனிட்டு
கைகட்டிவாய்புதைத்து கழுகுகள்முறையமிடும்
எங்களாலானமட்டும் எழில்விஜயன்தேகமதை
சல்லடைக்கண்களைப்போற் சதையைத்துளைத்திடுவோம்
சதையைத்துளைத்திடுவோம் வதையைப்பிடுங்கிடுவோம்
குப்பல்குப்பலாகவேதான் குழிப்போமேமாங்கிஷத்தை
குவித்தரைநாழிகைக்குள் கூடிவிடுந்தேகமதில்
துளைத்தரைநாழிகைக்குள் தோன்றுமுடல்முன்போல
பின்னுஞ்சதைகவ்விப் பிடுங்கியெறிந்திடுவோம்
அருச்சுனன்தேகமதை அழித்தோம்அழியவில்லை
கடித்தபல்லும்கூர்மழுங்கி கைகள்நகம்பேர்ந்துதையா

எங்களால்முடியாது இளவிஜயனைச்செயிக்க
ஆராலுமுடியாது அருச்சுனரைசெயிக்க
கோரினவரத்தை கொடுத்துவிடும்ஆண்டவரே
அவ்வார்த்தைதான்கேட்டு ஆதிசிவனேதுசொல்வார்
எத்தனை நாள்தவசிருந்து ஏனென்றுகேட்பேனோ
என்றுபரமசிவன் இருந்தார்சிங்காதனத்தில்
கற்பூரமண்டபத்தில் கர்த்தர்கொலுவிருந்தார்
மாயன்பெருமாளும் மறுபடியுமோடிவந்தார்
அருச்சுனுபார்த்தீபா ஆதிசிவன்மோசஞ்செய்தார்
கற்பூரக்கொடிமுடியில் கர்த்தர்கொலுவிருந்தார்
கற்பூரக்கொடிமுடியை கனலாற்கொளுத்திவிட்டால்
கலகத்தைசெய்துவிட்டால் காட்சிதனைத்தந்திடுவார்
என்றதுசொல்லி எம்பெருமாள்போய்நடந்தார்
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசெய்வான்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
அக்கினிபாணமதை அருச்சுனன்உச்சரித்து
மந்திரமுச்சரித்து மண்டபத்தைக்கொளுத்துமென
மார்புரளவாங்கியே தோள்புரளவிட்டுவிட்டான்
வந்ததுபாணம் மகாதேவர்மண்டபத்தில்
கற்பூரமண்டபத்தைக் கடுகிக்கொளுத்திடவே
மண்டபந்தானெரிய மகாதேவர்பார்த்துவிட்டார்
பார்த்திரோமாயவரே பார்த்தீபன்தன்வலுவை
என்-வீட்டைக்கொளுத்தியே வேணவரம்வாங்கவந்தான்
இப்படிசெய்தவர்களெவர்களையும்நானறியேன்
சதுர்யுகமட்டும் தபசுகள்பண்ணுலும்
அருச்சுனன்தமக்கு அரியவரந்தருவதில்லை
கற்பூரமண்டபத்தைக் கடுகியேவிட்டெழுந்து
சாம்பிராணிமண்டபத்தில் சாமிவந்துகொலுவிருந்தார்
சாம்பிராணிமண்டபத்தைத் தணலாய்கொளுத்துமென
சொல்லிநடந்தாரே சுவாமிபெருமாளும்
மறுகாலருச்சுனனும் வருவில்வளைத்துக்கொண்டு

அக்கினி அஸ்திரத்தை அருச்சுனன்முடுக்கிவிட்டான்
சாம்பிராணிமண்டபத்தை தணலாயுருக்கிடுது
கண்டார்மகாதேவர் கடுகியங்கேதுசொல்வார்
கண்டீர்களோதேவர்களே காண்டீபன் ஆண்மைகளை
என்-வீட்டைக்கொளுத்தியே வேணவரம்வாங்கவந்தான்
இந்தஆண்மையுள்ளவனை எங்குமேநானறியேன்
வெண்ணீருமண்டபத்தில் விமலரும்போய்நடந்தார்
மாயன்பெருமாளும் மாயமாயோடிவந்து
அர்ச்சுனபார்த்தீபா அதிகமோசம்வந்துதடா
விபூதிமண்டபத்தில் வேந்தரும்போய்நடந்தார்
அப்பெரியமண்டபத்தை அதமாக்கிப்போடுமென்றார்
அவ்வார்த்தைசொல்லி அரிராமர்போய்நடந்தார்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
வருணபகவான் வரமளித்தஅஸ்திரத்தை
மந்திரதூபமிட்டு வாங்கினார்மார்புரள
வந்துவிழுந்தது மயேஸ்வரனார்மண்டபத்தில்
வான்மழைபோலாக வந்துபொழிந்திடுமாம்
வெண்ணீறுமண்டபமும் மெத்தைகரைந்திடவே
கண்டார்மகாதேவர் கண்கொள்ளாக்கோபமுடன்
ஆயன்பெருமாளே அர்ச்சுனன்ஆண்மைதனை
கண்டீரோமாயவரே காண்டீபன்ஆண்மைதனை
எத்தனைமண்டபத்தை இடித்துத்தகர்த்துவிட்டான்
இப்படிப்பட்டவர்க்கு எப்படிவரமளிப்பேன்
இங்கிருந்தோமானால் இப்படிக்குபண்ணுகிறான்
பாதாளமண்டபத்தில் பரமசிவன்போகவென்று
எழுந்தார்மகாதேவர் எல்லோருங்கூடிவர
அந்தச்சமயத்தில் அரிராமரோடிவந்தார்
அருச்சுனபார்த்தீபா அதிகமோசம்வந்துதடா
பாதாளமண்டபத்தில் பரமசிவன்போனார்காண்
போய்விட்டாராமானால் பிற்பாடுகாணொணாது
காணக்கிடையாது கர்த்தருடசேவை

போகாமலேதடுத்தால் பெருமானைக்கண்டிடலாம்
என்றதுசொல்லி எம்பெருமாள்போய்நடந்தார்
மாயவர்போனபின்பு வாள்விஜயனேதுசொல்வான்
காண்டீபன்வில்வளைத்து கணையெடுத்துவுச்சரித்தான்
கடிகிமறித்துவிடும் என்றுகணைதொடுத்தான்
வந்துதடுத்தது வாள்விஜயன்விட்டபாணம்
மகாதேவர்முன்பாக வளர்ந்தது அக்கினிபோல்
மூக்கண்ணுடையவரை முன்னேதடுத்ததுகாண்
கண்டார்பரமசிவம் கண்கொள்ளாக்கோபமுடன்
கண்டீரோதேவர்களே காண்டீபன்ஆண்மைகளை
இப்படிப்பட்டவற்கு எப்படிவரங்கொடுப்பேன்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்தேவரெல்லாம்
தருமர்தம்பிஅருச்சுனற்கு சமர்த்துகள்மெத்தவுண்டு
இவருடன்எதிர்த்தவர்கள் எவரும்பிழைத்ததில்லை
காட்சிதந்தாலல்லாது கனமோசம்வந்துவிடும்
என்றதுகேட்டு ஏதுசொல்வாரீஸ்வரரும்
அர்ச்சுனன்சமர்த்துகளை ஆண்மைகளைகாணுகிறேன்
தவசுநிலைக்கம்பத்தை தரையோடமிழ்த்துகிறேன்
என்றுபரமசிவன் எமனைத்தானழைத்து
எமதர்மராசரேநீர் ஏனம்போல்வடிவெடுத்து
அருச்சுனன்தன்னருகில் அபயமிட்டுஓடுமென்றார்
கடுகியனுப்பினர் கடவுளுமவனையங்கே
எமதர்மராஜன் ஏனம்போல்வடிவெடுத்து
பன்றிவடிவெடுத்து பார்த்தீபனருகில்வந்தான்
அபயமபயமென்று அழுதுபுலம்பிவாறான்
அபயமென்றசத்தம் அருச்சுனன்தான்கேட்டு
அபயக்குரல்கேட்டால் ஆதரிக்கவேணுமென்று
அலகம்புஅஸ்திரத்தை அருச்சுனன்விட்டுவிட்டான்
காட்டுப்பன்றிதன்னையும்நீ கம்பத்தில்கட்டுமென்றான்
மந்திரதூபமிட்டு வாங்கினனருச்சுனனும்
வந்ததுஅஸ்திரந்தான் வளைத்துமேகட்டுகுது

கம்பத்துடனேதான் கட்டியேபோடுகுது
கட்டுண்டான்காவலன் காண்டீபன்தன்சரத்தால்
அந்தச்சமயத்தில் ஆதிசிவனெழுந்தார்
மெத்தப்பெரியவராய் வேடன்வடிவெடுத்தார்
பிரமதேவன்தானும் பெரியதொருவேடரானார்
விக்கினவிநாயகர் வேடர்வடிவெடுத்தார்
சூரர்குலம்வேரறுத்த சுப்ரமண்யர்வேடரானார்
அமராபதியாளும் அங்கபிரான்வேடரானார்
ஆடியளந்தமாயவரும் அங்கேவொருவேடரானார்
அருச்சுனரைவெல்லவென்று அனைவரும்வேடரானார்
ஈஸ்பரியைத்தானழைத்து இப்போசமயமென்றார்
ஈஸ்பரியாள்தன்னுடனே ஏழுபேர்வேடரானார்
வாரார்வடிவெடுத்து வாள்விஜயன்தன்னருகே
காற்செருப்புத்தோல்குல்லாவுங் கையில்துப்பாக்கிகளும்
மான்வலையுஞ்சில்லாக்கோல் மருந்துகேப்குண்டுகளும்
ரெட்டைகுண்டுதுப்பாக்கி நேரிசத்தோளில்வைத்து
சின்னவேடன்பெரியவேடன் சிவனார்கிழவேடன்
பொன்னூற்றமுக்கடித்து புறப்பட்டார்வேடரெல்லாம்
மற்றுமுள்ளதேவதைகள் வயிரவனார்வடிவெடுத்தார்
கருநாயுஞ்செந்நாயும் கணக்கில்லாநாய்கள்வர
காட்டைவளைத்தார்கள் கருநாயைச்சுத்திவிட்டார்
அம்புவில்லாயுதமும் ஆண்டவனார்கைபிடித்து
வாரார்கள்வேடரெல்லாம் வளைத்துத்துரத்தியல்லோ
அத்தண்டவேடுவரும் அர்ச்சுனரருகில்வந்து
ஆர்காணுஞ்சங்கமரே அறிவைப்படைத்தவரே
புதிதாய்தபசுபண்ணிப் புத்திமெத்தக்கற்றவரே
தீரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
ஏழைகண்டாய்வேடுவனுன் எட்டுநாள்காத்திருந்தேன்
காத்திருந்திவ்வேனமதை கணையாலேஎய்துவிட்டேன்
காயம்பட்டுயேனம் கடுகியேவந்தோதித்து
ஏனம்வந்தசாடையிது இப்போதடிபிடித்து

அடிபிடித்துவந்தோம் ஆனதொருசங்கமரே
கம்பத்துடனே நீர் கட்டிவைத்தகாரியமேன்
பசியோடிருக்கிறோம் பன்றிதனைவிட்டுவிடும்
பிள்ளையுங்குட்டிகளும் பெரும்பசியாய்ப்புலம்புகிறோம்
கட்டவிழ்த்துவிட்டுவிடும் கடுகப்புசித்திடுவோம்
என்றுசொல்லிக்கொண்டு ஈஸ்பரனூர்தான்வரவே
காண்டீபனர்ச்சுனனுங் கடுகியேயேதுசொல்வான்
சிவத்தியானமாகவே சிலைவிஜயனேதுசொல்வான்
ஆரடாவேடுவனே அப்புறத்தேபோய்விடுங்காண்
அபயக்குரல்கேட்டால் ஆதரிப்பேனல்லாமல்
இனிமேல்விடுவேனென்று எண்ணாதேயுன்மனதில்
பன்றியைத்தின்றாலே பசியாறிப்போவாயோ [ண்
குழந்தைக்குழந்தனுக்குங் குலத்தாற்கும்போதுமோகா
தன்னைப்போல்ஜீவன்களை தான்கொல்லஎண்ணுவரோ
சிவனாரைநோக்கியே செய்கிறேன்தவசுநிலை
எதிரிட்டுக்கொள்ளாதே இடையுங்கள்வேடுவரே
அரகராஅரனேயென்று அடித்தானேஜெயகண்டி
சம்போசிவனேயென்று தொனித்தானேசங்குதனை
ஆதிசிவனும் அர்ச்சுனற்குயேதுசொல்வார்
எத்தனைசொன்னாலும் இரங்கலையோயுன்மனது
தருமம்நினைத்தாக்கால் சாமிவந்துதுணையாவார்
வயிறுபசிதீர்த்தாக்கால் மகாதேவர்துணையாவார்
உன்-தாயார்தகப்பனுக்குத் தமையற்குந்தம்பியற்கும்
ஒருகோடிமோட்சமுண்டு உச்சாகஞ்செய்யுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனரேதுசொல்வார்
ஒருகாலுரைத்தேனே மறுகாலுரைப்பேனோ
தவசுநிலைவேளையிலே சத்தங்கள்போடாதே
சந்திரர்கள்சூரியர்கள் தவநிலைதப்பினாலும்
காலம்பிரண்டு கலியுகம்வந்தாலும்
நறிக்கிப்பிழிந்துஎன்னை நரகத்திற்போட்டாலும்
வாயாரச்சொன்னசொல்லு மறந்துவிடப்போறதில்லை

ஆதரிப்பேனல்லாமல் அலையவிடப்போறதில்லே
மறுவார்த்தைபேசாதே வல்லுயிரைவாங்கிடுவேன்
எதிரேவரவேண்டாம் இடையநில்லும்வேடுவரே
அரகரா அரனேயென்று அரன்மேலேதியானமானான்
அப்போதுபரமசிவன் அருச்சுனற்குஏதுசொல்வான்
நான்-ஏழையன்றோசங்கமரே என்னைமிரட்டுகிறாய்
என்னைத்துரத்திவிட்டென் பன்றியைத்தின்னவென்றோ
என்னைமிரட்டுகிறாய் இவ்வார்த்தைநானறியேன்
நான்போவேனென்று எண்ணாதேஉன்மனதில்
ஆறுபேர்வேடுவர்கள் அருங்கிளியாள்வேடுவச்சி
உத்தமனே நீயொருவ னுகந்துமேகூடியல்லோ
பன்றிதனைச்சுட்டு பங்கிட்டுகொள்ளுவோம்வா
பங்குபோட்டுத்தின்று பசியாறிக்கொள்ளுமென்று
என்றதுகேட்டு யேதுசொல்வார்சங்கமரும்
ஜாதிக்குத்தக்கபுத்தி தானிருக்கும்வேடருக்கு
என்றுசொல்லிவேடுவரு மேதுசொல்வாரப்போது
ஆண்டிப்பயலுக்கு அறிவுகிடையாது
பசிக்குதெனவேண்டி பன்றிமேலம்புதொட்டேன்
தப்பித்துவோடிவாக் கப்பத்திற்கட்டலாமோ
கீழேயிறங்கிவாடா கேடுகெட்டசங்கமனே
என்சமர்த்தும்உன்சமர்த்தும் இப்போதெரியுமடா
சண்டைக்குவாடா நீ சமர்த்துள்ளசங்கமனே
என்றவுடன்கம்பம்விட்டு இறங்கினான்வாள்விஜயன்
வாள்விஜயன்றன்முதுகில் மச்சரேகைபார்க்கவென்று
பரமசிவனும்வந்து பார்த்தனுடன்சண்டைபண்ணார்
ஆண்டவனென்றறியாமல் அடித்தான்காண்வில்லாலே
பரமருங்கீழ்விழுந்து பார்த்தனையெடுத்துக்கொண்டார்
பார்வதியாள்பார்த்தாளே பார்த்தனிடமச்சரேகை
பார்த்தீபனென்று பார்வதியாள்கொடுத்தாள்
பாசுபதாஸ்திரம் பரமருந்தான்கொடுத்தார்
அநேகவரம்பெற்று அருச்சுனனுந்தான்வாரான்

அண்ணனிடம்வந்து ஆடையுடனுரைத்தான்
பன்னிரண்டுவருஷமும் பாரவனந்திரிந்து
ஐவர்பஞ்சபாண்டவரே ஆரணியம்விட்டுநீங்கள்
அக்கியாதவாசம் அருந்தபசுசெல்லுமென்று
இச்சையுடனுரைத்து எம்பெருமாள்பயணமானூர்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்ருர்
துவாரகாபுரிநோக்கி சுவாமியவர்போகலுற்ருர்
அப்பால்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்விட்டலவோ
பரமருடதயவால் பன்னிரண்டுவருஷஞ்சென்று
வனவாசமேசென்று வாரார்கள்பஞ்சவர்கள்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்விட்டலவோ
நாடேவருகிருர் ராமருடதயவால்
பாரிலுள்ளஆடவரும் பாலகரும்மங்கையரும்
ஆரியரும்மற்ருேரும் யாவர்களும்தான்படிக்க
முன்னுளில்மூத்தோர் மொழிந்தவசனமதை
இன்னுளிற்போற்ற வெழுதாவெழுத்ததினுல்
அச்சுக்கூடத்ததிப ரனேகரிதுவரையில்
உச்சிதமாயச்சிலிதை யோங்கப்பதிப்பித்தார்
அட்டதிக்கும்புகழ அச்சிலிதைத்தாணியற்றி
கற்ருேரும்மற்ருேருங் களிப்பாய்படிப்பதற்கு
சொற்குற்றமில்லாமல் சுத்தப்பிரதியதாய்
தப்பிதங்களைத்திருத்தி தன்னுலியன்றமட்டும்
பதிப்பித்தார் திருமகள்விலாச அச்சுக்கூடந்தன்னில்
இந்தக்கதையிலே எழுத்துப்பிழையிருந்தால்
தப்புப்பிழைதிருத்தி தயவுபண்ணிஇரட்சிக்கவும்

வாழி

ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரூன்றி
பால்போல்ருசிக்கப் பாரில்மிகத்தான்வாழி
மூங்கில்போல்சுற்ற முசியாமல்தான்வாழி
ஓங்கியநால்வேத முயல்பலவுந்தான்வாழி.

விருத்தம்

இப்பெருங் கதையை யுரைத்தவர் படித்தோர்
  எழுதினோர் பொருள்விரித் துரைத்தோர்
செப்பரு மன்னுற் கேட்டுளோ ரிதன்பேர்
  செப்பினோர் தீமையிற் றீர்ந்தே
எப்பெருஞ் சிறப்பு மைந்தரும் வாழ்வு
  மிசைந்ததீர்க் காயுளு முளராய்
ஒப்பருங் கதியி னிலைபெற விளங்கி
  யும்பரும் புகழவாழ் குவரே.

## பஞ்சபாண்டவர் வனவாசம்

முற்றிற்று.



திருமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1936.

S. S. வாசன் எழுதிய

# இல்வாழ்க்கையின் * * * * இரகசியங்கள்

இதன் விலை ரூபா 2.

இதுவரை தமிழ்ப் பதிப்பில் மட்டும் 20,000 பிரதிகள் விற்பனையா யிருக்கின்றன. இப் புத்தகத்தைக் குறித்து எங்களுக்குத் தினமும் அநேக நற்சாட்சிப் பத்திரங்கள் வந்துகொண்டே யிருக்கின்றன. குடும்பஸ்தர் ஒவ்வொருவர்க்கும் இந்நூல் அவசியம் வேண்டுவதாதலால், அறிந்தோர் இந்நூலைத் தம் பந்து மித்திரர்களுக்கு வாங்கிக் கொடுக்கின்றனர். சிலர் கலியாணங்களில் தம்பதிகளுக்கு இந் நூலில் ஒன்றைப் பரிசளிக்கின்றனர். வாழ்க்கையின் இரகசியங்களை அறியாதவருக்கு இல்லறத்தில் இன்பம் இல்லை என்பது நிச்சயம். இப் புத்தகம் கலியாணமானவருக்கும், இனி கலியாணம் செய்துக் கொள்பவருக்கும் மிகவும் அவசியமானதாகும்.

# பழைய கொக்கோகம்

விலை ரூபா ½.



அதிவீரராம பாண்டியனால் இயற்றப்பட்ட பழைய கொக்காகேத்தின் உண்மை அச்சுப் பிரதி இதுவே. காலதேச வர்த்தமானங்களுக்கேற்ற இன்றைய மேதாவிகளான காமகலா சாஸ்திரக்ஞானிகளின் அபிப்பிராயங்களும் கலந்து பழமையோடு புதுமையுங்கூடி பொன்மலர் வாசனை கொண்டதுபோல் உங்களைக் குதூகலிக்கச் செய்யும். பல அழகிய ஆப்டோன் படங்களுடனும் கூடியது. அழகிய பயிண்டு சிறந்த அச்சு. நல்ல வசனம் எல்லாம் கூடி ஒருங்கு அமைந்த பழைய கொக்கோகம் இதுவே.

எல்லா புஸ்தகங்கள் அடங்கிய கிரய ஜாபிதா தேவை யுள்ளவர்கள் தங்கள் விலாசத்தைத் தெரிவித்தால் இனாமாக அனுப்பப்படும்.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
நெ. 41, வெங்கடாராமய்யர் தெரு,
ஜி. டி. சென்னை.